தலைநகர்த்

# தமிழ்ச் சங்கம்



பூவரசு

## பாரதிதாசன் நூற்றாண்டு விழா மலர்

1992

தொலைபேசி : 475225

# திராவிட முன்னேற்றக் கழகம்

தலைவர்:
**மு. கருணாநிதி**

கோபாலபுரம்
சென்னை-600 086.
நாள்: 14-10-1992

அன்புடையீர்,

இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற பெரும்புலவர்; தன்மானப் பாவலர்; தமிழ் மொழியின் வளர்ச்சிக்கும் தமிழர்களின் வளமான வாழ்வுக்கும் தமிழ் நாட்டின் மேம்பாட்டிற்கும் இலக்கியம் படைத்த புரட்சிக் கவிஞர் தேனினுமினிய செந்தமிழை உயிராய்ப் போற்றியவர்.

''செந்தமிழே நைந்து விட்டால் நைந்து போகுமென் வாழ்வு'' என்று தமிழே உயிராய் வாழ்ந்தவர்.

"தம்மால் தமிழ்நாட்டிற்குத் தினையளவு நலமேனும் கிடைக்குமென்றால் செத்தொழியும் நாள் எனக்குத் திருநாளாகும்'' என்று எண்ணி, செயல்பட்டு வாழ்ந்த செந்நாப் புலவா.

''தமிழாய்ந்த தமிழன்தான் தமிழ்நாட்டில் முதலமைச்சாய் வருதல் வேண்டும்; தமிழ்ப் பகைவன் முதலமைச்சாய்த் தமிழ்நாட்டில் வாராது தடுத்தல் வேண்டும்'' என்று எளிதாக ஏமாறும் தமிழர்க்கு எதிர்காலத்திற்காவது எச்சரிக்கையாக இருக்கட்டும் என்று முழக்கமிட்டவர்.

''ஆன என் தமிழர் ஆட்சியை நிறுவ அல்லல்கள் வரின் ஏற்பேன்; ஊனுடல் கேட்பினும் செந்தமிழ் நாட்டுக் குவப்புடன் நான் சேர்ப்பேன்'' என்று அடிமைப்பட்டுள்ள தமிழ் நெஞ்சங்களுக்கு அறிவுரை மட்டுமல்ல; உறுதிமொழி ஏற்க வேண்டும் என்று சூளுரைக் கவிதை படைத்தவர்.

அப்படிப்பட்ட புரட்சிக் கவிஞர் புகழ்பாடி நூற்றாண்டு விழாவினையொட்டி, தலைநகர்த் தமிழ்ச் சங்கம் மலர் ஒன்று வெளியிட முன்வந்துள்ளது பாராட்டிற்குரியது. அப்பணி சிறக்க வாழ்த்துகிறேன்.

பெறுநர்:
புலவர் த. சுந்தரராசன்,
பொதுச் செயலாளர்,
தலைநகர்த் தமிழ்ச் சங்கம்.

அன்புள்ள,
**(ஒம்) மு. கருணாநிதி**

# புரட்சிக் கவிஞரின் பொன்னடிகட்கு

**பேராசிரியர் க. அன்பழகன்**

தமிழ் மொழியில், தமிழரின் சிந்தனையில், குறிக்கோளில், வாழ்வில் புதுமை செய்த கவிஞர் பலரெனினும், புரட்சி இடங்கொள்ளச் செய்த பாவலர் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன்.

'உள்ளத்தில் ஊறுவது கவிதை'
'உள்ளத்தில் ஒளியுண்டாயின்
வாக்கினிலே ஒளியுண்டாகும்'
'உள்ளத்தில் கருவுண்டாயின்
உருக்கொள்ளும் கவிதை வடிவில்'
'உள்ளம் வெகுண்டெழின் கவிதை வெடிமலையாம்'
'உள்ளம் அழகினில் மூழ்கின் கவிதை எழில்வெள்ளமாம்'.

என்றெல்லாம் விளக்கப்படும் அத்தனை வகையிலும் கவிதை வண்ணம் காட்டிய வித்தகர் புரட்சிக் கவிஞர்.

அப்படிப்பட்ட கவிஞர்கள், உள்ளியது எதுவாயினும், எவ்வச் சார்புடையதாயினும், ஒன்றுக்கொன்று முரண்படுவதாயினுங் கூட-அவற்றை எல்லாம் தம் புலமைத்திறன் காட்டும் ஆர்வத்தாலோ, அவ்வச் சூழலின் தாக்கத்தில் அதுவே ஏற்புடையது என்னும் எண்ணத்தாலோ வெளியிடும் இயல்பினர். குறிப்பாகப் பிறரைக் குறித்துப் பேசும் நிலையில் தூற்றினும் தூற்றுவர்; பொருள் எதிர் பார்க்காமலே கூடப் போற்றினும் போற்றுவர்.

இந்த இயல்பினால் கவிஞர்கள் பலர் நாட்டிற்கும் மக்கள் வாழ்விற்கும் தேவையாம் குறிக்கோளை இழந்தவர்களாகக் கருதப்படும் நிலையினரா யினர்.

புரட்சிக் கவிஞர் அவர்கள் அப்படிப்பட்ட உணர்ச்சிப் பெருக்குக்கு ஆட்பட்டது, மட்டுமன்றித் தாம் கொண்ட முடிவினை ஏற்காத சிலரைக் கடிந்ததும் உண்டு. கடுஞ்சொல் கொண்டு அப்படி வெடித்துக் கிளம்பும் உணர்ச்சிக்கு அவர் ஆட்பட்டவராயினும்-தான் உணர்ந்து ஏற்ற கொள்கை; குறிக்கோள் ஆகியவற்றிலிருந்து பாடுபொருள் விலகிச் செல்ல: மாறுபட்டகொள்கையைப் போற்றிப் பாட அவர் ஒருநாளும் ஒருப்பட்டதில்லை. அலைகள் மோதினாலும், புயல் அடித்தாலும், நல்குரவு நாளும் நெருக்கினாலும் புதியதோர் உலகம் செய்வதற்கு வேண்டிய அடித்தளங்களாக அவர்கண்ட தன்மானம், இனப்பற்று, மொழிப்பற்று, பகுத்தறியும் நோக்கு, ஒப்புரிமை, உடன்பிறப்புரிமை, விடுதலை, குடியாட்சி, பெண்ணுரிமை, பொதுவுடைமை ஆகியவற்றை விட்டு விலகிச் செல்லும் எதையும்-அவர் என்றும் போற்றிப் பாடியதில்லை.

பாரதிதாசனாக அறியப்பட்டு முன்னர், இளமையில் அவர் இயற்றிய கந்தன் காவடிச் சிந்து, கதர்ப்பாட்டுப் போன்ற பாடல்களிலே அன்றி, பின்னர் அவர் இயற்றிய கவிதை, கட்டுரை, காவியம், நாடகம் எதுவாயினும் பழமையில் ஊறிவந்த மூடநம்பிக்கைகளை முறியடித்து, புதுமையின் படிகளில் முன்னேறுவதற்கான வழிகாட்டுவதாகவே உருக்கொண்டது.

இருட்டறையில் உள்ளதடா உலகம் என்று உணர்ந்த கவிஞர், புத்தொளி காணும் வழி காட்டவே, சாதி இருக்கின்ற தென்பானைச் சாடினார்; மதத்தலைவர் மருட்டுவதைக் கண்டித்தார்: ஏமாந்த காலத்தில் ஏற்றங் கொண்டோரின் அடாத செயலை இடித்துரைத்தார்.

வைதீகப் புரோகிதத்தை-குருக்களின் சுரண்டலை, எதிர்த்தார்: மதமோதுதல்களை: சாதிச் சண்டைகளை; முதலாளித்துவக் கொடுமைகளை: வகை வகையாக எதிர்த்துக் குரல் கொடுத்தார். தீண்டாமையின் கொடுமையைக் கண்டு கொதித்தார் அபலைகளாய்ப் பெண்கள் ஆக்கப்படுவதை இளம் வயதுப் பெண்ணும் விதவையானால் மறுமண உரிமை மறுக்கப்படுவதை, இளையவர்தம் காதல் உரிமை கருக்கப்படுவதை விவரித்து-அவை விளைவிக்கும் அநீதிகளை எதிர்த்துக் குமுறினார். "மனிதனுக்கு விழியே மன்பதை வாழ்வுக்கு மொழி" என்பதையும், அந்தத்தாய் மொழியாம் தமிழ்மொழி: தமிழினத்தின் உயிர்மூச்சாவதையும், அந்தமூச்சினை நிறுத்தும் முயற்சியாகப் பிறந்த பிறமொழிகளின் ஆதிக்கம் நிலைப்பதையும்—வளர்வதையும்—

புகுவதையும் திணிப்பதையும் எதிர்த்து நிற்கும் உறுதி கொண்டோர்க்கு—உயிரும் வெல்லமல்ல என்பதையும் உலகறியச் செய்தார். மொழி உணர்விழந்த உடல்களெல்லாம் உயிர் பெற்றிட வைத்தார். எமை நத்துவாய் என் எதிரிகள் கோடி இட்டழைத்தாலும் தொடேன் என்னும் தன் மானத் தணலாகச் சுடர் விட்டார்.

பேரும் புகழும் தமக்குற்றபோதும், பெருவாழ்வு தமக்குறாத நிலையினும் தமிழ் இனத்தின் வாழ்வு நிலைநிமிரவில்லையே என்பதையே வாழ்நாள் எல்லாம் எண்ணுவாராய்;எழுதுவாராய், எடுத்தியம்புவாராய் வீறுநடை போட்டார். அவரது பலதுறை உணர்விலும் மேலோங்கி நிற்பவை இனப்பற்றும் மொழிப்பற்றுமே என்பது என் எண்ணம். அவற்றின் உரிமைக்கும் வாழ்வுக்கும் தடையாகும் எவற்றையும் தூள் தூளாக்கும் மறச்சிந்தனையே அவரின் கவிதையாம் விரிவானம்.

இன்றைய கவிஞர்கள், எழுத்தாளர், சிந்தனையாளர் பலரும் அவரது கவிதையின் தாக்கத்துக்கு ஆளானவர்களே. தமிழ் மக்களின் எண்ணப்போக்கில் - முதல் ஏர் எனப் பாரதியின் கவிதை உழுது சென்றதென்றால், இரண்டாவது ஏர் ஆக - அதனினும் ஆழமாக உழுது சென்றது புரட்சிக் கவிஞரின் கவிதை என்பேன். புரட்சிக் கவிஞரின் வழிவந்த கவிஞர் பரம்பரை இன்று தமிழ் நாடெங்கும் தலைநிமிர்ந்து ஆற்றல் நடைபோடுகிறது.

புரட்சிக் கவிஞரை - எந்தநாளும் காண விரும்புவோர், அவரது 'புரட்சிக்கவி'யில் காணலாம். அவரது கற்பனை வளத்தைக் காண விழைவோர் - 'அழகின் சிரிப்பில்' காணலாம். அவரது இசைத் திறனை நுகர விரும்புவோர் 'இசையமுது' நாடலாம். அவரது நகைச்சுவைத் திறனைச் சுவைக்க நினைப்போர், 'சஞ்சீவி பர்வதத்தின் சாரலில்' தோயலாம். அவரது தமிழ் ஆக்கக் கொள்கையைத் தெளியக் கருதுவோர் அதனைத் 'தமிழியக்கத்தில்' தெளியலாம். அவலச் சுவையுடன் கலந்த எள்ளலைக் கேட்க விரும்புவோர் 'இருண்ட வீட்டில்' புகலாம். உவகையுடன் துள்ளும் இல்லற மாட்சியினைக் காண விழைவோர் 'குடும்ப விளக்கில்' படியலாம். அவரது இனம் போற்றும் உணர்வை - உள்ளங்கொள்ள விழைவோர், 'வீரத் தமிழனில்' அதனைக் கொள்ளலாம்.

அன்றந்த லங்கையினை ஆண்ட மறத்தமிழனை - அவனது புகழை, கொடையை வீரத்தை, எண்ணும்போதே "தென்றிசையைப் பார்க்கின்றேன்" என்சொல்வேன், என்றன் சிந்தையெலாம் தோள்களெல்லாம் பூரிக்குதடடா!" அவனை வாழ்த்துகின்ற தமிழர் தமிழரென்பேன்; மறந்தவரைச் சழக்கரெனச் சொல்வேன்!" என்னும் வரிகளிலேதான்- புரட்சிக் கவிஞரின் உயிரைக் காணலாம்.

ஆம்! அவரது நூற்றாண்டு விழாவினையும், அவரது நினைவு போற்றி 'மலர் அஞ்சலி' எடுக்கும் கடமையையும், தலைநகர்த் தமிழ்ச் சங்கம் மேற்கொண்டிருப்பது - காலம் கடந்ததாகத் தோன்றினும் கடமை மறவாமையாலும் தமிழர் மடமை மறையாமையாலும் என்றும் எந்நாளும் செய்தக்க செயலேயாகும்

தலைநகர்த் தமிழ்ச் சங்கத்தின் மலரில் தகுதிவாய்ந்த அறிஞர்கள் பலரின்-கருத்துமிக்க கட்டுரைகள் அணிவகுத்திருப்பது, புரட்சிக் கவிஞரின் பேராற்றலையும் - பெரும் குறிக்கோளையும் போற்றுவதைப் புலப்படுத்துகின்றன. பாவேந்தரைப் பல கோணங்களில் படம் பிடித்துள்ளனர் எனலாம்.

கவிஞரின் சிந்தனையை உள்ளங் கொண்டோம், செயலினை, மூச்சினை என்று அதற்கேற்பக் கொள்வோம் என்பதே - ஒவ்வொருவரின் உள்ளத்திலும் எழவேண்டிய கேள்வியாகும்.

வாழ்க புரட்சிக் கவிஞரின் குறிக்கோள்!
வளர்க - தலைநகர்த் தமிழ்ச் சங்கம்!

சென்னை
22-8-92

(ஒம்) க. அன்பழகன்

# தமிழ் வாழ்க!

**பெருங்கவிக்கோ வா.மு. சேதுராமன்**

அறிவுடைப் பாவ லர்க்கோ
அறிவுத்தேர் பரிதி! ஆற்றல்
நெறியுடை அறிஞர் கட்கோ
நெறிதரு அறிவின் வேந்தன்!
செறியுடைச் சான்றோர்க் கெல்லாம்
செறிவமை ஆய்வுக் கோமான்!
வெறிதமிழ் இன்ப ஊற்று!
விடியலாம் பாவேந் தன்ஆம்!

மலைஉச்சித் தென்றல் காற்று
வற்றாத அமிழ்த ஆறு!
கலைஉச்சித் தெளிவின் தோப்பு!
கட்டுக்கோ அடங்கா வேங்கை!

அலைஉச்சிக் கடற்பெ ருக்காம்!
அருந்தமிழ்ப் புரட்சிக் கேஓர்
தலைஉச்சிக் கவிஞர் நம்மின்
தண்டமிழ்ப் பாவேந் தர்தாம்!

நிலைமாறித் தமிழ்தான் போகும்
நிலைமாற்றும் இயக்கம் நல்ல
தலைநகர்த் தமிழ்ச்சங் கம்தான்!
தமிழ்ச்சுந் தரரா சன்தான்!
விலையிலாப் பணிகள் எல்லாம்
வியப்பாக்கும் வெற்றி நல்கும்!
உலைசமைத் திடும்நல் ஆக்கம்
ஓங்கிட வாழ்த்து கின்றேன்.

# வாழ்த்து!

**க. சச்சிதானந்தன்**

பாவேந்தர் பாரதிதாசன் தமிழரின் பண்பாட்டு வளர்ச்சி வரலாற்றில் தனியிடம் பெறும் புரட்சிச் சிந்தனையாளர்.

தமிழர் அடிமைத்தனத்தில் ஊறியிருந்தனர். பிறமொழி மாயைக்கு உட்பட்டிருந்தனர். தமது சுயமரியாதையை இழந்திருந்தனர்.

அக்காலத்தில், தமிழ்மை உணர்வை ஊட்டித் தமிழரைத் தமிழராக நிமிர்த்தப் பாவேந்தர் புரட்சிக் கருத்துக்களை விதைத்தார், வளர்த்தார்.

எங்குந் தமிழ், எதிலுந் தமிழ் என்ற அவரின் எழுச்சி வரிகள் தமிழர்க்குப் புத்துணர்வு ஊட்டின. அடையாள உணர்வுகளைத் தட்டியெழுப்பின.

ஈழத்தமிழரின் விடுதலைப் போராட்ட முயற்சிகட்குப் பாரதிதாசனின் ஆக்கங்கள் ஆற்றிய பங்கு அளப்பரியது. உலகில் தமிழர் எங்கு வாழ்ந்தாலும் தமது அடையாள உணர்வுகளைப் பேணப் பாவேந்தர் தனது நூல்கள் மூலம் ஊக்கமும் உற்சாகமும் இன்றும் கொடுத்து வருகிறார்.

பாவேந்தரின் கருத்துக்களுக்குச் செயல்வடிவம் கொடுக்க இடைவிடாது முயல்பவர்கள் தலைநகர்த் தமிழ்ச் சங்கத்தினர். தமிழுக்கும் தமிழருக்கும் தொய்வும் துன்பமும் ஏற்படும் பொழுதெல்லாம் தொய்வு போக்கித் துன்பம் துடைக்கும் செயற்களமாகத் தலைநகர்த் தமிழ்ச் சங்கம் உளது.

பாவேந்தர் நூற்றாண்டு விழாவை ஒட்டி 100 பக்க அளவில் தலைநகர்த் தமிழ்ச் சங்கம் வெளியிடுகின்ற மலரில் உள்ள கட்டுரைகளும் கவிதைகளும் தமிழர் வளர்ச்சிக்குரிய தெளிவான சிந்தனைக் குவியல்களைச் செந்தமிழில் தந்துள்ளன. சங்கத்தின் எதிர்காலச் செயல்திட்டங்களின் வழி இதுவே என அவை சுட்டிக் காட்டுவன. அத்திட்டங்களில் ஈடுபட ஆர்வலர்களை ஆற்றுப்படுத்துவன.

தலைநகர்த் தமிழ்ச் சங்கத்தின் நற்பணிகள் தொடர எம் உளம் நிறைந்த வாழ்த்துக்கள்.

காந்தளகம்
834, அண்ணாசாலை, சென்னை-2.

(ஒம்) க. சச்சிதானந்தன்

# நன்றியுரை

தலைநகர்த் தமிழ்ச் சங்கம் தமிழ், இன, மொழிக்குத் தொண்டாற்றும் உயரிய நோக்குடன் ஆரம்பிக்கப் பெற்றது. கடந்த பதினைந்தாண்டுகளாகத் தமிழ், இன, மொழிக்கு ஊறு நேர்ந்த போதெல்லாம், தலைநகர்த் தமிழ்ச் சங்கம் கண்டனக் குரல் எழுப்பியதோடு களம் அமைத்துப் போராடவும் செய்துள்ளது.

குறிப்பாகத் தமிழ் ஆட்சி மொழி, பயிற்று மொழிக் கொள்கையினை அரசு விரைந்து செயற்படுத்தக் கோரி, பல அறப்போராட்டங்களை நடத்தி அரசின் கவனத்தைக் கவர்ந்துள்ளது. இலங்கையில் தமிழ் ஈழப்பகுதியில் தமிழர்கள் சிங்களர்களால் படுகொலை செய்யப்பட்ட போதும்,இந்திய இராணுவம் ஈழத் தமிழர்களைப் படுகொலை செய்த போதும், தமிழ்ப் பெண்களை மானபங்கப் படுத்தியபோதும் துணிந்து நின்று குரல் கொடுத்துள்ளது

இராஜிவ் காந்தியின் கொலைக்குப்பின் தமிழ் நாட்டில் முதல் கூட்டமாகத் ''தமிழர் பாதுகாப்பு மாநாடு'' நடத்தி, தமிழ் உணர்வினை வெளிப்படுத்திய பெருமையும் இந்த அமைப்புக்கு உண்டு.

தமிழ், இன, மொழி உயர்வுக்குப் பாடுபடும் இவ்வமைப்பினைச் சீர் குலைக்கப் பலர் முயன்றும், அவர்கள் பின்னடைந்து நிற்கின்ற நிலையினையும் எண்ணிப் பார்த்திட வேண்டியுள்ளது.

அதே வேளையில் பாவேந்தர் நூற்றாண்டு மலர்ப் பணியினைத் தொடங்கி, பல தடைகளைக் கடந்து ''பாவேந்தர் புகழ்பாடும்' மலர் மலர்ந்துள்ளது.

இந்தப் பணிகளை எல்லாம் எண்ணிப்பார்க்கும் வேளையில் தலைநகர்த் தமிழ்ச் சங்கப் பணியில் தங்களை முழுமையாக ஈடுபடுத்திக் கொள்ளும் புலவர் வெற்றியழகன், புலவர் ப. சாத்தன், புலவர் முத்து எத்திராசன் ஆகியோரின் பணிக்கு நன்றி உரித்தாகுக.

மலர் மணம்பெற வாழ்த்துரை வழங்கிய கலைஞர் மு. கருணாநிதி அவர்களுக்கும்; பேராசிரியர் க. அன்பழகன் அவர்களுக்கும் நன்றி செலுத்துகிறேன்.

மேலும், கட்டுரை வழங்கி ஊக்குவித்த இராம. வீரப்பன், கலைமாச் செல்வர் எஸ், டி. காசிராசன், பேராசிரியர் சாலையார், பேராசிரியர் ச. மெய்யப்பன், திரு. க. சச்சிதானந்தன், மற்றும் மலர்க்குக் கட்டுரை, கவிதை வழங்கிய அனைவர்க்கும் நன்றி.

தமிழ்ச்சங்க நிகழ்ச்சிகளில் பங்கு பெற்றுச் சிறப்பித்து வரும், பாவலரேறு பெருஞ்சித்திரனார், உவமைக் கவிஞர் சுரதா, பேராசிரியர் பொற்கோ, பேராசிரியர் இளவரசு ஆகியோர்க்கும் நன்றி.

மலரைச் சிறப்புற அச்சிட்டு வழங்கிய கண்ணப்பா அருங்கலை அச்சக உரிமையாளர் மு. க. சுந்தரம் அவர்களுக்கும், அச்சுப் பிழைகளைத் திருத்தி உதவிய புலவர் வெற்றியழகன் அவர்களுக்கும் முகப்போவியம் தீட்டித் தந்த ஆற்றலரசு (பூவரசு) ஆகியோர்க்கும் நன்றி.

தலைநகர்த் தமிழ்ச் சங்கப் பணிகளிலும், அதன் வளர்ச்சியிலும் ஈடுபாடு கொண்ட துணை அமைப்பாளர்கள், செயற்குழு உறுப்பினர்கள், உறுப்பினர்கள் ஆகியோர்க்கும் நன்றி.

தமிழ் வளர்ச்சிக்கான போராட்டங்களில் துணை நிற்கும் தோழமை அமைப்புகளுக்கும், தமிழ் ஆர்வலர்களுக்கும் நன்றி.

உண்மையுள்ள
**த. சுந்தரராசன்**
**செயலாளர்**

# தலைநகர்த் தமிழ்ச் சங்கச் செயற்பாடுகள்

*26-11-1978* தலைநகர்த் தமிழ்ச்சங்கம் தொடக்கம். தொடங்கி வைத்தவர் : பேரா. நாரண துரைக்கண்ணன்.

*10-12-1978* எழுத்துச் சீர்திருத்த மாநாடு. தலைமை : புலவர் பண்பரசன்.

*31-12-1978* தமிழ் இலக்கியங்களில் செறிந்தது காதலா? வீரமா? பட்டிமன்றம் கலந்துகொண்டோர் : பிறப்புரிமை பண்பரசன், புலவர் வெற்றியழகன்.

*14-1-1979* பொங்கல் விழாக் கவியரங்கம்.

*28-1-1979* முதுபெரும் பாவலர் கவி கா. மு. செரீப் அவர்களுக்குப் "பாவிசைக்கோ" விருது வழங்கு விழா. கலந்துகொண்டோர் : பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரையார், கவிதா மண்டலம் வானம்பாடி, தமிழ்ப் பாநிலவு த. கோவேந்தன்.

*30-4-1979* பாவேந்தர் பிறந்தநாள் விழா.

*1-7-1979* இலக்கிய விழா. கவியரங்கம், பட்டிமன்றம். கலந்துகொண்டோர் : புலவர் தமிழ்நாவன், கவிஞர் காவனூர் வேலன், கவிஞர் அகவழகன், ஓவியப் பாவலர் வலவன், புலவர் வெற்றியழகன், புலவர் த.சுந்தரராசன்

*30-9-1979* சூளுரை விழா. மாதர்தம்மை இழிவு செய்யும் மடமையைக் கொளுத்துவோம். கவியரங்கம், கருத்தரங்கம், கலந்துகொண்டோர் வானம்பாடி, த. கோவேந்தன், புலவர் வெற்றியழகன், கவி கா. மு. செரீப், புலவர் மு. வலவன், புலவர் த. சுந்தரராசன்.

*15-10-1979* கல்லூரி மாணவர்களுக்கான கவிதைப் போட்டி.

*13-1-1980* முதலாண்டு நிறைவு விழா. கலந்துகொண்டோர் : சிலம்பொலி செல்லப்பன், புலவர் த. பெரியாண்டவன், பேரா. மெ. சுந்தரம், புலவர் மு. வலவன், புலவர் வெற்றியழகன், புலவர் த. சுந்தரராசன், கவிஞர் அகவழகன், கவிஞர் காவனூர் வேலன், புத்தனேரி சுப்பிரமணியன்.

*24-2-1980* ஈழப் பிரச்சினை குறித்து இலங்கைக் கலைக் குழுவினரின் வில்லுப் பாட்டு நிகழ்ச்சி.

*23-5-1980* பாவேந்தர் பிறந்தநாள் விழா.

*17-12-1980* திருக்குறள் ஒப்புவித்தல் போட்டி.

*28-12-1980* அந்தமான் தமிழறிஞர்களுக்கு வரவேற்பு.

*29-12-1980* மொரியசுத் தமிழர்களுக்கு வரவேற்பு.

*12-1-1981* மலேசியத் தமிழறிஞர்களுக்கு வரவேற்பு.

*18-1-1981* தேவநேயப் பாவாணர் அவர்களுக்கு இரங்கல் கூட்டம். கலந்துகொண்டோர் : பேரா. இளவரசு, பேரா. வளனரசு, பேரா. தமிழ்க் குடிமகன், புலவர் வெற்றியழகன், புலவர் த. சுந்தரராசன்.

*14-2-1981* இரண்டாம் ஆண்டு நிறைவு விழா. க. இராசாராம், புலவர் புலமைப் பித்தன், அவ்வை நடராசன், த பெரியாண்டவன்.

*11-4-1981* மலேசிய முனிவர் இராமதாசு அவர்களுக்குப் பாராட்டு விழா.

*21-6-1981* இலங்கை அரசின் இனவெறிக் கொள்கையை எதிர்த்து ஆளுநரின் மாளிகைக்குப் பேரணி. தலைமை : பேரா. இளவரசு, அரணமுறுவல், பேரா. திருமாவளவன், புலவர் த. சுந்தரராசன்.

*16-11-1981* பாரதியார் நூற்றாண்டு விழா.

*25-4-1982* முதல் *29-4-1982* வரை ஐந்து நாள்கள், பாவேந்தர் பிறந்த நாள் விழா.

*4-6-1982* சென்னை வானொலியை "ஆகாச வாணி" என்பதைக் கண்டித்துக் கூட்டம்.

*11-7-1982* திராவிட இயக்க ஆய்வுக் கருத்தரங்கும், கலைஞரின் பிறந்தநாள் விழாவும். கலந்துகொண்டோர்: கே.ஏ. மதியழகன், மயிலை க திருநாவுக்கரசு, புலவர் த. சுந்தரராசன், கவிஞர் அகவழகன்.

*23-8-1982* ஆங்கில மழலையர் பள்ளிகளைத் தடைசெய்யக் கோரும் மாநாடு.

*11-9-1982* இந்தி எதிர்ப்பு மாநாடு. தலைமை : பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரையார், M. K. T. சுப்பிரமணியம், சா. கணேசன் புலவர் த சுந்தரராசன், சாமி சண்முகம்.

*13-10-1982* தியாகி சங்கரலிங்கனார் நினைவு விழாவும், படத்திறப்பு விழாவும். கலந்து கொண்டோர் : கே. ஏ. மதியழகன், தி.சு. கிள்ளி வளவன்.

*29-4-1983* பாவேந்தர் பிறந்தநாள் விழா.

*27, 28-10-1983* தமிழ் ஈழ விடுதலை ஆதரவு மாநாடு. பழ. நெடுமாறன், ஈழவேந்தன், தி. சு கிள்ளிவளவன், அரு. கோபாலன், புலவர் த. சுந்தரராசன்.

*21-10-1984* இந்தி எதிர்ப்புக் கருத்தரங்கம். கலந்துகொண்டோர் : செ. கந்தப்பன், பேரா. இரா. சேது, மிசா. கணேசன், மயிலை க. திருநாவுக்கரசு, திருவள்ளூர் பச்சையப்பன்.

*29-4-1985* புலவர் த. சுந்தரராசனின் "இந்தி எதிர்ப்பு வரலாறு" நூல் வெளியீட்டு விழா. கலந்து கொண்டோர் : கா. அப்பாத்துரையார், பழ நெடுமாறன், புலவர் ப. சாத்தன், புலவர் வெற்றியழகன், தி.சு. கிள்ளிவளவன்.

*13-4-1986* தொலைக்காட்சிப் பெட்டி உடைப்புப் போராட்ட விளக்கக் கூட்டம். கலந்துகொண்டோர் : கி.ஆ.பெ விசுவநாதன் கா. அப்பாத்துரையார்.

*14-4-1986* சென்னைத் தொலைக்காட்சியின் இரண்டாவது அலைவரிசையை நிறுவக் கோரியும், அதனை மாநில அரசிடமே ஒப்படைக்கக் கோரியும், தொலைக்காட்சிப் பெட்டி உடைப்புப் போராட்டம். பங்கு பெற்றோர்: பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரையார், அரண முறுவல், புலவர் த. சுந்தரராசன், புலவர் ப. சாத்தன், புலவர் வெற்றியழகன், சாமி சண்முகம்.

*29-4-'986* பாவேந்தர் பிறந்தநாள்விழா

*12-5-1986* புதிய கல்விக் கொள்கை எதிர்ப்பு மாநாடு. பங்கு பெற்றோர் : செ. கந்தப்பன், எல் கணேசன், இ மறைமலை.

*29-4-1987, 30-4-1987* புரட்சிக் கவிஞர் பிறந்தநாள் விழாவும், தலைநகர்த் தமிழ்ச் சங்க ஒன்பதாவது ஆண்டு விழாவும். பங்கு பெற்றோர் : செ. கந்தப்பன், க. த. திருநாவுக்கரசு, பேரா.இரா. சேது, புலவர் வெற்றியழகன், புலவர் ப.சாத்தன், புலவர் முத்து எத்திராசன், புலவர் த. சுந்தரராசன், புலவர் வெ.பெருமாள்சாமி, காவனூர்வேலன்.

*19-10-1987* ஈழத்துக்கு இந்திய இராணுவத்தை அனுப்பியமைக்குக் கண்டனக்கூட்டம். கலந்துகொண்டோர்: சாலை இளந்திரையன், சாலினி இளந்திரையன், புலவர் வெற்றியழகன், புலவர் த. சுந்தரராசன், புலவர் ப. சாத்தன், புலவர் முத்து எத்திராசன், முனைவர் அரு. கோபாலன்.

*5-11-1987* ஈழத்தில் இந்திய இராணுவ நடவடிக்கையைக் கண்டித்துக் குறளகம் முன்பு ஆர்ப்பாட்டம். தலைமை : புலவர் த. சுந்தரராசன்.

*24-1-1988* சுதந்திரத்தில் ஒரு கரும்புள்ளி கவியரங்கம், கருத்தரங்கம். கவியரங்கத் தலைமை: புலவர் வெற்றியழகன், கருத்தரங்கத் தலைமை புலவர் த சுந்தரராசன். கலந்துகொண்டோர்: இரா. அகவழகன், முருகுவண்ணன், திருவள்ளூர் பச்சையப்பன், மயிலை க. திருநாவுக்கரசு.

*28-2-1988* புலிகளைப் போற்றுவோம். கவியரங்கம், கருத்தரங்கம். கலந்துகொண்டோர்: பேரா. இரா. சேது, அரு. கோபாலன், புலவர் வெற்றியழகன், புலவர் த. சுந்தரராசன்.

*29-4-1988* தலைநகர்த் தமிழ்ச் சங்கப் பத்தாவது ஆண்டு விழாவும், பாவேந்தர்

பிறந்தநாள் விழாவும்-மலர் வெளியீடும். பங்கு பெற்றோர்: பேரா. நாரண துரைக்கண்ணன், பேரா. ந. சஞ்சீவி, புலவர் வெற்றியழகன், புலவர் த. சுந்தரராசன்.

*22-10-1988* பேரா ந. சஞ்சீவி அவர்களுக்கு இரங்கல் கூட்டம். கையறு நிலைப் பாவரங்கம். தலைமை: கவியரசு பொன்னிவளவன், பங்கேற்றோர்: புலவர் சோ. தேவராசன், புலவர் வெற்றியழகன், கவிஞர் காவனூர் வேலன், அரு. கோபாலன், திருவள்ளூர் பச்சையப்பன்.

*12-12-1988* தமிழ் ஆட்சிமொழிச் சட்டத்தை விரைவுபடுத்தக் கோரி, உண்ணா விரதப்போராட்டம் சென்னை மெரினா கடற்கரைப் பாரதிசிலை அருகில். தலைமை: பன்மொழிப்புலவர் கா. அப்பாத்துரையார், பங்கு பெற்றோர்: பேரா. நாரண துரைக்கண்ணன், முனைவர் தமிழ்க்குடிமகன், பேரா. இரா. இளவரசு. முனைவர் பொற்கோ, பேரா. இரா சேது, புலவர் வெற்றியழகன், புலவர் கோ. தேவராசன், புலவர் முத்து எத்திராசன், ந அரணமுறுவல். கவிஞர் காவனூர் வேலன், நாஞ்சில் மைதீன், கவிஞர் இரா. அகவழகன், திருவள்ளூர் பச்சையப்பன், கண்ணுதல், இரா. வையத்தரசு, இரா. பாலகிருட்டினன், புலவர் காவிரிச்செல்வன், காந்தளகம் க. சச்சிதானந்தன், வழக்கறிஞர் முனியப்பன், மாணிக்க சண்முகன். புலவர் த. சுந்தரராசன்

*8-4-1989* தமிழ் வழிக்கல்வி மாநாடு. தலைமை: மூதறிஞர் வ. சுப. மாணிக்கனார், கலந்துகொண்டோர்: பன்மொழிப் புலவர் அப்பாத்துரையார், பேரா நாரண துரைக்கண்ணன், முனைவர் க. த திருநாவுக்கரசு, முனைவர் மு தமிழ்க்குடிமகன், முனைவர் பொற்கோ, முனைவர் இரா. இளவரசு, முனைவர் இரா. சேது, கவியரசு பொன்னிவளவன், பழ கருப்பையா, குடந்தை வீரா. இராசகோபாலன், புலவர் வெற்றியழகன், புலவர் ப. சாத்தன், புலவர் த. சுந்தரராசன், புலவர் முத்து எத்திராசன், புலவர் கோ. தேவராசன், நாஞ்சில் மைதீன், காவனூர் வேலன், மாணிக்க சண்முகன், திருவள்ளூர் பச்சையப்பன். புலவர் த. சுந்தரராசன் எழுதிய "தமிழ்வழிக்கல்வி" நூலை வ. சுப. மாணிக்கனார் வெளியிடப் பேரா. ப. இராமன் பெற்றுக்கொண்டார்.

*5-5-1989* மூதறிஞர் வ. சுப. மாணிக்கனார் அவர்களுக்கு இரங்கல் கூட்டம். தலைமை: புலவர் ப. சாத்தன், பங்கு பெற்றோர்: முனைவர் பொற்கோ. முனைவர் இரா. இளவரசு, புலவர் வெற்றியழகன், புலவர் த. சுந்தரராசன்.

*18-5-89* 'வெற்றியழகன் கவிதைகள்' நூல் வெளியீட்டுவிழா. தலைமை: பேரா குடந்தை வீரா இராசகோபாலன். நூலை வெளியிட்டவர்: தமிழகக் கல்வி அமைச்சர் பேராசிரியர் க. அன்பழகன், கலந்துகொண்டோர்: கவியரசு பொன்னிவளவன், அவ்வை நடராசன், பதிப்பகச்செம்மல் க கணபதி, புலவர் த சுந்தரராசன், புலவர் ப சாத்தன், பேரா. பொற்கோ பேரா. இளவரசு நெல்லிக்குப்பம் சபாபதி.

*17-6-1989* ஈழத் தமிழறிஞர் முனைவர் கா. பொ. இரத்தினம் அவர்களின் "உரை வண்ணம்" நூல் வெளியீட்டு விழா. வெளியிட்டவர்: தமிழகக்கல்வி அமைச்சர் பேராசிரியர் க அன்பழகன், வரவேற்புரை: க சச்சிதானந்தன், கலந்துகொண்டவர்கள்: வே. செ. குகநாதன், அவ்வை. நடராசன், வன்னிய அடிகள் புலவர் வெற்றியழகன், புலவர் த. சுந்தரராசன், புலவர் ப. சாத்தன், முனைவர் பொற்கோ, முனைவர் இரா. இளவரசு, புலவர் முத்து எத்திராசன், எஸ். நல்ல பெருமாள்.

*21-6-1989* மூவர் நினைவுநாள் விழா. 'மூவர் வரலாறு' நூல் வெளியீடு. பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரையாரின் படத்திறப்பு முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதன்; வ. சுப. மாணிக்கனார் படத்திறப்பு இராம. வீரப்பன், க. த. திருநாவுக்கரசு படத்திறப்பு: பாவலரேறு பெருஞ்சித்திரனார். பங்கேற்றோர்: நாரண துரைக்கண்ணன், உவமைக் கவிஞர் சுரதா, கவியரசு பொன்னிவளவன், புலவர் வெற்றியழகன், புலவர் ப. சாத்தன், புலவர் த. சுந்தரராசன், முனைவர் இரா. இளவரசு, முனைவர் பொற்கோ, மா. சு. சம்பந்தன், புலவர் முத்து எத்திராசன், முகம் மாமணி.

26-8-1989 பாவேந்தர் நூற்றாண்டுத் தொடர் நிகழ்ச்சி - 1. ஆய்வுரை. பேரா. முனைவர் பொற்கோ, முனைவர் இரா. சேது, முனைவர் இரா. இளவரசு, புலவர் வெற்றி யழகன், முனைவர் பார்த்தசாரதி.

16-9-1989 பாவேந்தர் நூற்றாண்டுத் தொடர் நிகழ்ச்சி-2. முனைவர் ம. இராசேந் திரன், புலவர் தா. முத்துமணவாளன், திருவள் ளூர் பச்சையப்பன்.

15-10-1989 பாவேந்தர் நூற்றாண்டுத் தொடர் நிகழ்ச்சி-3. முனைவர் அரு. கோபாலன், புலவர் ப. சாத்தன், புலவர் த. சுந்தரராசன்.

11-11-1989 பாவேந்தர் நூற்றாண்டுத் தொடர் நிகழ்ச்சி-4. முனைவர் சாலை இளந் திரையன், முனைவர் சாலினி இளந்திரையன், முனைவர் பார்த்தசாரதி, புலவர் முத்து எத்திராசன்.

20-11-1989 ஆறுமுக நாவலர் நினைவு விழா. முனைவர் இரா. இளவரசு, முனைவர் சு. வள்ளியம்மாள்.

9-12-1989 பாவேந்தர் நூற்றாண்டுத் தொடர் நிகழ்ச்சி-5. பேரா. இரா. சேது, நாஞ்சில் மைதீன், புலவர் முத்து மணவாளன்.

13-1-1990 பாவேந்தர் நூற்றாண்டுத் தொடர் நிகழ்ச்சி-6. முனைவர் சிலம்பொலி செல்லப்பன், பேரா. சுப. வீரபாண்டியன், பேரா. முனைவர் த. வெ. மணிமாறன், முனைவர் இரத்தினசபாபதி, முனைவர் ச. பார்த்தசாரதி, புலவர் த. சுந்தரராசன்.

பெயர்ப்பலகை தமிழ்ப்படுத்தும் பேரணி. கலந்துகொண்டோர்: முனைவர் தமிழ்க்குடி மகன், உவமைக் கவிஞர் சுரதா, பேரா. பொற் கோ, பேரா. இரா. இளவரசு, முனைவர் சிலம் பொலி செல்லப்பன் முனைவர் ச. மெய்யப் பன், வேலா அரசமாணிக்கம், முனைவர் இரா. சேது, பெருங்கவிக்கோ வா மு. சேதுரா மன், பொன்னடியான், கவியரசு பொன்னி வளவன், புலவர் வெற்றியழகன், புலவர் த.சுந் தரராசன், புலவர் ப. சாத்தன், தமிழ்ச் செல்வன், புலவர் கோ. தேவராசன், ந. அரண முறுவல், புலவர் முத்து எத்திராசன், பாவலர் இளஞ்சித்திரன்.

10-2-1990 பாவேந்தர் நூற்றாண்டுத் தொடர் நிகழ்ச்சி-7. பொன்னடியான், க.சச்சி தானந்தன், புலவர் ப. சாத்தன், மருத்துவர் ந. பஞ்சாட்சரம்.

15-2-1990 மறைமலையடிகள் பெயருக்கு எதிர்ப்பா? கண்டனக் கூட்டம். கி. ஆ. பெ. விசுவநாதன், பாவலரேறுபெருஞ்சித்திரனார், பழ. கருப்பையா, முனைவர் இரா. இளவரசு, பொன்னடியான், பெருங்கவிக்கோ வா.மு. சேதுராமன், புலவர் த. சுந்தரராசன், புலவர் வெற்றியழகன்.

17-2-1990 ஆட்சிமொழிச் சட்டத்தினை விரைவுபடுத்தக் கோரி முழக்கப் போராட் டம். தலைமை: உவமைக் கவிஞர் சுரதா, பழ. கருப்பையா, பேரா. இரா. சேது, கவியரசு பொன்னிவளவன், புலவர் கி.த. பச்சையப்பன், முனைவர் அரு. கோபாலன், புலவர் காவிரிச் செல்வன், புலவர் ப. சாத்தன், முனைவர் பார்த்தசாரதி, புலவர் த. சுந்தரராசன், புலவர் வெற்றியழகன், புலவர் முத்து எத்தி ராசன், திருவள்ளூர் பச்சையப்பன்.

10-3-1990 பாவேந்தர் நூற்றாண்டுத் தொடர் நிகழ்ச்சி-8. எஸ் டி. காசிராசன், சாமி பழநியப்பன், புலவர் வெற்றியழகன், மா.சு. சம்பந்தன், புலவர் முத்து மணவாளன், புலவர் ப. சாத்தன்.

27-3-1990 தொலைக் காட்சியில் பிற மொழித் திணிப்புக் கண்டனப் பேரணி. பாவலரேறு பெருஞ்சித்திரனார் பேரா. இரா. இளவரசு, பெருங்கவிக்கோ வா. மு. சேது ராமன், புலவர் கி. த. பச்சையப்பன், மருத் துவர் ந. பஞ்சாட்சரம், புலவர் முத்து எத்தி ராசன், செகதீசன், புலவர் ப. சாத்தன், ந. அரண முறுவல், புலவர் வெற்றியழகன், புலவர் த. சுந்தரராசன், தமிழ்ச்செல்வன்.

14-4-1990 பாவேந்தர் நூற்றாண்டுத் தொடர் நிகழ்ச்சி-9. பேரா. ந.இராமநாதன், பேரா. பொற்கோ, புலவர் முத்து எத்திராசன், புலவர் காவிரிச் செல்வன், மா. தமிழ்ச் செல் வன்.

25-4-1990 மூதறிஞர் செம்மல் வ. சுப. மாணிக்கனார் முதலாண்டு நினைவுக் கூட்டம் பாவலரேறு பெருஞ்சித்திரனார், முனைவர் இரா. இளவரசு, பெருங்கவிக்கோ வா. மு. சேதுராமன், ந. அரணமுறுவல், வ சுப. மா. தொல்காப்பியன், இரா. முத்துக் குமாரசாமி, புலவர் ப. சாத்தன், புலவர் வெற்றியழகன், புலவர் த. சுந்தரராசன், புலவர் முத்து மணவாளன்.

5-5-1990 பாவேந்தர் நூற்றாண்டுத் தொடர் நிகழ்ச்சி-10. பேரா. இ. மறைமலை, புலவர் வெற்றியழகன், திருவள்ளூர் பச்சை யப்பன், சண்முகக்கனி.

14-7-1990 ஈழத்தமிழர் படுகொலைக்குக் கண்டனக் கூட்டம். தலைமை: புலவர் த. சுந் தரராசன், சிறப்புரை: கவிஞர் இன்குலாப், சுப. வீரபாண்டியன். ஈழவேந்தன், முனைவர் அரு. கோபாலன், புலவர் வெற்றியழகன், மா. சு. சம்பந்தன், புலவர் ப. சாத்தன், மாணிக்க சண்முகன், நாஞ்சில் மைதீன்.

25-7-1990 தமிழக அரசின் பாவேந்தர் விருது பெற்ற புலவர் வெற்றியழகன் அவர் களுக்குப் பாராட்டு விழா. தலைமை: முத் தமிழ்ச்செல்வர் புரட்சிதாசன். பாராட்டி னோர்: மானமிகு கி. வீரமணி, பேரா. இள வரசு, குடந்தை வீரா, இராச கோபாலன், நாஞ்சில் மைதீன், பெருங்கவிக்கோ வா. மு. சேதுராமன், முனைவர் கு. சிவஞானம், வாச வன், அரு. கோபாலன், ந. பஞ்சாட்சரம், புலவர் ப. சாத்தன். புலவர் த சுந்தரராசன், மாணிக்க சண்முகன், புலவர் கோ. தேவ ராசன், புலவர் முத்து எத்திராசன், புலவர் காவிரிச்செல்வன், கவிஞர் காவனூர் வேலன்.

11-6-1990 பாவேந்தர் நூற்றாண்டுத் தொடர் நிகழ்ச்சி-11

11-8-90 பாவேந்தர் நூற்றாண்டுத் தொடர் நிகழ்ச்சி-12. புலவர் தமிழ்ப்பித்தன், புலவர் முத்து மணவாளன், புலவர் வெற்றியழகன், திருவள்ளூர் பச்சையப்பன்.

23-8-1990 சிங்கள அரசு தமிழர்கள் மீது தாக்குதலை உடனடியாக நிறுத்த வேண்டி ஈழத்தமிழர்களுடன் உண்ணா நோன்பு.பாவல ரேறு பெருஞ்சித்திரனார், பழ. கருப்பையா, பெருங்கவிக்கோ வா. மு. சேதுராமன், புலவர் த. சுந்தரராசன், புலவர் வெற்றியழகன், புலவர் ப. சாத்தன்.

8-9-1990 பாவேந்தர் நூற்றாண்டுத் தொடர் நிகழ்ச்சி-14. எஸ். டி காசிராசன், பேரா. இரா. சேது, புலவர் த சுந்தரராசன், புலவர் ப. சாத்தன்.

10-11-1990 பாவேந்தர் நூற்றாண்டுத் தொடர் நிகழ்ச்சி-15. வேலூர் ம.நாராயணன் கழிஞ்சூர் கோதண்டம், வாழியூர் இராச வேலன், மா. தமிழ்ச்செல்வன், திருவள்ளூர் பச்சையப்பன்.

7-12-1990 ஆறுமுக நாவலர் விழா, நீதிபதி வைகுந்தவாசன், செ யோகநாதன், சாரதா நம்பி ஆரூரன், புலவர் த. சுந்தர ராசன், புலவர் வெற்றியழகன், கு. இராசேந் திரன்.

8-12-1990 பாவேந்தர் நூற்றாண்டுத் தொடர் நிகழ்ச்சி-16. புலவர் புலமைப்பித்தன், புலவர் ப. சாத்தன், பேரா. இரா. இளவரசு, திருவள்ளூர் பச்சையப்பன்.

12-1-1991 பாவேந்தர் நூற்றாணடுத் தொடர் நிகழ்ச்சி-17, கூ.வ. எழிலரசு, க.இ. கந்தசாமி (தமிழவேள்).

10-2-1991 பாட்டாளி பழநியப்பனின் "அன்னையின் புன்னகை" நூல் வெளியீட்டு விழா. சி. என். ஏ. பரிமளம், சா. கணேசன், டாக்டர் சாமி சண்முகம், சக்திதாசன், புலவர் வெற்றியழகன், புலவர் த. சுந்தரராசன், கவிஞர் கானவன்.

24-4-1991 மூதறிஞர் செம்மல் வ. சுப. மாணிக்கனார் நினைவுப்பரிசு வழங்கு விழா. பேரா. மெய்யப்பன், பேரா. இரா. சேது, முனைவர் இரா. இளவரசு, பெருங்கவிக்கோ வா.மு. சேதுராமன், புலவர் த. சுந்தரராசன், புலவர் வெற்றியழகன், புலவர் ப. சாத்தன், வ. சுப. மா. தொல்காப்பியன், திருவள்ளூர் பச்சையப்பன்.

29-4-1991 பாவேந்தர் நூற்றாண்டு விழாப் பேரணி. பெருங்கவிக்கோ வா.மு.

சேதுராமன், புலவர் வெற்றியழகன், புலவர் த. சுந்தரராசன், கவிக்கொண்டல் செங்குட்டுவன், ந. அரணமுறுவல், கவிஞர் காவனூர் வேலன், ப. சாத்தன், புலவர் முத்து எத்திராசன், புலவர் கோ. தேவராசன்.

*6-6-1991* புலவர் ப. சாத்தன் அவர்தம் மகன் மு. அருளானந்தன் மறைவு இரங்கல் கூட்டம் பெருங்கவிக்கோ வா. மு. சேதுராமன், சக்திதாசன், மாவீரன் எத்திராசன், புலவர் வெற்றியழகன், புலவர் முத்து எத்திராசன், புலவர் ஐ சுப்பிரமணியன், புலவர் த. சுந்தரராசன், புலவர் வேதாசலம், மா. தமிழ்ச்செல்வன்.

*6-7-1991* கவி கா மு. செரீப் அவர்களின் கவிதை நூல் வெளியீட்டு விழா. டாக்டர் குமரேசன், கலைமாமணி ஜி. உமாபதி, பெருங்கவிக்கோ வா.மு. சேதுராமன், முனைவர் இரா. இளவரசு, புலவர் வெற்றியழகன், புலவர் த சுந்தரராசன்.

*7-9-1991* பெங்களூரில் திருவள்ளுவர் சிலை அமைப்பு எதிர்ப்புக்குக் கண்டன ஆர்ப்பாட்டம். தலைமை: உவமைக் கவிஞர் சுரதா, முனைவர் மு. தமிழ்க்குடிமகன். முனைவர் சாலை இளந்திரையன், முனைவர் சாலினி இளந்திரையன், முனைவர் அரு. கோபாலன், புலவர் ப. சாத்தன், புலவர் கோ. தேவராசன். புலவர் வெற்றியழகன், புலவர் த. சுந்தரராசன், கண்ணுதல், மா. தமிழ்ச்செல்வன், கவிஞர் நெல்லை இராமச்சந்திரன்.

*8-9-1991* சென்னை மாநகரையே உலுக்கிய தமிழர் பாதுகாப்பு மாநாடு. பாவலரேறு பெருஞ்சித்திரனார், முனைவர் சாலினி இளந்திரையன், முனைவர் சாலை இளந்திரையன் செல்வி அருண்மொழி, புலவர் த. சுந்தரராசன், புலவர் வெற்றியழகன், கவிஞர் நெல்லை இராமச்சந்திரன்.

*5-10-1991* வள்ளுவர் சிலை வைக்க எதிர்க்கும் கன்னட வெறியர்களைக் கண்டித்து வளளுவர் கோட்டம் எதிரே ஆர்ப்பாட்டம். முனைவர் சாலை இளந்திரையன், முனைவர் சாலினி இளந்திரையன், உவமைக் கவிஞர் சுரதா, புலவர் கி த. பச்சையப்பன், பேரா. சுப. வீரபாண்டியன், பெருங்கவிக்கோ வா.மு. சேதுராமன், முனைவர் மா. நன்னன், முனைவர் அரு. கோபாலன்; புலவர் ப. சாத்தன், புலவர் த.சுந்தரராசன், கவிஞர் நெல்லை இராமச்சந்திரன், புலவர் முத்து எத்திராசன், புலவர் கோ. தேவராசன், ந. அரணமுறுவல், மருத்துவர் பஞ்சாட்சரம், புலவர் காவிரிச் செல்வன்.

*4-1-1992* கருநாடகத் தமிழர் படுகொலையைக் கண்டித்து உண்ணா நோன்பு. உவமைக்கவிஞர் சுரதா, சிலம்பொலி செல்லப்பன், முனைவர் சாலை இளந்திரையன், முனைவர் சாலினி இளந்திரையன், பெருங்கவிக்கோ வா. மு. சேதுராமன், புலவர் த. சுந்தரராசன், புலவர் வெற்றியழகன், புலவர் ப. சாத்தன், கவிஞர் நெல்லை இராமச்சந்திரன், இயக்குநர் வெ.செ. குகநாதன், பேரா. சுப. வீரபாண்டியன், புலவர் கோ. தேவராசன் இரா மதிவாணன், திருமதி எஸ். பி. சற்குணம்.

*25-4-1992* மூதறிஞர் செம்மல் வ. சுப. மாணிக்கனார் நினைவுப் பரிசு வழங்கு விழா. சிலம்பொலி செல்லப்பனார், முனைவர் இரா. சேது, உவமைக் கவிஞர் சுரதா, முனைவர் இரா. இளவரசு, புலவர் வெற்றியழகன், புலவர் ப சாத்தன், நெல்லை இராமச்சந்திரன் புலவர் த. சுந்தரராசன்.

*17-5-92* தமிழர் கல்விப் பாதுகாப்பு மாநாடு. நவோதயா எதிர்ப்பு அரங்கம்: புலவர் கி.த. பச்சையப்பன், புலவர் கோ. தேவராசன், பாவலரேறு பெருஞ்சித்திரனார், முனைவர் சாலினி இளந்திரையன், விடுதலை, மா.பொழிலன், நெல்லை இராமச்சந்திரன், வேதாகம எதிர்ப்பு, புலவர் த. சுந்தரராசன், புலவர் ப. சாத்தன், முனைவர் சாலை இளந்திரையன், வழக்கறிஞர் கோவி இராமலிங்கம், புலவர் முத்து எத்திராசன், ஈழமாணவர் கல்வி அரங்கம்: ந. அரணமுறுவல், பழ. நெடுமாறன், திருச்சி பெ மணியரசன், தளித் எழில்மலை, முனைவர் அரு. கோபாலன், வாலாசா வல்லவன்.

7-7-1992 சி. பி. எஸ். இ. மதிப்பெண் ஊழல் கண்டனக்கூட்டம். பெருங்கவிக்கோ வா. மு. சேதுராமன், புலவர் த. சுந்தரராசன், நீதியரசர் வேணுகோபால், முனைவர் சாலை இளந்திரையன், முனைவர் இரா. இளவரசு, புலவர் ப. சாத்தன், புலவர் மி. சா. நடேசன், புலவர் வெற்றியழகன், முனைவர் அரு. கோபாலன்.

19-7-1992 வேலா அரசமாணிக்கம் முதலாண்டு நினைவுநாள்: உவமைக் கவிஞர் சுரதா, பெருங்கவிக்கோ வா. மு. சேதுராமன், முனைவர் இரா. இளவரசு, முனைவர் சாலை இளந்திரையன், முனைவர் பொற்கோ, புலவர் த. சுந்தரராசன், புலவர் வெற்றியழகன், கவிஞர் நெல்லை இராமச்சந்திரன்.

26-9-1992 புலவர் ப. சாத்தன் அவர்களுக்குப் பாராட்டு விழா: தலைமை: புலவர் வெற்றியழகன், கலந்துகொண்டோர்: எஸ் டி. காசிராசன், உவமைக்கவிஞர் சுரதா, பேராாசிரியர் சாலையார், பேராசிரியர் சாலினியார், முனைவர் இராசதேவன், புலவர் த. சுந்தரராசன், முனைவர் அரு. கோபாலன்.

இத்துடன் பல்வேறு அமைப்புகளின் செயற்பாட்டுடன் சேர்ந்து பணியாற்றுதல்

## தலைநகர்த் தமிழ்ச்சங்கத்தின் நோக்கங்கள்

1. தமிழ், இன, மொழி இவற்றின் மேம்பாட்டிற்காக உழைத்தல்.

2. தமிழ்ச் சான்றோர்களைப் போற்றுதலும், தமிழ்ப்படைப்பாளர்களை ஊக்குவித்தலும்

3. தமிழ்நாட்டின் அனைத்து நிலைகளிலும் தமிழே பயிற்று மொழியாகவும் ஆட்சி மொழியாகவும் அமைந்திடப் பாடுபடுதல்.

4. தமிழ் நாட்டிலுள்ள பெயர்ப் பலகைகள், அனைத்திலும் தமிழ்மொழி முதன்மை இடம் பெற வகை செய்யும் அரசாணையினை நடைமுறைப்படுத்தப் பாடுபடுதல்.

5. இந்தி, ஆங்கிலம் போன்ற மொழிகளைத் தமிழ்மீது திணிப்பதைத் தடுக்கப் பாடுபடுதல்.

6. உலகத் தமிழ் மக்களுக்கு ஏற்படும் இடையூறுகளை நீக்கப் பாடுபடுதல்.

# பாவேந்தரும் திரைப்படமும்

**இராம. வீரப்பன்**

தமிழ் இலக்கிய வரலாற்றில் தமக்கென்று ஒரு தனித்த இடத்தை-தலைமையான இடத்தைப் பெற்று விளங்குபவர் இன்று மன்பதை போற்ற நூற்றாண்டு விழாக் கண்டிருக்கும் நம் மாபெரும் கவிஞர் புரட்சிக் கவிஞர் பாவேந்தர் பாரதிதாசனார் ஆவார்.

புரட்சிக் கவிஞர் என்றால் அது நேற்றும், இன்றும், நாளையும் என்றும் நம் பாவேந்தர் பாரதிதாசனார் ஒருவரையே குறித்திடும் வகையில் நம் சமுதாயத்தில் இடம் பெற்று விட்ட தீய பழக்க வழக்கங்களை - மூடக் கருத்துகளைக் கடிந்துபாடி, புத்துணர்ச்சியைப் பரப்பிய விழுமிய புரட்சியாளராக அவர் வீறு பெற்று விளங்குகிறார்.

பாவேந்தராம் புரட்சிக் கவிஞர் பைந் தமிழில் தொடாத துறைகள் ஒன்றுமில்லை. அவர் தாம் தொட்ட துறைகளை அழகுபடுத் தாமல் விட்டதுமில்லை. தம் காலத்தில் வளர்ந்து வந்த திரைப்படத்துறையின் மூல மாகப் புதியதோர் அறிவுலகம் காண அவர் விழைந்த விழைவும் ஆற்றிய அரும்பணிகளும் மகத்தானவை.

திரைப்படங்கள் வாயிலாகவே நம் தமிழர் வாழ்வை மிக விரைந்து சீர்படுத்தி அமைக்க முடியும் என்றும் அவர் உறுதியாக நம்பினார். ஐரோப்பிய நாட்டில் முதன் முதலாகத் திரைப்படம் எனும் விஞ்ஞான விந்தை உரு வானதைத் தாம் அறிந்து கொண்டபோது, ஒளியுருவப்படம் என்னும் சினிமா என்று என் நாட்டிற்கு வரும் என்பதாக அவர் கனவு பல கண்டதாகவும் கவிதை வடித்திருக்கிறார்.

> ''உருவினையும் ஒளியினையும் ஒன்றாகச்
> சேர்த்தே-எனத் தொடங்கி
>
> எதிர் வைக்கும் நாள் எந்நாள் என்றுபல
> நினைத்தேன்'' என்று முடித்து

அவர் பாடியுள்ள கவிதை தமிழ் நாட்டுக்குத் திரைப்படம் என்று வரும் என்று அவர் கொண்டிருந்த ஆரம்ப கால ஏக்கத்தைப் புலப்படுத்துகிறது.

பாவேந்தர் விருப்பப்படியே தமிழ் நாட் டுக்குத் திரைப்படம் வந்துற்றது; அது மட்டு மன்று தமிழ் மக்களுமே கூட திரைப்படங் களைத் தயாரிக்க ஆரம்பித்து நூற்றுக்கணக் கில், ஆயிரக்கணக்கில் படங்களைத் தயாரித் துச் சாதனை புரிந்தனர். ஆரம்ப காலத் திரைப்படங்கள் புரட்சிக் கவிஞர் கனவு கண்ட வாறு தமிழகத்தைத் திருத்தி அமைக்கும் தர முடைய படங்களாக உருவாகவில்லை. வீழ்ந்து கிடக்கும் தமிழ்ச் சமுதாயத்தை மேம் படுத்தும் சீர்திருத்தக் கருத்துகளோடு, தமிழர் தம் உயர்ந்த பண்பாட்டை, கலைப் பெரு மையை, நாகரிகச் சிறப்பை உணர்த்துவதாக ஆரம்ப காலத்தில் தமிழ்ப்படங்கள் உருவாக் கப்படவில்லை என்ற தம் வேதனையையும் பாவேந்தர், ''தமிழ்நாட்டில் சினிமா'' எனும் தலைப்பிட்டு

> ''என் தமிழர் படமெடுக்க ஆரம்பஞ் செய்தார்
> -என்று தொடங்கி
>
> படமெடுத்தாடும். தமிழர் பங்கமெல்லாம்
> போமே''-என்று பாடி முடித்துள்ளார்.

1940ஆம் ஆண்டுவாக்கில் தமிழ்த் திரைப் படங்களின் நிலை போற்றுதலுக்குரியதாக இல்லை என்பதைத்தான் பாவேந்தர் இக் கவிதையில் மனம் நொந்து படம்பிடித்துக் காட்டியிருக்கக் காண்கின்றோம். ஆனால், திரைப்படத்துறை அவர் எதிர்பார்த்ததைப் போலவே 1940க்குப் பிறகு பேரறிஞர் அண்ணா, அமரர் கல்கி போன்ற தலைசிறந்த அறிஞர் பெருமக்களின் வரவால் புதுமலர்ச்சி பெற்றது என்பதையும் பாவேந்தர் அவர்களே பிறகு உணர்ந்து பாராட்டினார்கள் என்பது மட்டுமன்று தமிழ்த் திரைப்படங்களுக்குப் புத் துணர்ச்சியூட்டும் பாடல்கள், கதைகள் எழுத பாவேந்தருமே முற்பட்டுப் பணியாற்றிய

நிகழ்ச்சிகள் பல நமக்கு நன்கு எடுத்துக் காட்டுகின்றன.

தமிழ் உணர்வுமிக்க மாடர்ன் தியேட்டரின் அதிபர் அமரர் டி.ஆர். சுந்தரம் அவர்கள் தமிழ்க் கவிஞர்கள், ஆற்றல்மிக்க எழுத்தாளர்களைப் பயன்படுத்த முனைந்தவர்.

ஆங்கில நாட்டில் படித்து, ஆங்கிலப் பழக்க வழக்கங்களை மேற்கொள்பவராக திரு. டி. ஆர். சுந்தரம் அவர்கள் விளங்கினாலும், ஆற்றல் வாய்ந்த தமிழ் அறிஞர்களை, கவிஞர்களை, எழுத்தாளர்களை அறிமுகம் செய்தவர், ஆதரித்து உற்சாக மூட்டியவர்.

பாவேந்தர் பாரதிதாசன் அவர்களையும் தனது மாடர்ன் தியேட்டரின் படங்களில் பாடல்கள், உரையாடல்கள் எழுதப் பயன்படுத்திய பெருமை அவரையே சேரும்.

பேரறிஞர் அண்ணா அவர்கள் கதை வசனம் எழுத இயக்குநர் ப. நீலகண்டன் இயக்கத்தில் உருவான ''ஓரிரவு'' படத்தில் பாவேந்தரின் ''துன்பம் நேர்கையில் யாழ் எடுத்து நீ இன்பம் சேர்க்க மாட்டாயா?'' என்ற தித்திக்கும் தேன் தமிழ்ப் பாட்டு இடம் பெற்றிருப்பதை யார்தான் மறக்க முடியும்? அப்பாடலில் இடம்பெறும் ''நல்லன்பில்லா நெஞ்சில் தமிழிற் பாடி நீ அல்லல் நீக்க மாட்டாயா?'' என்ற தொடர் தமிழ்ச் சொல் மாட்சியைத் தெளிவுபடுத்துகிறது அல்லவா? ''கல்யாணம் பண்ணியும் பிரம்மச்சாரி'' எனும் படத்தில் ''வெண்ணிலாவும் வானும் போல, வீரனும் கூர் வாளும் போல, வண்ணப்பூவும் மணமும் போல, மகரயாழும் இசையும் போல, கண்ணும் ஒளியும் போல, கன்னல் தமிழும் நாமும்'' என்று புரட்சிக் கவிஞர் எழுதிய பாட்டு எத்தனை அருமையாகத் தமிழின் இனிமையை உவமைகளால் அடுக்கிக் கூறுகிறது பாருங்கள்.''

தமிழ்த் திரைப்படங்களில் இடம்பெறும் தமிழிசைப் பாக்கள் தெலுங்குக் கீர்த்தனைகளாக இடம் பெற்றிருந்த பழைய நிலையைப் பேரளவு மாற்றியவர் புரட்சிக்கவிஞர் பாவேந்தர் பாரதிதாசனார் ஆவார். ''வெள்ளாடு, வேங்கைப் புலியிடம் நெருங்குகையில் மகிழ்ந்து. மாறாகத் தனதுயிர் வேங்கைக்கு இரையாகி ஒழியுமே என்று வருந்தும். அது போன்றே தெலுங்கிற் பாடும் தமிழின் செய்கை தேனாகாது'' என்று அவர் இடித்துரைப்பது வழக்கம்.

''தமிழுக்கு அமுதென்று பேர்''

என்று பாவேந்தர் பாடிய ''இன்பத் தமிழ்ப்'' பாட்டு பஞ்சவர்ணக்கிளி படத்தில் இடம் பெற்று இன்றும் என்றும் தமிழின்பமே தனி இன்பம் - கனி இன்பம் - பேரின்பம் என்பதை உணர்த்துகின்றது அல்லவா!

புரட்சிக் கவிஞரின் அறிவுரைப்படி தான் கலைவாணர் என்.எஸ்.கே.அவர்களும் புரட்சித் தலைவர் அமரர் டாக்டர் எம்.ஜி.ஆர். அவர்களும் புரட்சிகரமான கருத்துகளையும், காட்சிகளையும் தம் திரைப்படங்களில் அமைத்துக் காட்டித் தமிழுலகைச் சீர்படுத்தினார்கள் என்பதை நான் பெருமையோடு இங்கு எடுத்துக் காட்ட விழைகின்றேன். புரட்சிக்கவிஞரின் சீரிய சிந்தனைமிக்க பாடல்களையும் புரட்சித் தலைவர் தம் திரைப்படங்களில் இடம் பெறச் செய்து பாவேந்தரால் திரையுலகு என்றும் பெருமை பெறச் செய்திருக்கிறார்.

புரட்சித் தலைவரின்'கலங்கரைவிளக்கம்' படத்தில் இடம்பெற்ற பாவேந்தரின்

''எங்கள் வாழ்வும் எங்கள் வளமும்
மங்காத தமிழென்று சங்கே முழங்கு''

என்ற பாடல் இன்றும் நம் காதுகளில் ஒலித்துக் கொண்டிருக்கிறது.

''சங்கே முழங்கு'' எனும் புரட்சித் தலைவரின் படத்தில் தொழிலாளார் நலம் போற்றும் புரட்சிக் கவிஞரின்

''சித்திரச் சோலைகளே! உமைநன்கு
திருத்த இப்பாரினிலே'' என்ற புகழ் மிக்க பாடல் இடம் பெற்றது.

''பல்லாண்டு வாழ்க'' திரைப்படத்தில் நம் புரட்சித்தலைவர் விரும்பி இடம் பெறச் செய்த புரட்சிக் கவிஞரின் புகழ்மிக்க பாடல் இது:-

''புதியதோர் உலகம் செய்வோம்-கெட்ட
போரிடும் உலகத்தை வேரோடு சாய்ப்போம்
பொதுவுடைமைக் கொள்கை திசை
யெட்டும் சேர்ப்போம்

# புத்துலகப் புரட்சி!

புலவர் வே. பிரபாகரன், எம்.ஏ;

சாதிமத பேதங்களைத் தீய்க்க- கீழ்மைச்
சேதிகளை வேரோடு சாய்க்க!
தமிழ்ப் புதுவை நகரினிலே தணற்கனக சுப்புரத்தினம் பிறந்தார்-சீர்
அமிழ்த மொழிப் புலமையினால் ஆழ்நுணுக்கப் பாடல்களால் சிறந்தார்!
நாதியற்ற ஏழையரைத் தேற்றி-நேர்மை
நீதிநெறி தான்முழங்கப் போற்றி!
ஓடப்பர் யாவருமே உயரப்பர் ஆம்,விளக்கம் செய்தார்-கீழ்
வேடப்பர் முகத்திரைகள் விடிவுப்பாப் புரட்சியினால் கொய்தார்!
வஞ்சமிலாத் துடுக்கு மொழிப் பேச்சு!- தமிழ்
கொஞ்சுமிளந் தென்றல் அவர் மூச்சு!
மங்கையரைத் தாழ்த்துகிற மானமிலாப் போக்குகளை வீழ்த்தி- 'கல்வி'
பொங்கிமகிழ் வே விளங்கும் புத்துலகந் தானமைய வாழ்த்தி!
ஈரோட்டுப் பெரியாரின் பாதை! - எனும்
தேரோட்டிப் பாவடித்த மேதை!
பாரதிக்குத் தாசனவர் பாய்புலியின் நோக்குடைய மாந்தர்-தமிழ்ச்
சீரமைப்பு, நாகரிகச் செயல் வடிவங் கூட்டும்பா வேந்தர்!
செந்தமிழர் மேன்மைகளே எண்ணம்-பாடற்
சந்தமெலாம் வளர்பாதை வண்ணம்!
பெண்ணடிமைத் தீமைகளை, பேய்ச்செல்வர் ஆடல்களை மாற்ற-தமிழ்
மண்ணரங்கில் ஓருலக மாண்புகளைத் தான்வளர்த்துப் போற்ற
சிங்கப்புலித் தாக்குதலே பாட்டு!-அவர்
செங்குருதி அணுக்களிலும் கூட்டு!
ஊழித்தீ எரிமலையாய் உலகரங்கப் பாடல்களைத் தொடுத்தார்-உழவு
மேழிகுறள் தொழில் வளர மேதினியார்க் கேற்றதெலாம் கொடுத்தார்!

---

**புனிதமோ டதை எங்கள் உயிரென்று காப்போம்''**

புரட்சிக் கவிஞர் தாம் தீட்டிய "பாண்டியன் பரிசு" காவியத்தைத் திரைப்படமெடுக்க முயன்று அம்முயற்சி வெற்றி பெறாமல் போனார் என்பதையும், அதே போல் தம் குருநாதரான பாரதியார் வரலாற்றைத் திரைப்படமெடுக்க முயன்ற அவர் முயற்சியும் வெற்றியாகவில்லை என்பதையும் அவர்தம் வரலாறு வாயிலாக அறிகிறோம். எனினும், திரைப்படங்கள் தமிழர்தம் வாழ்வை மேம்படுத்துவனவாக அமைய வேண்டும் என்று கண்ட கனவு இன்று பெரிதும் நனவாகிவருகிறது என்பதில் யாரும் ஐயம் கொள்ளத் தேவை இல்லை. அதைத் தொடங்கி வைத்தவர்களுள் தலையான இடம் பேரறிஞர் அண்ணாவுக்கு உண்டு ..

**"எல்லார்க்கு எல்லாமும் என்றிருப்பதான திசை நோக்கி நடக்கிறது உலகம்"**

என்று பாவேந்தர் சுட்டிய கருத்து இன்று திரை உலகிற்கும் மிகப் பொருந்துவதே. ஆம், திரையுலகம் எல்லார்க்கும் ஏற்றமிகு வாழ்வை உருவாக்கித்தரும் பொற்பணியில் இன்று பீடுநடை போட்டுப் பவனி வந்து கொண்டிருக்கிறது.

**வாழ்க பாவேந்தரின் திரையுலகத் திருப்பணி வளர்க! திரையுலகம் என்றென்றும்.**

# புரட்சிக் கவிஞரின் புதுமைப்பெண்!

முனைவர் சாலினி இளந்திரையன்

"ஆடை அணிகலன், ஆசைக்கு வாசமலர்,
தேடுவதும், ஆடவர்க்குச் சேவித்
திருப்பதுவும்,-
அஞ்சுவதும் நாணுவதும் ஆமையைப்
போல் வாழுவதும்
கெஞ்சுவது மாகக் கிடக்கும் மகளிர்குலம்
மானிடக் கூட்டத்தில் வலிவற்ற ஓர்பகுதி"

என்பது, சில நூற்றாண்டுகளாக, இங்கே பெண்ணைப் பற்றி இருந்துவரும் ஒரு கணிப்பீடு. மண்போல, பொன் போல, பெண்ணையும் ஓர் உடைமைப் பொருளாகக் கருதத் தொடங்கியதன் விளைவுதான் பெண்ணைப் பற்றிய இந்தக் கணிப்புக்கு அடிப்படைக் காரணம் என்று சொல்ல வேண்டும்.

## சிந்தனை முடக்கம்

அய்ம்புலன்களும் ஆறாவதாகிய அறிவும் வாய்க்கப்பெற்ற ஒரு மனித உயிர், மண்ணும் பொன்னும் அசைவற்றுக் கிடக்க வேண்டுமானால், முறையாகச் சிந்திக்கின்ற பயிற்சி தருவதாகிய கல்வி அவ்வுயிருக்குக் கிடைக்கக் கூடாது. கல்வியில்லா விட்டால் கூட சிந்திக்கும் திறன் மனித உயிரிடம் உண்டு; அனுபவம் அதைப் பயன்படுத்தி விடும்; அதன் அடிப்படையில் உரிமைக்குரல் உண்டாகிவிடும். ஆகவே, சிந்திக்கும் திறனையே மழுங்கடிக்க வேண்டும். இந்த வளர்ச்சிக் கெடுப்பு வேலையை, நம்மவர்கள் இரண்டு வகையாகச் செய்திருக்கிறார்கள்: ஒன்று, சிறுவயதில் இருந்தே பெண்ணை அடக்கி ஒடுக்கித் தாழ்வு மனப்பான்மை கொள்ளச் செய்திருக்கிறார்கள்; மற்றொருபுறம், அவளை விதவிதமாக அலங்கரித்து, ஆடை, அணிகலன், வாசமலர் என்று, சின்னச்சின்ன செய்திகளில் அவளுடைய கவனத்தைத் திருப்பி, அதிலேயே மன நிறைவு கொள்ளச் செய்து பென்னம் பெரிய சாதனைத் தடத்தையே அவள் நெஞ்சிலிருந்து அழித்துப் போட்டிருக்கிறார்கள். இப்படியாக, மனிதக் குலத்தின் ஒரு பாதியாகிய பெண்கள் கல்வியின்றி, உரிமையின்றிக் கிடந்தார்கள். அவர்களைச் சுற்றி மூடநம்பிக் கைகள் என்னும் கயிறுகள் பிணிக்க, இன்று, பெண்களே, சிந்தனை ஆற்றல் இழந்து, சிக்குண்ட நூலாகிப் போனார்கள். எனவே, அவர்கள் வயிற்றில் பிறந்த பிள்ளைகள் வீறார்ந்த செயல் உடையவர்களாக இல்லை. அதனால், விரைவில் மாற்றார்க்கு அடிமையாகிப் போனார்கள்.

## பெரியோர் வழியில் கவிஞர்

இந்த மண்ணடிமைத் தனத்தை நீக்க நினைத்த அறிஞர் பெருமக்கள்,

"பெண்ணடிமை தீருமட்டும் பேசுந்
திருநாட்டில்
மண்ணடிமை தீர்ந்துவருதல் முயற்
கொம்பே"

என்ற முடிவுக்கு வந்தார்கள். வந்தவர்கள், பெண்ணின் விலங்குகளை ஒவ்வொன்றாகக் கழற்றி, அவளைச் சுதந்திரமாக நடமாடவிட முற்பட்டார்கள். வங்கத்தில் ராஜாராம் மோகன்ராய், கணவன் இறந்து விட்டால் அவனோடு அவன் மனைவியையும் உயிரோடு எரிக்கும் 'சதி' என்னும் கொடிய வழக்கத்துக்கு எதிராகப் போர்க்கொடி உயர்த்தினார். அப்படிச் சாகடிக்கா விட்டாலும், உயிரோடேயே சித்திரவதைக்கு உள்ளாக்கும் கைம்மைத் துயரிலிருந்து பெண்களுக்கு விடுதலை பெற்றுத் தரப் பாடுபட்டார் தெலுங்கு நாட்டைச் சேர்ந்த கந்துகூரி வீரேசலிங்கம். தமிழ் நாட்டிலோ, பெண்ணுக்குக் கல்வி கொடுக்க வேண்டியதன் தேவையை வலியுறுத்தினார். வேதநாயகர். பெண் கல்வியின் தேவையை வலியுறுத்திப் 'பெண் கல்வி' என்று கட்டுரை நூலும் பெண்மதிமாலை என்று இசை நூலும் வரைந்தளித்தார். இக்கருத்துகளின் விளக்கமாக, பிரதாப முதலியார் சரித்திரம் என்ற

நாவலில் சுந்தரத்தண்ணி, ஞானாம்பாள் என்ற இரண்டு பெண்கள் படித்த பெண்களாக இருந்ததால் செயல்திறமை வாய்ந்த அறிவுடைய பெண்களாக விளங்கினார்கள் என்று விளக்கினார். தமிழ்நாட்டின் மூலை முடுக்கெல்லாம் சென்று, பெண்களுக்குச் சமுதாயத்தில் இருந்துவரும் இழிநிலையை நீக்கப் பாடுபட்டார் பெரியார் ஈ. வெ. ரா.

இவர்களை அடியொற்றிச் சிந்திக்கத் தொடங்கிய புரட்சிக் கவிஞர், தம்முடைய இலக்கியங்களிலே ஒரு முழுமையான புதுமைப் பெண்ணை வடித்தெடுக்கிறார்.

## முதலில் தன்னம்பிக்கை

முதன்முதலில், பெண் அவளைச் சுற்றிப் பின்னப்பட்டுள்ள வலைகளை அறுத்தெறிய வேண்டும். பலகாலமாக முடக்கப்பட்டு விட்ட காரணத்தால் மூடத்தனத்தின் முடைநாற்றம் அவளைச் சுற்றி நிற்கிறது. இதை நீக்க அவள் தன்னையே சுட்டெரித்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. அந்தச் சுட்டெரிப்பும் கூடச், சுற்றிலும் நறுமணம் எழுப்பும் கற்பூரமாக இருக்க வேண்டும் என்று விரும்புகிறார் கவிஞர்.

அவருடைய தாலாட்டிலேயே,

''மூடத்தனத்தின் முடைநாற்றம் வீசுகின்ற
காடு மணக்க வரும் கற்பூரப் பெட்டகமே!''

என்று மணக்கிறது.' சமுதாயத்தில் மண்டிக் கிடந்து நோய் பரப்பும் சாதி, சமயமெனும் சங்கிலிகள் உடைக்கப்பட வேண்டுமானால் தன்னம்பிக்கை கொண்ட ஒரு புதிய பெண் கூட்டமே உருவாக வேண்டும். அவ்வாறு அவள் எழுந்து உருவாகாதவாறு, 'எல்லாம் கடவுள் செயல்' என்ற அவநம்பிக்கைத் தத்துவம் அவளுக்கு ஊட்டப்பட்டிருக்கிறது. கொடுமைகளை எதிர்க்கும் திறனில்லாத ஒருவகையான தொடை நடுக்கம் அவளுக்கு அடிக்கடி ஏற்பட்டு விடுகிறது ஆகவே, புதுமைப்பெண், கடவுள் எதிர்ப்புச் சக்தியாக விளங்க வேண்டும் என்று எண்ணுகிற கவிஞர், கிண்டலாகச் சாமி என்பது என்ன என்று அவளுக்கு விளக்குகிறார்:

''சாணிக்குப் பொட்டிட்டுச் சாமி என்பார்
செய்கைக்கு
நாணி உறங்கு,—நகைத்து நீ
கண்ணுறங்கு!''

தெளிவு பெற்ற புதுமைப் பெண்ணின் தீர்க்கமான சித்திரம் இது! ''இருக்கும் நிலைமாற்ற ஒரு புரட்சி மனப்பான்மை ஏற்படுத்தல் பிறர்க்கு உழைக்கும் எழுத்தாளர் கடனாம்'' என்ற அவருடைய இலக்கணத்திற்குச் சான்று காட்டக் கூடிய இலக்கியமாக வெடித்து எழுகிறது இப்பகுதி!

பெண்ணுக்குக் கனிவு சொல்லி அவள் கல்வி கற்க ஊக்குவிக்கின்ற கவிஞர்,

''பெற்ற நல் தந்தை தாய்மாரே—நும்
பெண்களைக் கற்க வைப்பீரே!''
''படியாத பெண்ணினால் தீமை—என்ன
பயன்விளைப் பாளந்த ஊமை?''

என்று, அவள் பெற்றோருக்கும் அறிவு சொல்லுகிறார்.

## முக்கியமான கட்டம்

பெண்ணின் வாழ்வில் மிகப் பெரிய விலங்கை மாட்டுகிற அடுத்த கட்டம்,—அவளின் பசியறியாமல், ருசியறியாமல், ஊட்டப்பட்டு வரும் உணவாக இருந்து வந்துள்ள அவளின் திருமணம். 'ஒரு மனிதனுக்கு உணவாக இருப்பது மற்றொருவருக்கு நஞ்சாக இருக்கும்' என்பது ஆங்கிலப் பழமொழி. பெற்றோரின் விருப்பத்தின் அடிப்படையிலும் உற்றார் உறவினரின் சம்பிரதாய மூடநம்பிக்கைகளின் அடிப்படையிலும்தான் ஒரு பெண்ணின் திருமணம் நிச்சயிக்கப்படுகிறதே அன்றி, அவளுடைய விருப்பு வெறுப்புகளைப் பற்றி அவளிடம் கேட்பதுகூட இல்லை. இது நாட்டின் நிலை இந்த நிலையை மாற்ற, பெண்ணைப் புதுமைப் பெண்ணாக வளர்க்கிறார் கவிஞர்.

''கல்யாணம் ஆகாத பெண்ணே!—உன்
கதிதன்னை நீ நிச்சயம் செய்க கண்ணே!''

என்று அறிவுறுத்தி, உற்றார், உறவினர், பெற்றோர் இருக்கும் நிலையை விவரித்து,—

''கற்றவளே ஒன்று சொல்வேன்—உன்
கண்ணைக் கருத்தைக் கவர்ந்தவன்
நாதன்!''

என்று தெளிவிக்கிறார். பின்னர்,—

''கனத்த உன் பெற்றோரைக் கேளே!—அவர்
கல்லொத்த நெஞ்சை உன் கண்ணீரினாலே
நனைத்திடுவாய்; அதன்மேலும் —அவர்
ஞாயம் தராவிடில், விடுதலை
மேற்கொள்!''

என்று அவள் செய்ய வேண்டியது என்ன என்பதைக் குறித்த திட்டவட்டமான வழி முறையைக் காட்டித் தெம்பூட்டுகிறார்.

## உறுதி வாய்ந்த ஒருத்தி

தன் காதலை உதாரனிடம் சென்று தெரிவிக்கிறாள் அமுதவல்லி; அதைக் கேட்டு அதிர்ச்சி அடைகிறான் உதாரன்.

நன்று மடமயிலே, நான்பசியால் வாடு
கின்றேன்;
குன்று போல் அன்னம் குவித்திருக்கு
தென்னெதிரில்!
உண்ண முடியாதே; ஊராள்வோன்
கூர்வாளும்
வண்ணமுடிச் செல்வாக்கும் வந்து
மறிக்குதடி!

என்று தயங்குகிறான். அந்த நிலையிலும், பின்வாங்காமல்,

கோல்வேந்தன் என் காதற் கொற்றவனைக்
கொல்லவந்தால்
சேல்விழியாள், யான் எனது செல்வாக்கால்
காத்திடுவேன்
பாவிகளைத் திருத்தப் பாவலனே,
நம்மிருவர்
ஆவிகளை யேனும் அர்ப்பணம் செய்வோம்!

என்று அமுதவல்லி சொல்லும் போது, அவளுடைய தன்னம்பிக்கையும் தோல்வியே நேரினும் துவண்டுவிடாத உளத்துணிவும் மேலெழுந்து நிற்கின்றன.

## புதுநடைப் பெண்கள்

இவ்வாறு குழந்தை, சிறுமி, பருவப்பெண் திருமணமான பெண், தாய் என்று பல கோணங்களில் புதுமைப்பெண்ணைப் படைத்து நிறுத்திய கவிஞர், அவள் வாழ்வு நலத்துக்கான, உரிமைக்கான பல செய்திகளை அங்கங்கே தெளித்து வைத்திருக்கிறார்.

முன்புபோல் பெண் தன் தந்தையின் துணையுடன், தன் கணவனின் துணையுடன், தன்பிள்ளையின் துணையுடன்தான் வெளியில் செல்ல வேண்டும் என்ற நிலை இன்று இருக்க முடியாது. கல்விகற்க, வேலைபார்க்க, வீட்டுக் காரியங்களைக் கவனிக்க, சமூகக் கடமைகளை நிறைவேற்ற என்று, பல சமயங்களில் அவள் தனித்துச் செல்ல வேண்டிய தேவை ஏற்படுகிறது. இதில் படித்த பெண், படியாத பெண் என்ற வேறுபாடு இல்லை. அப்படிச் செல்லுகின்ற போது சமூக விரோதிகள் அவளைக் கிண்டல் செய்வதும் வம்புக்கு இழுப்பதும் நேருகின்றன. புதிய சூழ்நிலையில் புதுமைப்பெண் இவற்றை எப்படி எதிர்கொள்ள வேண்டும் என்றும் விளக்குகிறார் கவிஞர்.

தனித்து வரும்போது—கெட்ட
தறுதலை கண் வைத்தால்
இனிக்க நலம்கூறு,-பெண்ணே,
இல்லாவிடில் தாக்கு!

என்பதே புதுமைப்பெண்ணுக்கு அவர் கூறும் அறிவுரை. முதலில் மென்மையாகத் தவிர்க்க முற்பட வேண்டும், அது பலிக்காத போது, அஞ்சி ஓடி விடாமல் எதிர்த்து நின்று தாக்கி அவனை ஓடச் செய்ய வேண்டும் என்பது அவர் கருத்து.

அறிவுரை சொல்லுவதோடு நின்றுவிடவில்லை கவிஞர். எழுச்சியுற்ற பெண்கள் என்று ஒரு நிகழ்ச்சியையும் படைத்துக் காட்டுகிறார். சோலையிலே தனித்து நின்றிருந்த ஒரு பெண்ணிடம் ஒரு செல்வப் பிள்ளை வம்பு செய்ய முற்படுகிறான். அறிவுரை சொன்னாள்; என் மனது வேறொருவன் இடத்தில் என்று அன்புரை சொன்னாள். அவனோ, அவள் பேச்சைக் கேட்காமல் நெருங்கி வந்தான். கெட்ட தறுதலை என்று தெரிந்து கொண்டாள். மென்மையான வாய்ப் பேச்சுக்கு இணங்குபவனல்ல என்று தெரிந்துவிட்டது; நொடியில்,

ஒருகையில் உடைவாளும் இடதுகையில்
ஓடிப்போ என்னுமொரு குறிப்புமாகப்
புருவத்தை மேலேற்றி விழித்துச்
சொல்வாள்:

ஓடினான் ஓடினான் செல்வப்பிள்ளை. மூச்சிரைக்கக் கவிஞரிடம் வந்த அவன் சொன்ன செய்தி கேட்டு, 'கோடி உள்ளம் வேண்டும் இந்த மகிழ்ச்சி தாங்க' என்று உவகை பூக்

கிறார் கவிஞர். இன்று நாட்டில் அங்கொன் றும் இங்கொன்றுமாகப் புதுநடை எடுத்த இந்தப் பெண்களைப் பற்றிக் கேள்விப்படு கிறோம். நாமும் உவகை பூக்கிறோம்.

இந்தத் துணிவு உள்ளத்திலே ஊற்றெ டுக்க வேண்டுமானால், உரிமை வாழ்வு பற் றிய தெளிந்த சிந்தனையும் ஆடம்பரத்தில் மோகம் இல்லாத உயர்ந்த குறிக்கோளும் அவர் உள்ளத்தில் நிறைந்திருக்க வேண்டும். அவற்றையும் அங்கங்கே, நிகழ்ச்சிகளாக, அறிவுரைகளாகக் குறித்துச் செல்லுகிறார் கவிஞர்.

திருமணம் குறித்த பேச்சு நடைபெறும் போதே, "எங்கள் மணம் முடித்துத், தட்டா மல் ஈக தனியில்லம்" என்று கேட்கிறாள் குடும்பவிளக்கில் வரும் நகைமுத்து.

ஏலுமட்டும் எங்கள்
குடித்தனத்தை யாம் பார்ப்போம்;
ஏலாமை உண்டானால்
என்மாமியார் உள்ளார்...

என்று, பெரியவர்களின் மனம் கோணாத வகையில் தன் உரிமையை நிலைநாட்டுகிறாள் அவள்.

தொழுங்கணவன் ஆடையில் சிறுபொத்தல்
தைக்கவும்
தோகை கேட்கும் ஆட்கள் வெண்டும்

என்று கவிஞரே குரல் எழுப்புகிறார் வேறோரிடத்தில் சமைத்திடும் தொழில் மட்டுமே பெண்களின் தொழில் என்ற நிலை மாற வேண்டும் என்று விரும்புகிறார் "வாணிகம் செய்யலாம் பெண்கள்—நல் வானூர்தி ஓட்டலாம் பெண்கள்" என்று, எல்லாத் தொழில்களிலும் பெண்களைக் காண விரும்புகிறார் கவிஞர். ஆணும் பெண்ணும் எத்தொழிலைச் செய்யவும் சமஉரிமை உடைய வர், சம வலிமை உடையவர் என்பதை நகைச்சுவையாகக் கவிஞர் ஓரிடத்தில் குறிப் பிடுகிறார்.

ஏணை அசைத்தலும் கூடும்;—அதை
யார் அசைத்தாலுமே ஆடும்!

ஆமாம்; பெண்கள் தொட்டிலை ஆட்டினால் தான் தொட்டில்ஆடும் என்பதில்லை; ஆண்கள் செய்தாலும், அதிலே வேறுபாடு உண்டாவது இல்லை என்று குரல் கொடுக்கிறார்.

முண்மையில் டெண்களே முழுவதுமாகப் பொறுப்பேற்று ஒரு பெரிய விமானத்தை ஓட்டி வந்தார்கள். அந்த வெற்றிக்காக அந்தப் பெண், விமான ஓட்டியைப் பேட்டி கண்ட நிரு பர் "இதை எப்படிச் சாதித்தீர்கள்?" என்று கேட்க, அதற்கு "நான் ஓட்டிய விமானத்திற்கு அதை ஓட்டியது ஆணா பெண்ணா என்று தெரியாது!" என்று சொல்லிச் சிரித்திருக்கி றாள். இதைத்தான் விரும்புகிறார் கவிஞர். ஆடம்பர மோகமும் முகப்புகழ்ச்சி மோகமும் எவரையும் வீழ்த்திவிடும்! ஆகையால்தான் நாம் முதலில் குறிப்பிட்டது போல, பெண்கள் வலுவற்ற ஒரு பகுதி என்று சொல்வதற்குக் காரணமாக நிகழ்ச்சியிலேயே ஆடம்பரத்திற்கு அடிபணிவதைச் சுட்டிக்காட்டி பெண் வலிமை யுற இவற்றைத் தவிர்க்க வேண்டும் என்று குறிப்பாக எச்சரிக்கிறார் கவிஞர். மற்றோ ரிடத்தில்.

கனியத் தமிழ் பாடு-பெண்ணே
கச்சேரி செய்யாதே!

என்று வெளிப்படையாகவே பெண்ணுக்கு அறிவுரை சொல்கிறார். ஆமாம்; நாலுபேர் புகழ ஆடினோம், பாடினோம் என்கிற மயக் கம் ஏற்பட்டு விட்டால், பெண், விழுந்தவள் விழுந்தவளே!

## தெளிவுடைய பெண்மக்கள்

ஒட்டுமொத்தமாகப் பார்த்தால்,-புரட்சிக் கவிஞர் கண்ட புதுமைப்பெண் முடைநாற்றம் வீசுகின்ற பழமையை உடைத்தெறிபவளாக இருக்கிறாள்; அதற்கேற்ற வகையில் கல்விக் கண்ணை முதலில் பெற்றாகவேண்டும் என்ற முனைப்பு உள்ளவளாக இருக்கிறாள்; கல்வி தந்த துணையோடேயே, கனிவோடு கூடிய துணிவும் அவள் உள்ளத்தில் ஊற்றெடுக்கிறது.

இந்நாளில் பெண்கட் கெல்லாம்
ஏற்பட்ட பணியை நன்கு
பொன்னேபோல் ஒருகை யாலும்
விடுதலை பூணும் செய்கை
இன்னொரு மலர்க்கை யாலும்
இயற்றுக; கல்வி இல்லா
மின்னாளை வாழ்வில் என்றும்
மின்னாள் என்றே உரைப்பேன்!

அச்சமும் மடமையும் இல்லாத பெண்கள்
அழகிய தமிழ்நாட்டின் கண்கள்!

ஆம்; புரட்சிக்கவிஞரின் புதுமைப்பெண் மிகப் பல கடமைகளும் அவற்றை நிறைவேற்றிக் காட்டத் தக்க சலியாத மனமும் உடையவள். ஏற்ற கல்வியினாலும் அது தந்த சிந்தனை ஆற்றலினாலும், வாழ்க்கையைப் பற்றிய தெளிவும் அதைக் கொண்டு நடத்தும் துணிவும் கைவரப் பெற்றவள்.

# பாவேந்தருடன் பழகிய நாள்கள்

முல்லை முத்தையா

- இந்த ஆண்டு தமிழுக்குப் பெருமை அளிக்கும் ஆண்டாகும். பாவேந்தர் பாரதிதாசனின் நூற்றாண்டு விழாக் கோலம்.

- நாடுமுழுவதிலும் உள்ள பள்ளிகள், கல்லூரிகள், பல்கலைக் கழகங்கள், தமிழ் மன்றங்கள் முதலானவற்றில் விழாக்கள் கொண்டாடப்பட்டு வருகின்றன. மலர்கள், நூல்கள் வெளிவந்து கொண்டிருக்கின்றன. படத்திறப்பு விழாக்களும், சிலைத் திறப்பு விழாக்களும் காணப்படுகின்றன.

- பாவேந்தர் நூல்களைப் பொதுவுடைமையாக்க முனைந்துள்ளது, கலைஞரின் அரசு இத்தகைய பெருமை பாரதிக்கு அடுத்துப் பாரதிசானுக்கே கிடைத்தது சிறப்பாகும்.

- இவ்வாறு நிகழும் என எவருமே நினைத்திருக்க மாட்டார்கள்.

- 46 ஆண்டுகளுக்கு முன் நிலைமை எவ்வாறு இருந்தது என்பதை, இப்போது திரும்பிப் பார்க்கின்றேன்.

- 1944ல் பாவேந்தருடன் தொடர்பு கொண்டு, அவரது நூல்களை வெளியிடும் குறிக்கோளுடன் முல்லைப் பதிப்பகம் தொடங்கினேன்.

- அழகின்சிரிப்பு, காதல் நினைவுகள், பாண்டியன் பரிசு, பாரதிதாசன் கவிதைகள், தமிழியக்கம், குடும்ப விளக்கு, எதிர்பாராத முத்தம் முதலான நூல்களை வனப்புடன் வெளியிடலானேன்.

- பாவேந்தரை ஆதரவாளராகக் கொண்டு 'முல்லை' மாத இதழை வெளியிட்டேன்.

- அப்போது இத்தனை பதிப்பகங்களும் இல்லை. நூலகங்களும் கிடையா.

- அன்று ஏசியவர்களையும், எதிர்ப்புக் குரல் கொடுத்தவர்களையும் கண்டேன். எனினும், நான் தயங்கவில்லை. பாவேந்தரும் அஞ்சாமல் முழங்கிக் கொண்டிருந்தார். எதிர்த்தவர்கள் எங்கோ மறைந்தனர்.

- ஆர்வத்தோடு விரும்பி வாங்கிய எண்ணற்ற வாசகர்களாலேயே பல ஆயிரம் பிரதிகள் விற்பனை ஆயின.

- காந்தியடிகளின் 72ஆம் ஆண்டு நிறைவின் நினைவாக இந்தியக் குடியரசின் முன்னாள் தலைவர் டாக்டர் ராதாகிருஷ்ணன் அவர்கள் உலக அறிஞர்களின் கட்டுரைகளைத் திரட்டித் தொகுத்து 1939ல் ஒரு நூலை வெளியிட்டிருந்தார்.

- 1946ல் மேற்படி நூலைப் பார்த்தேன்.

- அப்போது பாவேந்தருக்கு 54 ஆம் ஆண்டு தொடங்கியது. அதன் நினைவாக தொகுப்புக் களஞ்சியம் ஒன்று வெளியிட புலவர்கள், பேராசிரியர்கள், கவிஞர்கள்' மறுமலர்ச்சி எழுத்தாளர்களிடம் கட்டுரைகள், கருத்துரைகள் வேண்டினேன். பலர் மகிழ்ச்சியோடு தந்தனர்.

- 'கட்டுரை எழுத இயலாது' என தெரிவித்தவரும், 'மௌனமாக' இருந்தவர்களும் பலரின் போக்கையும் அப்போது கண்டேன்.

- 'புரட்சிக் கவிஞர்' என்ற பெயரில் பாவேந்தரைப் பற்றிய முதல் நூலும், தமிழில் முன்னோடித் தொகுப்பு நூலும் இதுவே ஆகும். அறிஞர் சோமலெ அதைப் புகழ்ந்து எழுதினார்.

- பலருடைய பாராட்டைப் பெற்ற அத்த கைய நூலின் மூன்றாம், நான்காம் பதிப் பைக்கூட அப்போது பதிப்பாளர்கள் சிலர் தயங்கி, வெளியிட மறுத்து விட்ட னர். அதனால் விரக்தி அடைந்தேன். அவர்களின் பிற்போக்கு நிலையை என்ன வென்று கூறுவது?

- அதன்பின், மாபெரும் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினரே உவப்புடன் அந்த நூலை வெளியிட்டு வருகின்றனர்.
- "எங்களுடைய ஒப்பாய்வுகளுக்கும், மேற் கோள் காட்டுவதற்கும், ஆராய்ச்சிக் கட்டுரைகளுக்கும் அடித்தளமாக நீங்கள் அந்தக் காலத்தில் வெளியிட்ட நூல்களே உறுதுணையாக உதவின" எனப் பல பேராசிரியர்கள், எழுத்தாளர்கள் நேரி லும், கடிதங்கள் வாயிலாகவும் தங்கள் நன்றியை எனக்குத் தெரிவித்தனர்.

- பிற கவிஞர்கள் அப்போது அடியெடுத்து வைக்க அஞ்சிய காலத்தில், பாவேந்தர் மூடப் பழக்கத்தைச் சாடினார். சமுதாய ஏற்றத் தாழ்வுகளை அகற்ற குரல் எழுப் பினார். வாழ்விழந்த பெண்களின் மறு மணத்தை வரவேற்றார். தொழிலாளர் நிலை உயரவும், பொதுவுடைமைச் சமூ தாயம் மலரவும் முழங்கினார். தமிழின் பெருமையையும், கலப்பு மணத்தின் சிறப் பையும், கர்ப்பத் தடையையும் பாடி னார்.

- இளைஞர்களும் பெரியவர்களும்கூட பாவேந்தரின் கவிதைகளைப் படித்துப் புத்துணர்ச்சி பெற்றனர்.

- எழுச்சி பெற்ற கவிஞர்கள், பாரதிதாசன் பரம்பரையினர் என்ற பெயர் கொண்டு திரண்டனர்.

- பாவேந்தரின் கவிதைகளைப் போலவே அவருடைய நோக்கும், போக்கும் தனிச் சிறப்பு வாய்ந்ததாகும்.

- வருங்கால இளைஞர்களும் அறிந்து இன்புறுவதற்காக சில நிகழ்ச்சிகளைக் கூற விரும்புகிறேன்.

- சிலருக்குத் தெரியும்; பலருக்குத் தெரி யாது என்பதால், நான் உடனிருந்த சில நிகழ்ச்சிகளை இங்கே நினைவுகூர்வது பொருத்தமாகும். எனவே, 'கூறியது கூறல் ஆகாது' என்று எண்ணுகிறேன்.

- பாவேந்தரின் தோற்றம், எண்ணம், செயல் அனைத்திலும் சிறப்பான புதுமை காணலாம்.

- கலைவாணர் என். எஸ் கிருஷ்ணன் 'கிந்தனார்' கதையை நடத்தி நிதி திரட் டத் தீர்மானித்தார் ஒரு பள்ளிக் கூடத் தின் நிர்வாகி.

- பாவேந்தரிடம் அவர் வந்து விவரத் தைக் கூறி, கலைவாணர் வீட்டுக்கு அழைத்தார். அவரைக் கூட்டிக் கொண்டு சென்றால், கலைவாணர் தொகையைக் குறைத்துக் கொள்வார் என்பது நிர்வாகி யின் கருத்து.

- இருவரும் கலைவாணர் வீட்டுக்குச் சென்றார்கள். பாவேந்தரைக் கண்ட தும் வரவேற்று முகமலர்ச்சியோடு உப சரித்தார் கலைவாணர்.

- அதன்பின், கூடவந்தவரை அறிமுகப் படுத்தி, நிதி உதவிக்காக கிந்தனார் நாட கம் நடத்தித் தருமாறு கேட்டுக் கொண்டு, "உங்களுடைய நாடகத்துக்காக எவ்வளவு தொகையோ அதை அப்படியே பெற்றுக் கொள்ளுங்கள்" என்று கூறினார் பாவேந்தர்.

- கலைவாணரும் சம்மதித்து, ஒரு தேதி குறிப்பிட்டார். (ஆனால், அப்போது பள்ளி நிர்வாகி துணுக்குற்றார்)

- "உங்களைக் கூட்டிக் கொண்டு போனது கலைவாணர் தொகையைக் குறைவாக வாங்கிக் கொள்வார் என்பதற் காகத் தானே! நீங்கள் முழுத் தொகை யையும் வாங்கிக் கொள்ளுங்கள் என்று கூறி விட்டீர்களே" என்று கேட்டேன் பாவேந்தரிடம்.

□ ''அப்படி அல்ல,'' நான் சொல்லி விட்டாலும்கூட, அவருக்குத் தெரியும். அந்தத் தொகையை அப்படியே நிதிக்குத் தந்து விடும் இயல்புடையவர். வசூல் அதிகமானால் போக்குவரத்துச் செலவுக்கு மட்டும் எடுத்துக் கொண்டு, மீதியை அப்படியே வழங்கி விடக் கூடிய தாராளத் தன்மையுடையவர்'' என்று கூறினார் பாவேந்தர்.

□ □ □

□ திருக்குறளுக்கு இசை அமைத்து, இசையோடு பாடிவந்தார் ஒரு பாடகர். அவருக்குப் புதுச்சேரி, முத்தமிழ் மன்றத்தில் பாவேந்தர் தலைமையில் பாராட்டு நடைபெற்றது.

□ ''திருக்குறளை இசையோடு பாடிப் பரப்புவது நல்ல தொண்டு'' எனப் பலர் பாராட்டினார்கள்.

□ ஒவ்வொரு குறளையும் ஒவ்வொரு இசையில் பாடி கூட்டத்தினரை மகிழ்வித்தார் பாடகர். கூட்டமோ இசையில் மெய் மறந்திருந்தது.

□ திடீரெனப் பாவேந்தர் எழுந்து பாடகரை நோக்கி, ''நிறுத்து, நீ இனிமேல் பாட வேண்டாம். குறளில் உள்ள சொற்களை இசைக்காக சிதைத்தும், பிரித்தும், திரித்தும் பாடுவாய் என்று எனக்கு முன்பே தெரியாமல் போய் விட்டது. இனி இந்த வேலையை விட்டுவிடு'' என்று கண்டிக்கத் தொடங்கினார்.

கூட்டத்தில் திகைப்பு உண்டாயிற்று.

□ பாடகரோ மேடையை விட்டு இறங்கிப் போய் விட்டார்.

□ ''போகட்டும், 'போகட்டும்,' தமிழைக் கெடுக்கும் இத்தகையோர் முயற்சிக்குத் துணை புரியவே கூடாது'' என்று முழங்கினார் பாவேந்தர்.

★ ★ ★

□ ஒரு சமயம், மதுரையிலிருந்து சென்னைக்கு ரயிலில் பிரயாணம் செய்தார். அவருடன் இளைஞர் ஒருவரும் இருந்தார். எப்பொழுதும், பயணத்தில் யாரேனும் ஒருவர் பாவேந்தருடன் செல்வது வழக்கம். இரயில் திருச்சி வந்தது. பிளாட்பாரத்தில், 'பிரியாணி, பிரியாணி' என ஒருவன் கூறிக் கொண்டு சென்றான். பாவேந்தருக்குப் பிரியாணியில் ஆசை உண்டாயிற்று.

□ அருகிலிருந்த இளைஞரிடம், தம்பி, இரண்டு பொட்டலம் பிரியாணி வாங்கி வா'' என அனுப்பினார்.

□ இளைஞரும் பிரியாணி விற்பனையாளரைத் தொடர்ந்து, ரயில் பெட்டியின் கடைசி வரை சென்று விட்டார்.

□ வண்டியோ நகரத் தொடங்கியது, கவிஞர் தவியாய்த் தவித்தார். கதவு அருகில் நின்று பார்த்தார். பிரியாணி வாங்கப் போன இளைஞரைக் காணவில்லை. அவ்வளவுதான் வண்டியிலிருந்து கீழே குதித்து விட்டார் பாவேந்தர்.

□ வண்டி பிளாட்பாரத்தை விட்டுத் தாண்டிக் கொண்டிருந்தது. பிரியாணிப் பொட்டலத்தோடு இளைஞர் ஓடி வந்தார். கவிஞர் நிற்பதைப் பார்த்து, ''ஏன் அய்யா, இறங்கி விட்டீங்க? நான் ஓடி வந்து ஏறியிருப்பேனே; பெட்டி படுக்கை எல்லாம் எங்கே?'' என்றார்.

□ நல்ல ஆள் நீ, நான் என்ன செய்வது? உன்னை விட்டு நான் எப்படிப் போவது? ஒண்ணும் தெரியலை; இறங்கி விட்டேன்!'' என்றார் கவிஞர்.

□ பெட்டியும் படுக்கையும் சென்னை நோக்கிச் சென்று, இரயில் நிலையத்தில் பத்திரமாக எடுத்து வைக்கப்பட்டிருந்தது.

□ □ □

□ பாவேந்தரின் மூத்த மகள் சரசுவதிக்குத் திருமணத் தேதி குறிப்பிட்டு, அழைப்பிதழ் அச்சிட்டு அனுப்பப் பெற்றது.

□ கலைவாணர் என். எஸ். கிருஷ்ணனுக்குத் திருமண அழைப்பிதழோடு ஒரு கடிதம் எழுதி அனுப்பினார் பாவேந்தர்.

□ அக்கடிதத்தில், ''தங்களுக்கு ஓய்வு இருந்தாலும், திருமணத்திற்கு வரவேண்டாம்', என்று குறிப்பிட்டிருந்தார் பாவேந்தர். அதைப் பார்த்தும், ''திருமண விழாவுக்கு

வரவேண்டும் என்று அழைப்பதே வழக்கம். ஆனால் 'வரவேண்டாம்' என்று எழுதியிருக்கிறாரே என்று வியப்படைந்தேன்.

☐ பிறகு, அவரிடம் "ஏன் அப்படி எழுதினீர்கள்?" என்று கேட்டேன்.

☐ அதற்கு, "திருமணம் நடைபெறப்போவது ஒரு சிற்றூரில். என். எஸ். கேக்குப் படப்பிடிப்பு இல்லையானால் 'திருமண விழா' நிகழும் ஊருக்கு வந்து விடுவார். அங்கே பெருங்கூட்டம் கூடிவிடும். கட்டுப்படுத்த இயலாமல் போய்விடும்; அதனால் அப்படி எழுதினேன்" என்றார் பாவேந்தர்

☐ ☐ ☐

☐ கவியரங்கு நிகழ்ச்சிகள் சில நடைபேறுவதைக் கண்ட பாவேந்தர்,

☐ "வீட்டிலே பல நூல்களைப் புரட்டிப் பார்த்து, சிலவரிகளை எழுதிக்கொண்டு வந்து, கவியரங்கில் பாடுவதில்-படிப்பதில் என்ன சிறப்பு உள்ளது? அந்த இடத்திலே இருந்து, எந்தப் பொருள் பற்றிப் பாடவேண்டுமோ. அப்பொழுதே கவிதை இயற்ற வேண்டும். அதுவே கவிஞனின் திறமைக்குச் சான்று" என்றார் பாவேந்தர்.

★ ★

☐ திராவிடர் கழக இலக்கிய அணி சார்பாக, சால்வை அணிவித்துப் பாராட்டிய பொதுச்செயலாளர் கீ. வீரமணி அவர்கள் கூறியதாவது: "பாரதிதாசன் நூல்களை வெளியிட அஞ்சிய அந்தக் காலத்தில் துணிந்து, முல்லை முத்தையா பாவேந்தர் நூல்களை வெளியிட்டுப் பரப்பினார்"

☐ ☐

☐ டில்லி, மத்தியஅரசில் பணிபுரியும் சிலர் ஆர்வத்தோடு 'தமிழ் இளைஞர் பண்பாட்டுக் கழகம்' தொடங்கி, தலைவர்கள் நினைவு நாள், பாராட்டு விழா, பாவேந்தர் கட்டுரை, கவிதைப் போட்டி, பரிசு அளிப்பு முதலியவற்றை நடத்தி வருகின்றனர்.

அந்த அமைப்பின் செயல்முதல்வர் திரு.சு.இளங்கோ அவர்கள், "இக்காலத்திலே எங்கள் கழகத்துக்கு எவ்வளவோ இடையூறுகளை ஏற்படுத்தி வருகின்றனர் சிலர்.

☐ அந்தக் காலத்தில், முல்லை முத்தையாவுக்கு எவ்வளவு இன்னல்கள் ஏற்பட்டிருக்கும் என்பதை நினைத்துப் பார்க்கிறேன்," என்றார்.

☐ இப்படி ஒரு சிலரின் எதிர்ப்பு அப்போது இருந்த போதிலும், பெரும்பாலானவர்களின் ஆதரவு நாள்தோறும் பெருகி, இன்று உச்சியில் வீற்றிருக்கின்றார் பாவேந்தர்.

☐ "இன்று கூட்டம் போடலாம். கூட்டம் கூடும். கைதட்டுவார்கள். ஆனால் 'அந்தக் காலத்திலேயே பாரதிதாசன் நூல்களை வெளியிட்ட முல்லை முத்தையாவை மறந்து விடக் கூடாது" என்று மன்னர் மன்னனின் நூல் வெளியீட்டு விழாவில் திரு. எஸ். டி. காசிராஜன் இ. ஆ. ப. அவர்கள் பேசினார்.

☐ எனக்குத் தாழ்வு மனப்பான்மை மிகுதியானதால், ஆக்கப்பணியிலேயே கவனம் செலுத்துவேன். எனக்கு விளம்பரப் பிரியமும் இல்லை. எதிலும், 'நான்' என்று முன்னே நிற்பதுமில்லை.

☐ 47 ஆண்டுகளாக என்னை நன்கு அறிந்த, உவமைக் கவிஞர் சுரதா அவர்கள், "நீங்கள் இப்படி இருப்பதாலேயே, பாவேந்தரை அறியாதவர்களும், தெரியாதவர்களும் கூட வானொலியிலும், தொலைக் காட்சியிலும் வாய்ப்புப் பெறுகின்றனர் போலும்." என்றார். "அதனால் நான் தம்பட்டம் அடித்துக் கொண்டு இருப்பதா?" என்றேன்.

☐ பேராசிரியர் ஒருவரிடம், "பாவேந்தரைப் பற்றிக் கட்டுரை எழுதும்போது, பெரும்பாலும் 'நான்' என்று குறிப்பிடும்படி என்னைக் குறிப்பிட நேரிடுகிறதே அது தற்புகழ்ச்சி ஆகாதா?" என்று கேட்டேன். அதற்கு அவர், "நிகழ்ச்சிகளில் உடன் இருந்திருக்கிறீர்கள். தொடர்பு கொண்டிருக்கிறீர்கள் அவற்றைப் பலரும் படித்து இன்புறக் கூறுகிறீர்கள். அதில் உங்கள் பெயர் குறிப்பிடாமல் எப்படி முடியும்?" என்றார் அவர். அது எனக்கு ஆறுதலை அளித்தது.

# நான் கண்ட பாவேந்தர்

**பாவலர் நாரா. நாச்சியப்பன்**

அப்பொழுது நான் கோனாபட்டு சரசுவதி உயர்நிலைப் பள்ளியில் படித்துக் கொண்டிருந்தேன். நான்காவது படிவம் என்று நினைக்கிறேன். கோனாபட்டில் தமிழ் இளைஞர் கழகம் ஒன்று இருந்தது அந்தக் கழகத்தின் செயலாளர் முருகு சுப்பிரமணியன்.

தமிழ் இளைஞர் கழகத்தினர் எல்லாம் தமிழில்-அதுவும் தனித் தமிழில் நடைபெற வேண்டும் என்ற கொள்கையுடையவர்கள்.

தமிழ் இளைஞர் கழகத்தார் ஒவ்வோர் ஆண்டும் பொங்கல் தொடங்கி ஒரு வாரம் முழுவதும்-ஏழு நாள்களும்-தமிழர் திருநாள் நடத்துவது வழக்கம். இதில் பல தமிழறிஞர்கள் வந்து சிறந்த சொற்பொழிவுகள் ஆற்றுவார்கள்.

அந்த ஆண்டு தமிழர் திருநாளில் ஒரு நாள் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் வந்து சொற்பொழிவாற்றினார்.

அவருடைய சொற்பொழிவு இளம் உள்ளங்களைக் கிளர்ந்தெழச் செய்வதாய் இருந்தது. தமிழார்வத்தைக் கொழுந்து விட்டெரியச் செய்தது. கோனாபட்டு இளைஞர்கள் புரட்சிக் கவிஞரைச் சுற்றிச் சுற்றி வந்தார்கள்.

இளைஞர்களின் வேண்டுகோளுக்கு இணங்கி, புரட்சிக் கவிஞர் கோனாபட்டிலேயே ஒரு மாதத்துக்கு மேல் தங்கினார்.

முருகு சுப்பிரமணியன் வீட்டில்தான் அவர் சிறப்பு விருந்தினராகத் தங்கினார்.

முருகுவின் தாயார் தன் மகனின் இலட்சியத் தலைவருக்கு நாள்தோறும் புது விருந்து வழங்கி வந்தார்கள் என்பது குறிப்பிடத் தக்கது.

நான் பக்கத்து ஊர்க்காரன். நாள்தோறும் ஒரு கல் தொலைவுள்ள கோனாபட்டுக்கு நடந்து வந்து உயர் நிலைப் பள்ளியில் கல்வி பயிலுபவன்.

தமிழர் திருநாளில் புரட்சிக் கவிஞர் பேசிய முழக்கப் பேச்சைக் கேட்டு எழுச்சி பெற்றவர்களிலே நானும் ஒருவன்.

அதுவரையில் பாரதியார், நாமக்கல் கவிஞர், கவிமணி ஆகியோரின் கவிதைகளையே படித்திருந்த நான் பாரதிதாசன் கவிதைகளைப் படிக்கத் தொடங்கினேன்.

பாரதிதாசனின் தோற்றப் பொலிவிலும், இடிக்குரல் பேச்சிலும் ஈடுபட்ட நான் அவர் கவிதைகளின் புதுமை வேகத்தில் இழுத்துச் செல்லப்பட்டேன்.

அவரையே இலக்கிய ஆசிரியராகக் கொண்டேன். அவர் கவிதைகளைப் படிக்கப் படிக்க என் உள்ளத்தில் கவிதை ஊற்றுப் பெருக்கெடுத்தது.

பாரதிதாசன் கவிதைகளைப் படித்த போது ஏற்பட்ட உணர்ச்சியும் உந்துதலும் அதற்குமுன் என்னில் எழுந்ததில்லை.

பாரதிதாசன் கவிதைகளைப் படித்த பிறகு ஏற்பட்ட பாட வேண்டும்; எழுத வேண்டும்: என்ற முனைப்பு அதற்கு முன் எழுந்ததில்லை.

முருகு சுப்பிரமணியம் வீட்டில் பாரதிதாசன் தங்கியிருந்த போது, பள்ளி மாணவர்கள் பள்ளி முடிந்தபின் இரண்டொருவராகச் சென்று அவரைப் பார்த்து விட்டு-அவர் கருத்துக்களைக் கேட்டுவிட்டு வீடு செல்வது வழக்கம்.

நான் அடிக்கடி போவேன்.

அப்போது நான் ஒரு பள்ளி மாணவன். அவரோடு சமமாக உரையாடும் ஆற்றலோ, தகுதியோ, பருவமோ அப்போது எனக்கு இல்லை.

நெருங்க அஞ்சுவேன். சற்றுத் தள்ளியிருந்து—மற்றவர்களோடு அவர் பேசிக் கொண்டிருப்பதைக் கேட்டுக் கொண்டிருப்பேன்.

அதுவரை நான் யாரிடமும் அச்சத்தோடு பழகியதில்லை. என் ஆசிரியர்களிடம் கூட அஞ்சியதில்லை. அவரைப் பார்க்கும் போது ஒரு பய உணர்வு. மிகப் பெரிய ஆற்றல் வாய்ந்த ஒரு மேதையோடு பழகுகிறோம் என்ற உணர்வு என்னில் எழுந்தது.

பல கவிதைகள் எழுதியிருந்தேன். அவற்றை நண்பர்களிடம் காட்டிய போது பாராட்டினார்கள். புலவர் என்றே பட்டப் பெயரிட்டு அழைத்தார்கள். நம் பள்ளிக் கவிஞர் என்று பெருமைப்பட்டார்கள்.

அந்தக் கவிதைகளில் ஒன்றைக் காண்பித்து அவரிடம்-புரட்சிக் கவிஞரிடம் பாராட்டுப் பெற வேண்டும் என்று விரும்பினேன்.

ஒருநாள் முருகு வீட்டுக்குச் சென்றேன். அந்தக் கவிதை எழுதிய தாளை எடுத்து அவரிடம் நீட்டினேன். ''ஐயா, நன்றாக இருக்கிறதா?'' என்று கேட்டுக் கொண்டே கொடுத்தேன்.

என்ன சொல்வாரோ என்று ஒரு பயம் அடிநெஞ்சில் வருடிக் கொண்டிருந்தது.

வாங்கிப் பார்த்தார்.

பாடிப் பார்த்தார்.

பிறகு நிமிர்ந்து என்னை நோக்கினார்.

ஆவலோடு, ஆசையோடு அவர் முகத்தைப் பார்த்துக் கொண்டு நின்றேன்.

''நன்றாய் இருக்கிறது!'' என்றார். காதில் தேன் பாய்ந்தது.

''ஆனால்... ..''

சற்று நிறுத்தினார்.

''நீ இலக்கணம் படிக்க வேண்டும். யாப்பிலக்கணம் கற்ற பிறகுதான் கவிதை எழுத வேண்டும். எழுதும் கவிதை பிழையில்லாமல் இருக்க வேண்டும்'' என்றார்.

''ஐயா, இதில் பிழை இருக்கிறதா?'' என்று கேட்டேன்.

''ஆம்!'' என்று மூன்று பிழைகளைச் சுட்டிக் காட்டினார். அவற்றைத் திருத்தியும் காட்டினார்.

புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அவர்கள் தொடக்க காலத்தில் தனித் தமிழில் எழுதவில்லை. பாரதிதாசன் பாடல்கள் முதல் தொகுதியைப் பார்த்தாலே இந்த உண்மை விளங்கும்.

பிறமொழிச் சொற்கள் பல விரவிய பாடல்களையே அதில் பார்க்கலாம். இன்னும் சொல்லப் போனால், தனித் தமிழில் எழுதி வந்தவர்களைக் கிண்டல் செய்தும் இருக்கிறார்.

தனித் தமிழ் நடைமுறையில் கையாள இயலாது என்று பாவேந்தர் அடித்துச் சொல்வார். சில தனித் தமிழ்ச் சொல்லாக்கங்களைக் கிண்டலும் செய்வார்.

பாவேந்தர் தொடர்ந்து மறைமலையடிகளாரின் சமயக் கொள்கைகளை ஏற்றுக் கொள்ளாத பாவேந்தர் மொழிக் கொள்கையை முழுவதுமாக ஏற்றுக் கொண்டார்.

மொழிவளம் பெற வேண்டுமானால் அது தூய்மையாக இருக்க வேண்டும் என்ற கருத்து அவருடைய கருத்தாயிற்று.

இனி எழுதும் நூல்களைத் தனித் தமிழிலேயே எழுதுவது என்று உறுதி பூண்டார்.

வழக்கிழந்த தமிழ்ச் சொற்கள் புத்துயிர் பெறவும், புதிய சொற்கள் தோன்றவும், மொழி வளரவும் ஒரே மொழி தனித் தமிழில் எழுதுவதுதான் என்று உறுதி பூண்டார். உறுதி ஏற்ற பிறகு அவர் எழுதிய ஒவ்வொரு நூலும்—உரைநடை—பாட்டு—யாவுமே தனித் தமிழில் வெளி வந்தது. ஒரு நூலைத் தனித் தமிழ்த் தந்தையான மறைமலையடிகளாருக்கே ''திருமுன் படையில்'' ஆக்கினார்.

பாரதியாரைத் தன் வழிகாட்டியாக ஏற்றுக் கொண்ட பாவேந்தர் பிறகு பெரியாரைத் தலைவராக ஏற்றுக் கொண்டார். பெரியாரோடு முரண்பட்ட காலங்களில் கூட அவர் தன்மானக் கொள்கைகளை ஒதுக்கித் தள்ளவில்லை. பார்ப்பனிய எதிர்ப்பாளராகக் கடைசி வரை வாழ்ந்த பாரதிதாசன் பாரதியாரை இறுதி வரை போற்றினார்.

நடைமுறையில் பெரியார் கையாண்ட வழிமுறைகளில் முரண்பாடு ஏற்பட்டு ஒதுங்கிய காலத்திலும் பெரியாரின் தன்மானக் கொள்கையினின்றும், நாத்திகக் கொள்கையினின்றும் இறுதிவரை பாரதிதாசன் பின்வாங்கவில்லை.

# பாவேந்தர் பாரதிதாசனும் சிங்காரவேலரும்

பேராசிரியர் முத்து குணசேகரன்

இருக்கின்ற காலத்தில் அரசியல் உணர்வு பெற்று வாழ்ந்த கவிஞர்கள் தமிழகத்தில் மிகச் சிலர். அதிலும் அரசியலில் பங்கெடுத்து வாழ்ந்த கவிஞர்களை விரல்விட்டு எண்ணி விடலாம். இவர்களில் குறிப்பிடத் தகுந்தவர் பாவேந்தர் பாரதிதாசன். இவர் சிங்கார வேலரோடு கொண்ட தொடர்பு மிகமிக நெருக்கமானது.

சிங்காரவேலரை மிக நெருக்கமாக அறிந்த பாவேந்தர், சிங்கார வேலருக்கு உரிமையுடைய வீடொன்றில் குடியிருந்தார். கலை அபிமானியான சிங்காரவேலர் தோற்றுவித்து நடத்திவந்த நாடக மன்றத்தில் பாவேந்தர் பங்கெடுத்துக்கொண்டார்.

சிங்காரவேலருக்கும் பாவேந்தருக்கும் வயது வித்தியாசம் மிக அதிகம். பாவேந்தருக்குத் தொண்ணூற்றொன்பதாவது ஆண்டு இப்பொழுது நிரம்புகிறது. சிங்காரவேலருக்கு நூற்றுமுப்பதாவது ஆண்டு நிரம்பிவிட்டது. சிங்காரவேலரிடமிருந்து பொதுவுடைமைத் தாக்கத்தைப் பெற்ற பாவேந்தர் அப்பொதுவுடைமை உணர்வுகளைத் தான் பாடச் சிங்காரவேலர் கேட்டு வாயூறி நின்றதற்காகப் பெருமைப்படுகின்றார்.

ஜீவாவும் சிங்காரவேலரும் அங்காந்திடுவர் என் பாட்டிற்கு என்று அகம் மகிழ்ந்து பேசுகின்றார். சிங்காரவேலர் கட்டுரைகளைப் படித்துப் பாரெல்லாம் பயன்பெற வேண்டுமென்று நெடிய கவிதையொன்றையே 1934 இல் புதுவுலகம் பத்திரிகையில் பாவேந்தர் எழுதினார்.

சிங்காரவேலனைப் போல் சிந்தனைச்சிற்பி
எங்கேனும் கண்டதுண்டோ?

என்று தொடங்கும் பாடலில்

பாடிப் பரவுகிறார் பாவேந்தர் புரட்சிக் கவிஞர். கடலாய், வானாய் அகன்ற கல்வியைக் கற்ற சிங்காரவேலர் தமிழர்க்கு உடலாய், உயிராய் இருந்து உதவிய மாண்பினையும் பாவேந்தர் விளக்குகின்றார்.

எஃகினுக்கு ஊட்டமளித்த இரும்பு மனிதர் சிங்காரவேலர் தம் இரும்புக் கருத்துக்களைத் தமிழர்கள் படித்துப்பயன் பெற வேண்டுமெனப் பாவேந்தர் தூண்டினார்.

இப்படிப் பாவேந்தர் மக்களைத் தூண்டியதற்குக் காரணம் சிங்கார வேலர் தம் அறிவினில் அவருக்கிருந்த மலைப்புதான். 1930 களில் சிங்காரவேலர் பேசிய நாத்திகம், பகுத்தறிவு மனிதஉடைமை போன்றவை பாவேந்தரால் கவிதை வடிவம் பெற்றது. இது தனி ஆய்வுக் குரியது. இங்கு அதற்கு இடமில்லை.

பொதுவுடைமை உணர்வு கொண்டு பாடிய பாவேந்தரைப் பொதுவுடைமைக் கட்சியினரே காழ்ப்புணர்ச்சி கொண்டு சாடியதுண்டு. அவர்களையும் பாவேந்தர் ஈவு இரக்கமின்றித் திருப்பிச் சாடியதுண்டு. ஜாதியம் என்னும் நீறுபூத்த நெருப்பான இந்தப் போலிப் பொதுவுடைமை வாதிகள் எழுதுவது தமிழா? அது யாருக்குப் புரியும் என்று பாவேந்தர் கேட்டார்.

''சிங்காரவேலர், ஜீவா, அழகிரி போன்ற
ஆளுங்க
செய்த தமிழ்தான் புரியும். மத்[illegible]ராகச்
தமி[illegible]ர் கருத்
இருபுரம்கொட்ட எருமைக்கொம்[illegible]
சல்வது

எனப் பாவேந்தர் இகழ்ந்துரைத்தார்.

''அவாள், இவாள் பேசுகிற தமிழ்
மாட்டைக்
கட்டிய கயிறுமாதிரி முறுக்கேறி இருக்கும்'',

என அவர் இகழ்ந்து பேசினார்.

1930 களில் சிங்காரவேலர் புகழ்பூத்து நின்ற பேருருவம், அக்காலத்தில் தமிழகத்தில் அவருக்கு நிகரான அறிஞர்கள் கிடையாது. சிங்காரவேலரும் பெரியாரும் இணைந்த பின்னர் தமிழகத்தில் ஒரு பேரியக்கமே உரு

வானது. தமிழகத்தில் 400-க்கும் மேற்பட்ட சுயமரியாதைச் சமதர்ம இயக்கங்கள் தோற்றுவிக்கப்பட்டன. இவ்வியக்கத்தின் வளர்ச்சி கண்டு அரசே அஞ்சியது. சுயமரியாதைச் சமதர்ம இயக்கம் அரசால் தடுக்கப்பட்டது. பெரியார் பிளவு வழி போனார். நீதிக் கட்சியை ஆதரித்தார். அது தனி வரலாறானது.

31-1-1933-இல் சென்னை ஒயிட்ஸ் நினைவுக் கூட்டத்தில் நிடைபெற்ற நாத்திகர் மாநாடு தனித்தன்மை வாய்ந்தது. இந்த மாநாட்டின் தனித்தலைவர் போற்றுதலுக்குரிய சிங்காரவேலர். அப்பொழுதே அவருக்கு வயது 73. பாரதிதாசனுக்கு அப்பொழுது வயது 27. இந்த மாநாட்டில் கலந்துகொண்டுதான் பாரதிதாசன் இனி நான் எப்பொழுதும் நாத்திகன் என்று எழுதினார். அந்த உணர்வு அவர் இறுதி மூச்சுவரை இருந்தது. பெரியார் தனிமனித ஆளுமைக்கும், தனித்தன்மைக்கும் பெயர் போனவர். பிறப்பால் செல்வந்தரான அவர் வளர்ந்த முறை அப்படி. தன் முடிவே தனித்தன்மை வாய்ந்தது என வாதிடும் வல்லவர். வயதான காலத்தில் தனக்கும் மணியம்மைக்கும் திருமணமென்று முடிவெடுத்தாரே அதுதான் பெரியார் எடுத்த தவறான முடிவுகளுக்கெல்லாம் சிகரம். இந்தச் செய்தியைக் கேட்ட அண்ணா அதிர்ந்துபோனார். கலைஞர் கண்ணீர் சிந்தினார். அன்பர்கள் அழுது புரண்டனர்.

இந்தச் சமயத்தில் பாவேந்தர் சொன்ன சொற்கள் இன்றைக்கும் நினைத்தற்குரியன.

''ஈ.வே.ராவைப் பெரியார் ஆக்கிய பெருமை
ம.சிங்காரவேலருக்குண்டு. அவர் உயிரோடிருந்தால்
இந்தத் தப்பெல்லாம் பெரியார் செய்யமாட்டார்.''

என்று பாவேந்தர் நொந்து புலம்பினார். அங்குசமாக இருந்து பெரியார் என்னும் யானையை வழிநடத்த சிங்காரவேலர் இல்லையே என இவர் வருந்தினார். இங்கே பெரியாரை வளர்த்தவர் சிங்காரவேலர்தான் என்ற நுட்பத்தையும் பாவேந்தர் தெளிவாகச் சொல்லுகின்றார். ஆளுகின்றவர்களை அனுசரித்தே காரியங்களை ஆக்கிக் கொள்ளலாம் என்ற முடிவையும் பெரியார் வரலாற்றில் அடிக்கடி எடுத்ததுண்டு. இயக்கத்திற்கு இதனால் விளைந்த சாதனைகளை விட வேதனைகளே அதிகம். பெரியாரின் தாடி ஆளுகின்றவர்களின் பக்கம்தான் அசைந்து கொண்டிருக்குமென்ற பழிமொழியொன்றே பழமொழியாகவும் ஆனது. ஆனால், பாவேந்தர் இந்த வசைமொழி கேட்டு உள்ளம் ஒடிந்தார். குறைகூறுவோரைச் சாடவேண்டுமென மனம் சொன்னாலும் பெரியாரிடம் உள்ள மனத்தடுமாற்றத்தைக் கண்டு மனவேதனையும் அடைந்தார். 1955-இல் நடைபெற்ற அழகிரிசாமி நினைவுநாள் விழாவில் இதனைப்பற்றி வெளிப்படையாகவே சொல்லவும் செய்தார்.

எண்ணத்தில் பலம் குறைய ஆரம்பித்தால் கோழையும்
மோழையும்தான் தோன்றுவான். சுயமரியாதை
இயக்கம் இந்த வேலையைத் தொடக்கத்தில்
சிறப்பாகச் செய்தது. ஆனால் பெரியார்
ஆளவந்தானுங்களோட சேரச்சேர நாம் நோயாளி
ஆகிவிடுகிறோம்.

என்று குறிப்பிட்டார். இப்பொழுதெல்லாம் பெரியார் கோடாரியை விற்றுவிட்டுக் குண்டூசியை வாங்கும் முயற்சியில் ஈடுபட்டுள்ளார் எனப்பேசவும் செய்தார். உயிரைக் காப்பதற்கு உடலைக்கூட இழந்துவிடலாம். ஆனால் உடலைக் காப்பதற்கு உயிரை இழந்தால் பிணமென்ற பெயர் விந்துவிடுமே எனப் புலம்பவும் செய்தார்.

வடநாட்டில் இருக்கும் காந்திக்கு இணையாகப் பெரியாரை ஆக்கத் தென்னாட்டு மக்கள் ஆர்வம் கொண்டனர். காந்திக்கு இணையாக இராமசாமிப் பெரியார் என்ற பட்டத்தை மகளிர் மாநாட்டில் நீலாம்பிகை அம்மையார் வழங்கினார். ஆனால் இராமசாமியைப்பெரியார் ஆக்கியது யார்என்று நேற்றுவரை விடுவிக்கப்படாமல் இருந்து வந்த வினா. சிங்காரவேலர் அறிவுரையின்படிதான் அவர் பரிந்துரையோடுதான் பெரியார் இரஷியா சென்றார். என்பது இன்று கிடைத்துள்ள புதிய தகவல். ஈ. வே. ராவைப் பெரியார்

ஆக்கிய பெருமை சிங்காரவேலருக்குண்டு என்பது பொருளுடைய மொழியல்லவா?

சிங்காரவேலரையும் பெரியாரையும் மிக நன்றாக அறிந்த பாவேந்தர் இந்தப் பேருண்மையைத் தமிழக அரசில் நெருக்கடி வந்த பொழுது தெளிவாகக் கூறுகின்றார்.

தமிழக வரலாற்றில் பெரியார் தனித் தன்மை வாய்ந்தவர். தனி வரலாறு படைத்தவர். புதிய கொள்கைகளையும், புரட்சி வாதங்களையும், பொதுவுடைமைத் தத்துவங்களையும் குழைத்தும், குழப்பியும் பேசியவர். தனி மனித ஆளுமைக்கு முதன்மை தரும் பெரியார் நெருக்கடிகள் வந்தபொழுதெல்லாம் வழுக்கிக் கொண்டு போனவர் என்பதை வரலாறு நன்கறியும். 1934-இல் பொதுவுடைமையா, தனிவுடைமையா என்ற நெருக்கடி எழுந்தது.

பெரியார் சிங்காரவேலர் நட்பு அத்தனை பேரையும் நட்டாற்றில் விட்டுவிட்டு நீதிக் கட்சியை ஆதரித்து தன்னைக் காத்துக் கொண்டவர்.

இன விடுதலை என்பது சிந்தனையாக அரும்பிப் பின்னர் செயலாக முடிவெடுப்பது. செயலாக்கம் பெறாத சிந்தனை வியர்த்தம். சிந்தனையே இல்லாத செயல் கொடுமையானது. பெரியார் சிந்தித்தார். அனைத்துக்கும் செயல் வடிவம் தந்தார் எனச் சொல்ல முடியாது. செயல்பாடு தேவையானபோது ஒதுங்கினார்; சிலபோது பதுங்கினார்.

தொண்டர்கள் சிங்காரவேலரையும் பெரியாரையும் யாரை எங்கே வைக்க வேண்டுமென்ற பக்குவம் தெரிந்து இருந்தது. அவரே இருவரையும் ஒப்பிட்டுத் தெளிவாக வேறுபடுத்திக் காட்டுகின்றார்.

> பெரியார் செய்யிறது புரட்சி இல்லே
> சீர்திருத்தம்தான். சீரழிஞ்சி கிடக்கிற
> திராவிட
> மக்களைச் சிந்திக்க வைத்து தங்கள்
> அழிவுக்கும்
> அடிமைத் தனத்துக்கும் யார், எது காரணம்
> என்பதை மட்டும் பெரியார் செய்கிறார்.
> புரட்சியை ஒரு லெனின், ஒரு மாவோ, ஒரு
> ஓசிமின் போன்றவர்கள் தான் செய்வாங்க,
> சமூகம், அரசியல் இரண்டும்
> இணைந்தது, அது.
> அந்த வேலையைக் கிழவன் செய்தால் நான்
> புரட்சிப் பெரியார் என்று ஆயிரம் ஆயிரம்
> பாடல்
> பாடுவேன். சீர்திருத்தவாதியிடமுள்ள
> எல்லாத்
> தகுதியும் பெரியாரிடம் உண்டு. ஆனால்
> புரட்சிக்குரிய
> தன்மையெல்லாம் சிங்காரவேலரோடு
> செத்தது.

என்று பாவேந்தர் குறிப்பிடுகின்றார். இருவரோடும் இணைந்து பழகியவர் பாவேந்தர். பாண்டிச்சேரியில் வாழ்ந்த பாவேந்தர் பொதுவுடைமை தொடர்பான பல இரகசிய செய்திகளையெல்லாம் அறிந்தவர் ஆவர். 1920-களில் ஆயுதம் கடத்திப் புரட்சிக்குச் சிங்காரவேலர் முயன்றதாகப் பல இரகசிய குறிப்புகள் ஆவணக் காப்பகத்தில் அடங்கிக் கிடப்பதை இன்று பார்க்கிறோம். சிங்காரவேலரோடு புரட்சி செத்தது என்று பாவேந்தர் குறிப்பிடுவது வெற்று மொழியல்ல; அது பொருளுடையது என்பது இன்றைக்கு நமக்குப் புரிகிறதல்லவா?

---

## இறத்தல் நன்றே !

மிகுகோயில் அறத்தலைவர் அறநிலையக் காப்பாளர் விழாவெ டுப்போர்
தகுமாறு மணம்புரிவோர் கல்விதரும் கணக்காயர் தம்மா ணாக்கர்
நகுமாறு நந்தமிழை நலிவுசெயுந் தீயர்களோ? நல்வாழ் வுக்கோர்
புகும்ஆறு புறக்கணித்தும் தமிழருயிர் வாழ்வதினும் இறத்தல் நன்றே!

**புரட்சிக் கவிஞர்-தமிழியக்கம்**

---

# மரபு வழி நிற்கும் மாபெரும் வீரக் கவிஞன்

பேராசிரியர் சாலை இளந்திரையன்

ஒரு பகுதியில் வாழுகின்ற ஒரு மக்கட் கூட்டம், தனது சுற்றுச் சார்புகளுக்கு ஏற்ற விதமாகவும் தனது பொதுத் தேவைகளுக்கு ஏற்ற விதமாகவும் தனக்கென்று ஒரு மொழியைப் படைத்துக் கொள்ளுகிறது.

ஒவ்வொரு இனத்தொகுதியும் தனக்கென்று சில தனிப்பட்ட மரபுக் கூறுகளைப் பெற்றே இருக்கிறது. இந்த மரபுக்கூறுகள் ஒவ்வொரு இனத்தினாலும் பேணிக் கடைப் பிடிக்கப்பட்டு வருவதோடு, அந்த இனத்தின் அறிஞர்கள், கவிஞர்கள், தலைவர்கள் போன்றவர்களும் அவற்றைக் கொண்டே தங்கள் இனத்தை நடத்திச் செல்லுகிறார்கள். மரபு என்பது ஓர் இனத்தின் தனித் தன்மையைக் கண்ணும் கருத்துமாகக் காப்பாற்றி வருவதால், அந்த இனத்தின் கவிஞர்கள் அதனை அடியொற்றியே தங்கள் இலக்கியங்களை உருவாக்குகிறார்கள். இந்த இயல்பு மாறும் போதெல்லாம் அந்த இனம் சாய்ந்து சரிந்து கீழே விழுகிறது; அது சீராகக் காப்பாற்றப் படும்போதெல்லாம் வீறார்ந்த வாழ்க்கையில் மேலோங்குகிறது. இந்த உண்மையை நன்கு உணர்ந்து இலக்கியம் படைத்தவர்கள் சங்க காலப் புலவர்கள். அவர்களுக்குப் பிறகு, பல்வேறு நிலைகளில் சிதைக்கப்பட்ட தமிழ் மரபை மீட்டெடுத்து நிலைநாட்ட முயன்றவர்களில் முதன்மையான ஒருவன் புதுவை தந்த சுப்புரத்தினப் புரட்சிக் கவிஞன்.

## வாழ்வியல் மரபு

இன்று, தமிழர்களின் சிறப்பை எடுத்துப் பேச வருகிற ஒவ்வொருவரும் மறவாமல் எடுத்து முழக்கும் கவிதை வாசகம் ஒன்று உள்ளது. அதுதான், புறப்பொருள் வெண்பாமாலை தரும்,

கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே,
வாளொடு
முன்தோன்றி மூத்தகுடி

என்னும் வீரவாசகம்.

அந்த வகையில் தமிழரின் மரபு என்பது வாளொடு தோன்றிய வீரமே என்பதைப் புறப்பொருள் வெண்பாமாலை தனித்து எடுத்து, உயர்த்திக் காட்டுகிறது. இது, ஏதோ தற்செயலாகவோ தனி ஒருவர் விருப்பமாகவோ வெளிப்பட்ட நிகழ்ச்சி • அல்ல; இதற்கு ஆதாரமான முன்தொடர்ச்சி சங்க இலக்கியத்தின் அடிநாதமாகவே அமைந்து கிடக்கிறது

காதல், ஈகை, சான்றாண்மை போன்ற பல இயல்புகளை அங்கங்கே தொட்டுச் செல்லும் சங்க இலக்கியம், மனிதனின் வீரத்தை ஆணித்தரமான அழகுப்பாடல்களால் அழுத்தமாக விவரிக்கிறது.

தமிழின் இடைக்கால இலக்கியங்கள் என்பவை எல்லாம், அவநம்பிக்கையையும் அதற்கு ஊன்றுதுணையான ஆண்டவன் நம்பிக்கையையும் எடுத்துச் சொல்லித் தமிழரின் வீரமரபையே கீழறுத்துவிட்டன. ''மரபுநிலை திரியின் பிறிது பிறிதாகும்'' என்னும் சூத்திரம், வெறும் சொற் பொருள் மரபுக்கு மட்டுமல்லாமல் வாழ்வியல் பொது மரபுக்கும் பொருந்தக் கூடியதே: 'காக்கை' என்கின்ற சொல்லை யாரோ சிலபேர் 'மூச்சி' என்று மாற்றிச் சொன்னால் அந்தச் சொல் காக்கை என்னும் பறவையை உணர்த்த மாட்டாதது போலவே, தமிழர்களின் பொது இயல்பாக உயர்ந்து நின்ற வீரத்தை மாற்றி அதனுள்ளே பக்தி வருணப்பிரிவு போன்ற கோட்பாடுகளை நுழைத்ததால் தமிழர்களின் வழிவழிச்சிறப்பு மலர்ச்சி பெறாமல் போயிற்று என்பதைத் தமிழர்களின் கடந்த 2000 ஆண்டு வரலாறு மெய்ப்பித்துக் கொண்டு இருக்கிறது. வீட்டுவாசல் முதல்

எதிரியின் போர்க்களம் வரை வீரமான செயல்களே புரிந்து விம்மிதமாக வாழ்ந்து வந்த தமிழினம், கடந்த 2000 ஆண்டுகளில், 'அடியேன், எளியேன், நாயேன், சிறியேன்' என்பன போன்ற சொற்களுக்கு உடம்பெடுத்த ஊற்றை இனமாக ஒடுங்கிப்போய் விட்டது. வந்தவர்களுக்கெல்லாம் வாசலைத் திறந்து விட்டு வழியடிமை புரியும் மங்கல் இனமாகவும் நிறம் மாறிக் குணம் மாறிப் போய்விட்டது. இந்தப் போக்கையும், புறநானூற்றில் ஒரு வீரன் மொழிகின்ற தெம்புக் குரலையும் ஒப் பிட்டுப் பாருங்கள்:

> மெல்ல வந்து என் நல்லடி பொருந்தி
> ஈயென இரக்குவ ராயின்-,
> முரசுகெழு தாயத்து இவ்அரசோ தஞ்சம்,
> என் இன்னுயிராயினும் கொடுக்குவென்!

இந்த வீரன்தான் அன்றையத் தமிழினத்தின் அப்பட்டமான பிரதிநிதி. பிறன் ஒருவன் தன்னுடைய வீரத்தைப் பழித்துவிட்டதற் காக இத்தனை கொதிப்புக் கொதிக்கிறான் இந்த வீரன். இன்றைய தமிழனையும் இவ னையும் ஒப்பிட்டு நோக்கும்போது, தமிழன் தன் வீர மரபிலிருந்து எத்தனை தொலைவு விலகிப் போயிருக்கிறான் என்பது தெள்ளத் தெளிவாக விளங்குகிறது. தேசியம் என்ற பெயரால், தேவபாடை என்பதன் பெயரால், 'சங்கீதத்துக்கு ஏற்ற பாஷை' என்பதன் பெய ரால் -ஏன், வயிற்றுப் பிழைப்புக்கு ஒரு வேலைவாய்ப்பு என்கிற பொய்ம்மையின் பெயரால்,-இன்றையத் தமிழன் தனது இன உரிமையை, கலை உரிமையை,-மொழி உரிமையை இவை அனைத்தின் ஒட்டுமொத்த தத் தொகுவிளைவான வாழ்வு உரிமையையே மற்றவர்களுக்குத் தாரை வார்த்துவிட்டு வளைந்து நிற்கிறான்!

## கவிஞன் எழுந்தான்

இந்தப் பெரிய மரபு நிலை வீழ்ச்சியை மீட்டெடுக்க வேண்டியது தனது கடமை என்பதை உணர்ந்த புரட்சிக் கவிஞன்,-தமிழர் களின் மூச்சிலே வாள்களையும் வேல்களையும் மிஞ்சும் வல்லமையை, ஒரு புதிய வீர எழுச் சியை உண்டாக்க வேண்டும் என்பதை உணரு கிறான். அதன் காரணமாகவே, நலிந்து கிடந்த தமிழ் இலக்கியத்துக்குத், தாலாட்டுப் பாட்டிலேயே வீர ஊட்டம் பாய்ச்சுகிறான்:

இளைய தமிழர்களைக் கூட்டி வைத்துக் கொண்டு, அவர்களுக்கு வாழ்க்கை வழி காட்டுகிறான் சுப்புரத்தினப் புரட்சிக் கவிஞன்:

> நாட்டின் வேரில் புகுந்த கேட்டை
> எண்ணி எண்ணி அழுது கொண்டிருப்பதால்
> பயனென்?- பகையின்
> முதுகெலும்பு உடைத்து
> வரும் சாக்காட்டையும் வரவேற்க வேண்டும்!

நாட்டின் வேரிலேயே கேடு புகுந்த வரலாற் றையும் அது பெரும் கேடாகப் படர்ந்துவிட்ட கெடு கேட்டையும் 'குறிஞ்சித்திட்டு' என்னும் கவிதைக் கதையில் அணிஅணியாக விளக்கிக் காட்டுகிறான் கவிஞன்; அப்படி நிகழ்ந்து விட்ட இன அழிவை மாற்றுவதற்கு உரிய மருந்து என்ன என்று சிந்தித்த போதுதான் கவிஞனுக்கு மேலே குறித்த வழி தென்படு கிறது; தமிழரின் மரபு வழுவாத வீரநெறி, பகையின் முதுகெலும்பு உடைத்து அதிலே ஒரு வேளை வரக்கூடிய சாக்காட்டையும் வர வேற்று மகிழும் தமிழர்தம் வீர மரபு நெறி!

## பெண்பாலாரும்...

அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்னும் நான்கடுக்கு வேலிக்குள்ளே, வெயில் படாது வெளிறிப் போகும் செடிகளைப் போல வளர்க் கப்பட்டு வந்த பெண்களுக்குக் கூட வீரம் வேண்டும் என்பதை மறவாமல் எடுத்துரைக் கிறான் புரட்சிக் கவிஞன்:

> சேயிழைமார் நெஞ்சம் மீது- நாம்
> சீறு புலியைக் காணும் போது
> தீயதோர் நிலைமை ஈக்கு ஏது?- நம்
> தென்னாட்டின் அடிமை நில்லாது!

பெற்ற மகனைப் போர்க்களத்துக்கு அனுப்பி விட்டு, 'அவன் வெற்றியோடு திரும்பி வர வேண்டும் அல்லது வீரமரணம் அடைய வேண் டும்' என்று நினைத்துக் கிடப்பவள் தமிழ்த் தாய்; பழந்தமிழ் வீரத்தாய். அந்த வீரத்தா யைக் சோனபுத் தாயாசச் ருன்வித்து, தன்

மகன் ரெயில் பயணம் மேற் கொண்டால் கூட, அவனைக் காப்பாற்றித் தரவேண்டும் என்று சாமி படங்களின் முன் குனிந்து நிற்கச் செய்து விட்டது இடையில் புகுந்த எதிரி களின் கைத்திறமை.

## மீட்டு நினைவூட்டல்

இதை, யாரோ ஒரு வேட்டுவச் சாதியின ருக்கு விடுத்த எச்சரிக்கையாகக் கொள்ளாமல், மரபுநிலை திரிந்து வாழ்வுநிலை கெட்டுப் போன தமிழர் அனைவருக்கும் விடுக்கப்பட்ட எச்சரிக்கையாகக் கருதியிருந்தால்,- தமிழர்கள் அன்றைக்கே, தடம் புரண்டு போன தங்கள் வாழ்க்கைப் பயணத்தைச் சரிசெய்திருப்பார் கள். யாரோ ஒரு காட்டுக் கிழவியின் கூச்சல் என்று சொல்லி அதைக் கழித்துப் போட்டு விட்டதால் தமிழர்களின் வாழ்க்கை, தனது மரபு வழியிலிருந்து வெகு தொலைவு விலகிப் போய்விட்டது.

வீரம் விளைவிப்பது என்பது ஏதோ வேண்டாத செய்தி என்பது போலக் கருதிக் கொண்டு, தமிழர்கள், 'நாகரிகம்' என்பதன் பேரால் பஞ்சுத்தனங்களிலே படுக்கப் போய் விட்டதால், தங்கள் மரபை மட்டும் அல்லா மல் தங்கள் வாழ்வையே இழந்து போனார் கள்! அதை நன்கு புரிந்துகொண்ட புரட்சிக் கவிஞன், வீழ்ச்சியுற்ற தமிழர்களை மீண்டும் வீரமேறிய தமிழர்களாகக் காண விரும்பு கிறான். அந்த விருப்பத்தையே ஒரு வீரக் கனவாகவும் அவன் காணுகிறான்: "பார்த் தொழில் அனைத்தும் கொண்ட பயன்தரும் ஆலைக் கூட்டம்" வளர்ந்து செழிக்க வேண்டும் என்று ஆசைப் படுகிற அதே மூச்சில் "அணிபெறத் தமிழர் கூட்டம் போர்த்தொழில் பயில்வது எண்ணிப் புவியெலாம் நடுங்கிற்று என்ற வார்த்தையைக் கேட்டு நெஞ்சு மகிழ்ந்து கூத்தாடல் என்றோ? என்றும் ஏங்குகிறான்; கள்ளம் கலந்து உள்ளம் உடைந்துபோன தமிழர்களையே "வெள்ளம் போல் தமிழர் கூட்டம், வீரங்கொள் கூட்டம்" என்று விரும்பிச் சொல்லி மகிழ் கிறான்! அது மட்டுமா? தமிழர்கள் அனை வரும் வீரங்கொள் வித்தகர்களாக விளங்கித் தமிழர்களுக்கு எதிரான சழக்கர்களை ஒழித் துக் கட்டவேண்டும் என்றும் ஓங்கி நினைக் கிறான்:

தறுக்கினால், பிறதேசத்தார்
தமிழன்பால் எந்நாட்டான்பால்
வெறுப்புறும் குற்றம்செய்தார்;
ஆதலால், விரைந்து அன்னாரை
நொறுக்கினார் முதுகெலும்பைத்
தமிழர்கள்! என்ற சேதி
குறித்தசொல் கேட்டு இன்பத்தில்
குதிக்கும் நாள் எந்த நாளோ?

என்னும் பெருவிழைவு கொள்ளுகிறான் இந்தக் கவிஞன். ஏன் இப்படி எல்லால் கண்டு கண்டு, வீரம் சொல்லிச் சொல்லி விழைவு பூண்கிறான் இக்கவிஞன் என்றால்,- அவனு டைய மரபு வீரமரபு; தோல்வியைக் காணாத பெரிய மரபு.

கடைசியாக, ஒரு பெரிய விழைவை வெளியிடுகிறான் புரட்சிக் கவிஞன். அதிலே யும் தமிழர் தம் வீர மேம்பாட்டு மரபு விம்மித மாக வீற்றிருக்கிறது; படிக்கும் ஒவ்வொருவர் உள்ளத்தையும் வன்மை வாய்ந்ததாக்கி முறுக் கேற்றுகிறது:

வீழ்ச்சியுறு தமிழகத்தில் எழுச்சி வேண்டும்!
விசையொடிந்த தேகத்தில் வன்மை
வேண்டும்!
சூழ்ச்சிதனை, வஞ்சகத்தை, பொறாமை
தன்னைத்
தொகையாக எதிர்நிறுத்தித் தூள் தூ
ளாக்கும்
காழ்ச்சிந்தை, மறச்செயல்கள் மிகவும்
வேண்டும்!..

தமிழனுக்கு வேண்டியது என்ன என்ற திட் டத்தை நினைக்கும் போது,- சிற்சில சங்கதி கள் முதன்மையாக அவர்களுக்கு வேண்டும், உடனடியாக அவர்களுக்கு வேண்டும், உறுதி யாக அவர்களுக்கு வேண்டும், என்று செப்பு கிறான் கவிஞன். அந்த ஒவ்வொன்றிலும் வேகம் விரைவு கூட்டுகிறது; வீரம் குவிந்து பேசுகிறது; எதிர்காலத் தமிழனின் ஏற்றம் அவனுடைய மறச்செயல்களில் தான் துலங்கப் போகிறது என்னும் மாபெரும் செய்தி ஓங்கித் துலங்குகிறது. இந்தப் பாட்டடிகளின் ஒவ் வொரு சொல்லிலும் தொடரிலும் எழுந்து கமழ்கின்ற வீரம் தமிழனின் மரபிலே பிறந்த வீரம். அதை இத்தனை அழுத்தம் திருத்தமாக வலியுறுத்தியதன் மூலம், நமது புரட்சிக் கவிஞன், தமிழ்த்தடம் மாறாத தறுகண்மைப் பெருங்கவிஞனாக விளங்குகிறான். தன்னு டைய மூச்சும் பேச்சும் முயற்சியும் எல்லாம் தமிழ் மரபின் வழிவந்த தமிழின் உயர்வீரமே என்று உறுதி செய்ததன் மூலம், "மரபுவழி நிற்கும் ஒரு மாபெரும் வீரக்கவிஞன்" என்று தன்னை நிலை நாட்டிக் கொண்டான் சுப்பு ரத்தினப் புரட்சிக்கவிஞன்.

# பாட்டாலடிப்போம் பகை!

கவிஞர் நெல்லை இராமச்சந்திரன்

ஆர்ப்பான் தமிழறிய; ஆய்வான் தமிழழிக்கப்
பார்ப்பான் நமக்குப் பகையேதான்! - தோற்போமா?
மீட்டி இனங்காப்போம்! மின்னலிடிப் பாவேந்தன்
பாட்டா லடிப்போம் பகை.

ஆட்சிக்கு நாடிருந்தும்; ஆளவிங்கு நாமிருந்தும்
மாட்சி குலைந்ததம்மா மாத்தமிழும் - காட்சியாய்க்
காட்டி கனிதமிழர்க் கண்மறைத்தார்; பாவேந்தன்
பாட்டா லடிப்போம் பகை.

ஊறுந் தமிழ்த்தேனில் உப்பெடுத்துக் கொட்டிவரும்
நாறும் பகையாலே நாமழிந்தோம் - சீறுபகை
ஓட்டச் செழுந்தமிழா ஓடிவா! பாவேந்தன்
பாட்டா லடிப்போம் பகை.

நாயா? நரியா? நளிதமிழா! நீயென்ன
பேயா? பிணந்தின்னி வாயா?சொல்! - ஓயாதே
மூட்டும் பகைத்தீ முளைவேரைப் பாவேந்தன்
பாட்டா லடிப்போம் பகை.

பாழ்பட்டாய்! நாளும் பழிபட்டாய்; பைந்தமிழா!
யாழ்பட்ட பாட்டே!நீ ஏன்கெட்டாய்? - பாழ்ப்பார்ப்பான்
ஓட்டைப் படகுவிட்டே ஓடிவா பாவேந்தன்
பாட்டா லடிப்போம் பகை.

வாட்காட்டும் கண்காட்டி வண்ணச் சதைகாட்டி
நாட்காட்டி ஏய்க்கும் நடைகாட்டி - ஆட்கூட்டிக்
கோட்டை நுழைந்ததம்மா! கோள்பகையும்; பாவேந்தன்
பாட்டா லடிப்போம் பகை.

என்ன இழவோ! எடுபிடிகள் நம்மோருள்
தின்னப் பொறுக்கும் தெருநாயாய் - அன்னோரைத்
தோட்டா வரிகொண்டு தூள்செய்வோம்! பாவேந்தன்
பாட்டா லடிப்போம் பகை.

சின்ன நரித்தனத்தார் செந்தமிழைச் சாய்ப்பதற்குப்
பின்னும் வலையெல்லாம் பூணூலால் - இன்னுமென்ன?
ஈட்டி துளைக்கட்டும்! ஈனோரைப் பாவேந்தன்
பாட்டா லடிப்போம் பகை.

ஆண்டவனுக் காகாதாம்; அர்ச்சனைக்கும் ஒவ்வாதாம்;
ஆண்டதமிழ் இன்றோ அவலத்தில் - வேண்டுமென்றே
பூட்டிச் சிறைபோட்டார்! பூந்தமிழை! பாவேந்தன்
பாட்டா லடிப்போம் பகை.

பெரியார் வழிநின்றே; பேரறிஞர் வாழ்ந்தும்;
நரியார் நமையாளல் நன்றோ - சிறியோரே!
ஆட்டம் நிறுத்திடுவீர்! ஆமாமாம் பாவேந்தன்
பாட்டா லடிப்போம் பகை.

# புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் இறுதிக்காலம்

**குடந்தை வீரா. இராசகோபாலன், பி.ஓ.எல்.,எம்.ஏ.**

14.4.1964 என நினைவு, அன்று மாலை நானும் பெரியார் பேருரையாளர், புலவர் திரு ந. இராமநாதன் அவர்களும் புரட்சிக் கவிஞர் அவர்களைக் காண, சென்னை, தியாக ராய்நகர் இராமன் தெரு, 10-ஆம் எண் வீட்டிற்குச் சென்று, புரட்சிக் கவிஞர் அவர்களைக் கண்டு உரையாடிக் கொண்டிருக்கையில் புரட்சிக் கவிஞர் அவர்கள் "மகாகவி பாரதி படம் எடுப்பது தொடர்பாக திரு ஜி.டி. நாயுடு அவர்களைப் பார்ப்பதற்கு இன்று இரவு கோயம்புத்தூருக்குச் செல்லவிருக்கிறேன்". என்று சொன்னார். அப்பொழுது புரட்சிக் கவிஞர்தம் துணைவியார் திருமதி பழனியம்மாள் அவர்களும், இன்னொருவர் தாயாரம்மாள் என்று சொல்வார்கள்: அவர்களும் என்னோடு வந்து 'காலையில் இருந்து நெஞ்சு வலிக்கிறது என்று சொல்கிறார்; மருத்துவரிடம் காட்டுங்கள் என்று சொன்னால் கேட்க மாட்டேன் என்கிறார். என்று சொன்னார்கள். நானும், நண்பர் புலவர் திரு ந. இராமநாதன் அவர்களும் புரட்சிக் கவிஞர் அவர்களைக் கேட்டதற்குப் புரட்சிக் கவிஞர் அவர்கள் "அப்படி ஒன்றும் இல்லை; இலேசாகத்தான் வலிக்கிறது." என்றார். நானும், நண்பர் புலவர் திரு ந. இராமநாதன் அவர்களும் "இரவு தானே கோயம்புத்தூருக்குச் செல்லப் போகிறீர்கள். எதற்கும் இப்பொழுது மருத்துவரிடம் காட்டலாம் வாருங்கள்" என்று வற்புறுத்த புரட்சிக் கவிஞர் அவர்கள் சரி என்று சொல்லி புரட்சிக் கவிஞர் அவர்களுக்கு வேண்டிய மருத்துவர் சென்னை ஸ்டான்லி மருத்துவமனையில் இருக்கிறார். அவரைப் போய்ப் பார்க்கலாம் என்று சொல்ல, நான், நண்பர் புலவர் திரு ந. இராமநாதன் அவர்கள், புரட்சிக் கவிஞர் அவர்கள் ஆகிய மூவரும் வாடகை உந்து வண்டியில் (TAXI) சென்னை ஸ்டான்லி மருத்துவமனை நோக்கிச் சென்று கொண்டு இருக்கையில் மத்திய சிறைச் சாலைக்கு அருகில் வரும் பொழுது புரட்சிக் கவிஞர் அவர்கள் நெஞ்சு வலி பொறுக்க மாட்டாது துடிக்க, நானும் நண்பர் புலவர் திரு ந. இராமநாதன் அவர்களும் உடனே சென்னை பொது மருத்துவ மனை இடைவிபத்தரங்கத்திற்குப் (G.H. CASUALTY) புரட்சிக் கவிஞர் அவர்களைக் கொண்டு சென்றோம். அங்குப் புரட்சிக் கவிஞர் அவர்களைப் பரிசோதித்து, அய்ந்தாவது மருத்துவனைப் படுக்கைத் தொகுதியில் (WARD No.5) சேர்த்தார்கள். அத்தொகுதிப் பொறுப்பு மருத்துவர் (WARD DOCTOR) திரு டாக்டர் ஏ.எல். அண்ணாமலை அவர்கள் என்பதறிந்து, நானும் நண்பர் புலவர் திரு ந இராமநாதன் அவர்களும் திரு டாக்டர் ஏ.எல். அண்ணாமலை அவர்கள் வீட்டிற்குச் சென்றோம். அங்கு திரு டாக்டர் ஏ. எல். அண்ணாமலை அவர்களின் துணைவியார் திருமதி டாக்டர் உருபி அவர்களுடைய உடன் பிறந்தவர் வந்து "அவர் இல்லை" என்று சொன்னார். நானும் நண்பர் புலவர் திரு ந. இராமநாதன் அவர்களும் அவர்பால் புரட்சிக் கவிஞர் அவர்கள் மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டுள்ள விவரத்தைச் சொல்லிவிட்டு வந்தோம். மறுநாள் காலை மீண்டும் திரு டாக்டர் ஏ.எல். அண்ணாமலை அவர்களைப் பார்ப்பதற்காக அவர் வீட்டிற்குச் சென்ற எங்களிடம் திரு. டாக்டர் ஏ. எல். அண்ணாமலை அவர்களின் மைத்துனர் வந்து "அவர் இல்லை" மருத்துவத் தேர்வுக் கண்காணிப்பாளராகப் (MEDICAL EXAMINATIONS' SUPERINTENDENT) போயிருக்கிறார்; அவர் மருத்துவமனைக்கு வர மாட்டார்; அவரைப் பார்க்க முடியாது" என்று சொல்ல அவருக்கும், எங்களுக்கும் இடையே சிறிது வாக்குவாதம் ஏற்பட்டது.

மருத்துவமனையில் சேர்க்கும்போது வருமானம் கேட்டார்கள். அப்பொழுது புரட்சிக் கவிஞர் அவர்கள் ஓய்வூதியம் (PENSION) எண்பது ரூபாய் என்று சொன்னார்கள். ஆகவே, பின்னர் நானும் நண்பர் புலவர் திரு. ந இராமநாதன் அவர்களும் சிறப்பு முறையான மருத்துவமனைப் படுக்கைத் தொகுதிக்கு (SPECIAL WARD) மாற்ற முயன்றபோது குறைந்த வருமானம் கொடுத்திருப்பதால் மாற்ற முயலாது என்றார்கள்.

நண்பர் புலவர் திரு ந. இராமநாதன் அவர்கள் அப்பொழுது பெரியார் பேருரையாளர் அல்லர், தஞ்சை கரந்தை தமிழ்க் கல்லூரியில் முதல்வராகப் பணியாற்றிக் கொண்டு இருந்தார். ஆகவே, அவர் மறுநாள் இரவு தஞ்சை சென்றுவிட்டார் நான், சென்னை மீனம்பாக்கம் ஏ. எம். ஜெயின் கல்லூரித் தமிழ்த் துறையில் பணியாற்றிக் கொண்டு இருந்த காலம். நான் தினந்தோறும் காலையில் கல்லூரிக்குச் செல்வதற்கு முன் மருத்துவமனைக்குச் சென்று, புரட்சிக் கவிஞர் அவர்களுக்குப் பணிவிடைகள் செய்து விட்டுப் பிறகு கல்லூரிக்குச் செல்வேன். அதேபோன்று மாலையில் கல்லூரி விட்டதும், நேராக மருத்துவமனைக்கு வந்து, புரட்சிக் கவிஞர் அவர்களுக்குப் பணிவிடை செய்து விட்டுப் பிறகு வீட்டிற்கு வருவேன் அவர்தம் துணைவியார் உடனிருந்து வந்தார்.

மருத்துவமனையில் சேர்க்கப்பட்ட எட்டாவது நாள் அதாவது 21-4-1964 என நினைவு. அன்று காலைதான் புரட்சிக் கவிஞர் தம் திருமகன் திரு மன்னர்மன்னன் அவர்கள், அவர்தம் துணைவியாருடன் மருத்துவமனைக்கு வந்தார். அவர்கள் வந்து ஒரு மணி நேரங்கூட ஆகியிருக்காது; புரட்சிக் கவிஞர் அவர்கள் இடது கையில் செருகப்பட்டு இருந்த நீரேற்றூசியைப் புரட்சிக் கவிஞர் அவர்களே பிடுங்கி. எடுத்து, எறிந்துவிட்டுக் கழிப்பறைக்குச் சென்று வந்து படுத்த சிறிது நேரத்திற்கெல்லாம் உடல்நிலை கவலைக்கிடமானது பின் நான் உயிர்த் தண்ணீர் ஊற்றிய சற்று நேரத்திற்குள் அதாவது காலை 8-30 மணியளவில் புரட்சிக் கவிஞர் அவர்களது இன்னுயிர் பிரிந்தது. புரட்சிக் கவிஞர் அவர்களது இன்னுயிர் பிரிகையில் என் தங்கையின் கணவர் திரு இரா. இராமுஅவர்கள், புரட்சிக் கவிஞர் அவர்களுடைய வாயில் விரலை விட்டுப் புரட்சிக் கவிஞர் தம் பல்வரிசைகளை வெளியில் எடுத்தார். அப்பொழுது புரட்சிக் கவிஞர் தம் திருமகன் மன்னர்மன்னன் அவர்கள் வெளி வராந்தாவில் சுவரில் சாய்ந்து கொண்டு உட்கார்ந்து இருந்தார் அவர்தம் துணைவியார் வெளி வராந்தாவில் சுவரில் சாய்ந்து கொண்டு நின்றிருந்தார். புரட்சிக் கவிஞர் தம் துணைவியார் திருமதி பழனியம்மாள் அவர்கள் எம்பால் ''என்னைக் கடலல தள்ளிடுப்பா'' என்று கூறி அழுது புலம்பிக் கொண்டு இருந்தார்கள். அவர்கள்பால் மருத்துவமனை ஆவணங்களில் ஒப்பம் வாங்கிய பின் அவர்களையும், திரு. மன்னர்மன்னன் அவர்களையும், அவர் தம் துணைவியார் அவர்களையும் திரு, தமிழ்வாணன் அவர்கள் வண்டியில் (CAR) ஏற்றி, சென்னை தியாகராயநத்ர், இராமன் தெரு 10-ஆம் எண் அவர்கள் வீட்டிற்கு முதற்கண் அனுப்பி வைத்தோம். புரட்சிக் கவிஞர் அவர்கள் உயிர் பிரிகையில், புரட்சிக் கவிஞர் அவர்கள் தொடர்பாக நான், என் மைத்துனர் திரு.இரா. இராமு அவர்கள், புரட்சிக் கவிஞர் தம் ''துணைவியார் திருமதி பழனியம்மாள் அவர்கள், அவர்கள் தம், திருமகன் திரு. மன்னர்மன்னன் அவர்கள், அவர்தம் துணைவியார் ஆகிய ஐந்து பெயர்களைத் தவிர வேறு எவரும் இல்லை.

புரட்சிக் கவிஞர் அவர்கள் மறைந்ததும், முதன்முதலில் மருத்துவமனைக்குக் கவிஞர் கண்ணதாசன் அவர்கள் வந்தார்கள். அவர்கள்பால் சென்று வீட்டிற்கு எடுத்துச் செல்ல அவர்கள்தம் வண்டியைக் (CAR) கேட்டேன். அதற்கு அவர் ''அதென்ன? வேட்டியா? புடவையா? மடித்து வைத்து எடுத்துப் போவதற்கு? என்று கேட்டு வண்டி கொடுக்க மறுத்துவிட்டார். சென்னை பொதுமருத்துவமனை சவ ஊர்தி அப்பொழுது மூலக்கொத்தளம் போயிருந்தது. அதனால் வேறு வழி இல்லாததால் அவர்தம் வண்டியைக் கேட்டேன். மறுத்துவிட்டார். நான் புரட்சிக் கவிஞர் அவர்களின் பொன்னுடல் சவக்

# அவன்தான் பாவேந்தன்!

ஓவியப் பாவலர் மு. வலவன்

பாட்டுப் புதையலைக் காட்டியவன்
பண்டை வீரத்தையும் ஊட்டியவன்
காட்டுப் புலியெனச் சீறியவன்
கண்ணில் பகைவரை நூறியவன்
அவன் தான் பாவேந்தன்! தமிழ்
அமுதினை நாவேந்தும்!

சந்தத் தமிழெனும் சாறெடுத்து
சங்கப் புலவரின் வீறெடுத்து
முந்தும் கவிதைகள் தீட்டியவன்
மூடத் தனங்களை ஓட்டியவன்
அவன் தான் பாவேந்தன்! தமிழ்
அமுதினை நாவேந்தும்!

விந்தைப் பாரதியும் வழி காட்டி விட
விடுதலைப் பெரியார் நெறி கூட்டி விட
நிந்தை ஆரியத்தை எரி யூட்டிடவே
நெருப்புச் சுடர்களை நீட்டியவன்
அவன் தான் பாவேந்தன் தமிழ்
அமுதினை நாவேந்தும்!

நூற்றாண்டு விழாக்கள் உல கெடுக்க
தோற்றோமே பேறுகள் பா வடிக்க
தோற்றோடாப் பாட்டனைப் பாடிடுவோம்!
தோய்ந்திடும் உறவினில் ஆடிடுவோம்!

---

கிடங்குக்குப் போகாமல் எடுத்து வர முயற்சித்தேன். முடியவில்லை. சவக்கிடங்கிற்குக் கொண்டுபோய் விட்டார்கள். சவக்கிடங்கிற்குக் கொண்டு சென்ற பிறகுதான் டாக்டர் மு. வ. அவர்கள் வந்தார்கள். அவர்கள்பால் சென்று நிலைமைகளை எடுத்துச் சொன்னேன். அவர்கள் அவர் தம் வண்டியைக் (CAR) கொடுத்து உதவினார்கள். அவர்கள் வண்டியில் புரட்சிக் கவிஞர் அவர்களின் பொன்னுடலை ஏற்றி, முற்பகல் சென்னை, தியாகராய நகர், இராமன் தெரு, 10-ஆம் எண் அவர்கள் வீட்டிற்குக் கொண்டு வந்து, பொது மக்கள் பார்வைக்கு வைத்தோம். அப்பொழுது பார்க்க வந்த சென்னை, அண்ணாசாலை அஞ்சலக அலுவலகத்தில் பொது மக்கள் தொடர்பு அலுவலராகப் (P.R.O) பணியாற்றிய செல்வி அனுசூயா அவர்கள் மயக்கம் போட்டு விழுந்தார்கள்.

நான் திரு. மன்னர்மன்னன் அவர்கள்பால் "சென்னையிலேயே அடக்கம் செய்யலாம். சிறப்பாக இருக்கும்" என்று சொன்னதற்கு திரு. மன்னர்மன்னன் அவர்கள் "என் தங்கைகள், உற்றார் உறவினர்கள் எல்லாம் பாண்டிச்சேரிக்குத்தான் வருவார்கள். ஆகவே பாண்டிச்சேரிக்குக் கொண்டுபோய்த்தான் அடக்கம் செய்ய வேண்டும்" என்று வலியுறுத்திச் சொன்னார். பிறகு பிற்பகல் இலட்சிய நடிகர் திரு. எஸ். எஸ். ஆர். அவர்கள் வண்டி (VAN) கொடுக்க அவ்வண்டியில் புரட்சிக் கவிஞர் அவர்களது புகழுடல் புதுவைக்கு எடுத்துச் செல்லப்பட்டது. அப்பொழுது நான் இடது கால் பெருவிரல் ஒற்றம்மையால் அவதிப் பட்டுக்கொண்டு இருந்ததால் என்பால் இருந்த சென்னைப் பொது மருத்துவமனை இறப்புச் சான்றை (G. H. DEATH CERTIFICATE) மயிலை திரு.டி. உலோகநாதன் (திராவிடர் கழகம்) அவர்கள்பால் கொடுக்க, அவர் அவ் வண்டியில் சென்றார். சவ அடக்கத்திற்குப் பிறகு அதாவது மறுநாள் மயிலை திரு.டி. உலோகநாதன் அவர்கள் சென்னை வந்ததும் காலமானார். புரட்சிக் கவிஞர் அவர்கள் மறைவிற்குப் பின் வெளிவந்த "தென்மொழி" பத்திரிகை வாயிலாக இதன் குறிப்புகளை அறியலாம்.

எனவே, புரட்சிக் கவிஞர் அவர்களை நூற்றாண்டு விழா கொண்டாடும் இவ்வேளையில் இவற்றை நினைவுகூர்தல் சாலப் பொருத்தமாகும்.

# பாரதிதாசனின் புரட்சிக் கருத்துகள்!

புலவர் வெற்றியழகன்

அரசனையும் ஆண்டவனையும் ஆள்பவரையும் பாடிக்கொண்டிருப்பதை விட்டு, மக்கள் மக்களாகவும் தமிழர் தமிழர்களாகவும் ஆகப் பாடுவதே புரட்சி எனப்படும்.

மனிதராகப் பிறந்தவர்களை மனிதராக வாழவைப்பது வான்புகழ் வள்ளுவரின் வண்டமிழ்க் குறள் என்றால், தமிழராகப் பிறந்தவரைத் தமிழராக வாழவைப்பதே பாவேந்தரின் புரட்சிக் கவிதைகள்.

புரட்சி என்பது இருப்பதை மாற்றுவது மட்டுமன்று இல்லாததை உண்டாக்குவதுமாகும். மக்களிடையே மண்டிக்கிடக்கின்ற மடமை இருளை விரட்டிப் பகுத்தறிவு ஒளியைப் பாய்ச்சுவதே புரட்சி.

"புரட்சி என்றால் என்ன? ஒரு விஷயம் அதன் பழக்க வழக்க நிலையிலிருந்து மாற்றம் அடைவதும் அதிலும் அது அடியோடு தலைகீழ்நிலை அடையும்படி மாற்றம் அடைவதுமேதான்புரட்சி" என்று புரட்சிக் கருத்துகளின் தந்தை பெரியார் கூறியுள்ளார்.

## தமிழ் மொழிப் புரட்சி

பைந்தமிழ் மொழியைப் பற்றிப் பக்திமான்கள்கூடப் பாராட்டிப் பாடியுள்ளார்கள்.

"தழற்பொலி விழிக் கடவுள் தந்த தமிழ்"
என்று கம்பரும்,

"இருந்தமிழே உன்னால் இருந்தேன்
விருந்தமிழ்தம் என்றாலும் வேண்டேன்"

என்று தமிழ்விடுதூது ஆசிரியரும்,

"யாமறிந்த மொழிகளிலே
தமிழ்மொழிபோல் இனிதாவ தெங்குங் காணோம்"

என்று பாரதியாரும் பாடியிருக்கின்றனர். ஆனால், இவர்கள் எல்லாரையும்விட வேறுபட்ட முறையில் இவர்கள் யார்க்கும் இல்லாத எழுச்சியும் புரட்சியும் மூண்டெழுந்த வகையில் புரட்சிக் கவிஞர் தமிழைப் பற்றிப் பாடியுள்ளார்.

"எனையீன்ற தந்தைக்குந் தாய்க்கும் மக்கள்
இனமீன்ற தமிழ்நாடு தனக்கும் என்னால்
தினையளவு நலமேனுங் கிடைக்கு மென்றால்
செத்தொழியும் நாளெனக்குத் திருநாளாகும்" - என்றும்

"செந்தமிழே! உயிரே! நறுந்தேனே!
செயலினை மூச்சினை உனக்களித்தேனே!
நைந்தாயெனில் நைந்து போகுமென் வாழ்வு
நன்னிலை உனக்கெனில் எனக்குந்தானே"
- என்றும்

"தமிழ் இன்பத் தமிழெங்கள் உயிருக்கு நேர்" என்றும்

பாடிய புரட்சிக் கவிஞர், பெண்தரும் இன்பமே பேரின்பம் என்று பிதற்றிக்கொண்டிருப்போரிடையே,

"மங்கை ஒருத்தி தருஞ் சுகமும் எங்கள்
மாத்தமிழ்க் கீடில்லை"

என்று பெண்ணின்பத்தையும் பின் தள்ளிவிடுகின்றார் புரட்சிக்கவிஞர் அவர்கள்.

தமிழ்மொழி என்றாலும், தமிழினம் என்றாலும் கிள்ளுகீரையாக நினைத்துக்கொண்டிருப்போர்க்குச் சம்மட்டி அடி கொடுக்கின்றார் சமுதாய சீர்திருத்தப் புரட்சிக் கவிஞர்.

"திங்களொடுஞ் செழும்பரிதி தன்னோடும்
விண்ணோடும் உடுக்களோடும்
மங்குல்கடல் இவற்றுடன் பிறந்த
தமிழுடன் பிறந்தோம் நாங்கள் ஆண்மைச்
சிங்கத்தின் கூட்டமென்று
சிறியோர்க்கு ஞாபகம்செய் முழங்கு சங்கே".

என்று மொழியையும் இனத்தையும் முன்னிறுத்திப் புரட்சிக் கருத்துகளைப் புலப்படுத்துகின்றார்.

## கருத்துப் புரட்சி

புரட்சி என்பது இருப்பதை மாற்றுவது மட்டும் அன்று; அதற்கு வேறொரு வழி கூறுவதுமாகும். அவ்வாறு பல்வேறிடங்களில் பாவேந்தர் மாற்றுவழி கண்டறிந்து கூறியுள்ளார்.

குடும்பக் கட்டுப்பாட்டுச் சிந்தனை தமிழகத்தில் ஏன் இந்தியாவிலேயே எழாதபோது புரட்சிக்கவிஞர் பாவேந்தரவர்கள்,

> **''காதலுக்கு வழிவைத்துக் கருப்பாதை சாத்தக்**
> **கதவொன்று கண்டறிவோம் இதிலென்ன குற்றம்?''**

பெற்றோர்க்குப் பிள்ளை பிறப்பது ஆண்டவனின் அருளால்தான். அதனைத் தடுப்பது ஆண்டவனையே அவமதிப்பதாகும் என்று கருதிக்கொண்டிருந்த சமுதாயம் ஆனதனால், "இதிலென்ன குற்றம்'' என்று வினாக்கணையைத் தொடுத்து, ஒரு குற்றமும் இல்லை; நன்மையே என்னும் விடையைப் பெறவைக்கின்றார் பாவேந்தர்.

## தொழிலாளர் சிந்தனைப் புரட்சி

'காடு கொன்று நாடாக்கியவனும், சிற்றூரையும் வரப்புயர்ந்த வயல்களையும் ஆற்றையும் வாய்க்காலையும் உண்டாக்கி உழுது பயன்விளைத்து உலகைக் காப்பது உழைப்பாளர்தம் தோள்களல்லவா?

''மலையைப் பிளந்து கல்லை உடைப்பதுவும், கனிவளங்களைத் தோண்டி எடுத்து நமக்கு வேண்டிய கருவிகளை உண்டாக்கித் தருவதுவும், பொன்னை - முத்தை - மணிக் குலத்தை எடுத்துத் தருவதுவும் யார்? பாட்டாளிகள் அல்லவா?

''இருள் மண்டிக் கிடந்த இந்த உலகத்தை ஒளிவெள்ள மாக்கிக் காட்டியதும் ஒப்பற்ற தொழிலாளர்கள் அல்லவா?

''சித்திரச் சோலைகளை உருவாக்கியதும், நெல்விளை நன்னிலத்தை உருவாக்கியதும், தாமரை பூத்த தடாகங்களை உண்டாக்கியதும், மாமிகு பாதைகளை வகுத்ததும், ஆர்த்திடும் எந்திரக் கூட்டங்களை ஆக்கித் தந்தவர்களும் உழைப்பாளர்களே. ஏன் இந்த உலகமே உழைப்பாளர்களின் உடலிலிருந்து சிதைந்த எலும்புகள் - நரம்புகள் - தசைகளின் மீதுதான் இருந்து இயங்கிக் கொண்டிருக்கிறது'' என்றெல்லாம் புரட்சிக்கவிஞர் புரட்சி விதைகளை விதைக்கின்றார்.

## சாதி ஒழிப்புப் புரட்சி

நால்வருணம் என்றும் அவற்றின் விரிவாய் நாலாயிரம் சாதிகளைப் படைத்துக் கொண்டு நாசமாகிக் கொண்டிருக்கும் நம் தமிழர்களைப் பார்த்துச்

> **''சாதிகள் இல்லையடி பாப்பா- குலத்**
> **தாழ்ச்சி உயர்ச்சி சொலல் பாவம்''**

என்றார் பாரதியார்.

பாரதியாரையும் விஞ்சுகின்ற வகையில், யாரும் நினைக்க அஞ்சும், கூற அஞ்சும் புரட்சிக் கருத்துகளைப் புயலாக வீசுகிறார் புரட்சிக் கவிஞர்.

> **''சாதி என்பதும் சாத்திரம் என்பதும் தள்ளடா''**-என்றும்
>
> **''சாதி ஒழிந்து சமயப் பித்தம் தொலைத்தால்**
> **மீதி இருத்தல் விடுதலைதான் என்தமிழா?**
> -என்றும்
>
> **''சாதிமதம் தமிழில்லை அந்தச்**
> **சாதி மதத்தைத் தமிழ்கொள்வ தில்லை''**
> -என்றும்
>
> **''சாதிமதம் பேசித் தனித்தனியே நீரிருந்தால்**
> **தோது தெரிந்தாரியர்கள் உம்மைத்**

**தொலைத்திடுவார்''** என்றும் சாதி மதத்துக்குச் சாவுமணி அடிக்கின்றார்.

## பகுத்தறிவுப் புரட்சி

இயற்கையோடு இயைந்து ஏற்றத் தாழ்வற்று எல்லாருஞ் சமமாக வாழ்ந்து கொண்டிருந்த தமிழகத்தில் ஆரியர்கள் நுழைந்து ''ஆயிரந் தெய்வங்கள் உண்டென்று தேடி அலையும் அறிவிலிகாள்'' என்று பாரதியாரே பாடுவதைப் போன்று ஆயிரம் தெய்வங்களை வணங்கவைத்து, சாத்திரச் சடங்குகளைப் புகுத்திப் பயமுறுத்தி ஒற்றுமையாய் இருந்த தமிழ்ச் சமுதாயத்தில் ஓராயிரம் சாதிப் பாகுபாடுகளை உண்டாக்கி மோதவிட்டு இடையில் புகுந்து குருதி குடித்துக் கொழுத்துவிட்ட பார்ப்பனரைப் பற்றி அதே பார்ப்பனச் சமுதாயத்தைச் சேர்ந்த பாரதியாரே,

> **''இந்நாளிலே பொய்மைப் பார்ப்பார்-அவர்**
> **ஏது செய்தும் காசுபெறப் பார்ப்பார்!''**

என்று

பார்ப்பனரின் கொடுமையைப் பாரதியாரே விவரிக்கின்றார் என்றால், பகுத்தறிவுத் தந்தை பெரியாரின் கருத்துவளம் பெற்ற புரட்சிக் கவிஞர் பாரதிக்குத் தாசன் எவ்வாறு சாடியிருப்பார் என்பதைச் சிறிது காண்போம்.

''எல்லாம் அவன்செயலே உன்று பிறர் பொருளை
வெல்லம்போல் அள்ளி விழுங்கும் மனிதருக்கும்'' என்றும்
''இறப்புக்கும் அப்பாலே ஒன்றுமில்லை என்ப துணர்ந்திடுக
இன்றுவரைக்கும் பெரியோர் செத்தவர்கள் எய்துவதாய்ச்
சொன்னவற்றுள் ஒன்றையொன்று தூற்றுவன
சாவு தவிர்ந்த மறுமையினை ஒப்புகிலோம்
பெருத்தவுடல் வீழ்ந்தபின் பெரியநிலை தேடல் பெருந்தவறே
முற்பிறப்பு மற்றும் மறுபிறப்புக் கரடிவிடல்'' -என்றும்
''இறைவனும் இல்லை; இறந்தோர் பிறவார்'' -என்றும்
''மூர்க்கமாய் வளர்ந்திடும் மூடவழக்கக் காடு
மொய்க்கும் ஆத்திகன் வீடு முடைநாற்றச் சுடுகாடு''

என்றெல்லாம் மூடத்தனத்தின் முடைநாற்றத்தைத் தூக்கியெறிந்து பகுத்தறிவு மணத்தைப் பரப்புகின்ற வகையில் புரட்சிப் பாடல்களைப் பூகம்பமாய்த் தோற்றுவித்துள்ளார், புரட்சிக் கவிஞர் பாவேந்தர்.

## பெண்ணுரிமைப் புரட்சி

பெரியாரும், பெரியாரின் கருத்துகளைக் கவிதைகளாக வழங்கிய பாவேந்தரும் தோன்றுவதற்கு முன்னர்-தமிழகத்தில், பெண்களின் நிலை பேரிழிவாகத்தான் இருந்தது.

புதிய சிந்தனை பெண்களுக்குப் புறக்கணிக்கப்பட்டது. பெண்கள் இன்பப் பொருளாக மட்டுமே கருதப்பட்டனர். எல்லாத் துறைகளிலும் பெண்களுக்குக் கடுமையான கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டன. பெண்கள் குழந்தை பெறும் இயந்திரமாகவே ஆக்கப்பட்டனர். ஆடவர்கள் பெண்களை அடிமைகளாகவே நடத்தினர்.

அவர்தம் கொடுமைகளை யெல்லாங் கண்டுணர்ந்த பாரதியார்,

''பெண்மை வாழ்கென்று கூத்திடுவோமடா
பெண்மை வெல்கென்று கூத்திடுவோமடா''

என்று பாடினார்.

பாரதியாரின் சமகாலத்தவரான கவிமணி தேசிக விநாயகரும்,

''மங்கைய ராகப் பிறப்பதற்கே-நல்ல
மாதவம் செய்திட வேண்டுமம்மா!''

என்று பாடினார்.

தந்தை பெரியாரால் தலைநிமிர்ந்த புரட்சிக்கவிஞர் பாவேந்தர்,

''ஆணுயர் வென்பதும் பெண்ணுயர் வென்பதும்
நீணிலத் தெங்கணு மில்லை!'' -என்றும்
பெண்ணுக்குப் பேச்சுரிமை வேண்டாம் என்கின்றீரோ
மண்ணுக்குங் கேடாய் மதித்தீரோ பெண்ணினத்தை''-என்றும்
''உமியல்ல மாதர் வலக்கை-தீயர்
உயிரை இடிக்கும் உலக்கை''-என்றும்

பெண்ணினத்துக்குப் பெருமை தேடிய பாவேந்தர், கைம்பெண்ணின் கொடுமைக்கு ஒரு முடிவு கட்டக் கொதித்தெழுகின்றார்.

தமிழகத்தில் வள்ளலார் காலம் வரையில் பெண்களை இழிவுப் பொருளாகவே கருதப்பட்டு வந்தனர். பாரதியார் காலத்தில் தான் பெண்கள் ஆண்களுக்கு நிகரானவர்கள் என்ற கருத்துவிதை ஊன்றப்பட்டது. பெண்களுக்கு சமவுரிமை வேண்டுமென்று மட்டுமே வழக்கறிஞராக நின்று வாதாடினார் பாரதியார்.

புரட்சிக்கவிஞர் ஒருவர் மட்டுமே ''பெண் ஆணுக்கு அடிமையில்லை; பெண் ஆணுக்குச் சரிநிகரானவர்; பெண் படிக்கவில்லையானால், பிறப்பவர் பயனின்றிப் போவர். படிக்காத பெண் களர் நிலத்துக்கு ஒப்பானவர்; கைம் பெண்கள் கோரிக்கையற்றுக் கிடக்கின்ற வேரிற் பழுத்த பலாக்கள். வாடாத பூக்கள். அதனால், பெண்களை அடிமைப்படுத்தக் கூடாது. பெண்களிடம் அரும்பும் காதலுக்குத் தடை விதிக்கக் கூடாது. அவர்களது உரிமையைப் பறிப்பது கொடியது;தண்டனைக்குரியது மனைவியை இழந்த ஆடவன் மறுமணம் புரிந்து கொள்வது போல், கணவனை இழந்த கைம்பெண்ணும் மறுமணம் புரிந்து கொள்ள வேண்டும்'' என்றெல்லாம் பகுத்தறிவுத் தந்தை பெரியார் என்னுஞ் சட்ட நெறி கொண்டு தீர்ப்பு கூறி-நீதி வழங்கி அடிமைச் சிறையினின்றும் விடுதலை செய்கிறார் நடுவராக மாறிய புரட்சிக் கவிஞர்.

தமிழில் - கருத்தில் - தொழிலாளர் சிந்தனையில்-சாதி ஒழிப்பில்-பகுத்தறிவில் பெண்ணுரிமையில் எல்லாம் புரட்சி செய்த புரட்சிக் கவிஞர்,

புரட்சிசெய் புரட்சிசெய் தம்பி
புதியநல் வாழ்வினை நம்பி
புரட்சியினால் அன்றி நாடு
பொதுமை கொள்ளாதுயர் வீடு'' -என்று

நம்மையும் புரட்சிசெய்யத் தூண்டுகிறார்.

# பாவேந்தரின் சமுதாயப் பார்வை

புலவர் ப. சாத்தன், எம்.ஏ.,

"கவிஞர்கள் மடமைத் தனங்களுக்கு மாரடிப்பவர்களாக இருத்தல் கூடாது. முற்போக்குச் சிந்தனையும் பகுத்தறிவு நோக்கமும் உடையவர்களாகத் திகழ்தல் வேண்டும்".

—வால்ட்விட்மன்

இருபதாம் நூற்றாண்டின் ஈடு இணையற்ற கவிஞராகப் புரட்சிப் பாவலராகப் பகுத்தறிவுப்பெருஞ்சுடராக விளங்கிய பாவேந்தர் பாரதிதாசனவர்கள் மூடத்தனத்தின் முடைநாற்றம் போக்கும் சீர்திருத்தச் செம்மலாக அடிமைத்தனமொழிய அற்புதப்பாட்டிசைத்த குயிலாகத் தமிழகத்தில் வலம் வந்தார்கள். அவர்தம் பாடல்களில் சமுதாயத் தாக்கம் எவ்வகையில் வேரூன்றியிருந்ததென் பதையும் அவர் காணவிரும்பிய சமுதாயம் எத்தகையதென்பதையும் அறிந்து பயன் துய்த்தல் நம் கடமையாகும்.

மக்களை உணர்ச்சி வழியில் இழுத்துச் சென்று, கவி ஓவியத்தை அவர்தம் உள்ளங்களில் பதிய வைத்த பெருமை பாவேந்தரையே சாரும். அவருடைய கவிதைகளில் புயலின் வீச்சும் தென்றலின் குளுமையும் கலந்திருப்பதைக் காணலாம். "வலியோர் சிலர் எளியோர்தமை வதையே புரிகுவதா?" என்று கேட்கும் போதும், ஓடப்பராயிருக்கும் ஏழையப்பர் உதையப்பராகிவிடாமல் பார்த்துக் கொள்வது உயரப்பர் கடமை என்பதை விளக்கும்போதும் சொற்களைப் பயன்படுத்தும் பாங்கும் நளினமும் நம்மை வியப்பிலாழ்த்து கின்றன.

சமுதாயத்தில் தூங்கிக்கொண்டிருந்தவர்களை எழுப்பி, அவர்களின் நரம்புகளுக்கு முறுக்கேற்றிய கவிதைவரிகள் பல அவருடைய பாடல்களில் இடம் பெற்றுள்ளன. கொடியோர் செயலையொழிக்கக் கொலைவாளினை எடுக்கச் சொல்லும் இடம் அவருடைய வீரவுணர்வுக்கு எடுத்துக்காட்டாகும். ஆயிரமாயிரமாண்டு அடிமைப்படுகுழியில் வீழ்ந்துழலும் மனிதனைப் பார்த்து,

'மனிதருள் நீயுமோர் மனிதன்; மண்ணன்று!
இமைதிற! எழுந்து நன்றாய் எண்ணுவாய்!
தோளை உயர்த்து! சுடர்முகம் தூக்கு!
மீசையை முறுக்கி மேலே ஏற்று'!

என்று உணர்ச்சியூட்டுவதோடு அவனைச் சமுதாயத்தின் இழி நிலைமைக்கு ஆளாக்கிய வர்கள் திருந்தவேண்டும் என்ற நோக்கத்தில்,

'பிறவியில் உயர்வு தாழ்வு சொல்லல்
மடமை—இந்தப்
பிழை நீக்குவதே உயிருள்ளோரின் கடமை;

என்று நயமாக நல்லமுறையில் சொல்லிப் பார்க்கின்றார். எதிர்விளைவு எதுவும் இல்லை போலும் ஒரு படி மேலே போய்,

'இருட்டறையில் உள்ளதடா உலகம்—சாதி
இருக்கின்ற தென்பானும் இருக்கின்றானே!

என்று தம் வேதனையை வெளிப்படுத்துகின்றார். சாதி எனும் சங்கிலி சமுதாயத்தைப் பிணித்திருப்பதைக் கண்ட பாவேந்தர், கீழ் மேல் என்னும் கண்மூடிப்பழக்கங்கள் மண் மூடிப்போகாதோ? என்று ஆதங்கப்படுகிறார். சாதிச் செருக்கையும் செல்வச் செருக்கையும் சாடிச் சாதிப்பிரிவு, சமயப் பிரிவு உள்ளவரை, சமுதாயம் முன்னேறாது என்ற முடிவுக்கு வந்து, மதத்தையும் மதம் பெற்ற பிள்ளைகளாம் சாதிகளையும் ஒழிக்கத் தம் கவிதைப் பயணத்தைத் தொடங்கினார். சாதியொழிப்புப் போராட்டத்தை முன்னின்று நடத்திய தலைவர்களை நினைவுகூரும்போது, அவர்களின் 'எரிமலை எண்ணமும் எழும்புயல் செயலும் விரிவுலகத்தையே வியப்புறச் செய்தன' என்று மனந்திறந்து பாராட்டுகின்றார்.

பொதுவுடைமைச் சமுதாயம் பூத்துக் குலுங்க வேண்டும். தொழிலாளர் சமுதாயம் துணிவுடன் உரிமைக்குக் குரல் கொடுக்க வேண்டும் என்பதோடு,

**'புதியதோர் உலகு செய்வோம் கெட்ட**
**போரிடும் உலகத்தை வேரோடு சாய்ப்போம்'**

வாருங்கள்! வாருங்கள்! என்று தொழிலாளர் சமுதாயத்திற்கு அன்பழைப்பு விடுக்கின்றார்.

'.................................

**பச்சை (இ)ரத்தம் பரிமாறி இந்த நாட்டைச்**
**சலியாத வருவாயும் உடையதாகத்**
**தந்ததெவர்? அவரெல்லாம் இந்த நேரம்**
**எலியாக முயலாக இருக்கின்றார்கள்**
**ஏமாந்த காலத்தில் ஏற்றங்கொண்டோன்**
**புலிவேஷம் போடுகிறான்'**... என்று தொழிலாளர்களின் அவலத்தைக் கவிதை வாயிலாக அம்பலப்படுத்துகின்றார். இன்றைய நிலையில் தொழிலாளர் சமுதாயம் ஓரளவு தலை நிமிர்ந்து நிற்பதற்குக் கவிஞரின் கவிதை வீச்சும் ஒரு காரணம் என்றால் அஃது மிகையன்று.

**'படையதிரச் செய்யாத நாட்டையும் கவிஞன் நடையதிரச் செய்து விடும்'** என்று மார்க்கூரியஸ் கூறியபடி பாவேந்தரின் கவிதை நடை சமுதாயத்தில் ஒரு மறுமலர்ச்சியை ஏற்படுத்தியுள்ளது. தனியுடைமையொழிந்து பொதுவுடைமை காணவே அவர் துடித்துக் கொண்டிருந்தார். அதற்காகவே அவர் கவிதை எனும் கருவியை இறுதிவரை பயன்படுத்தினார். அவர் விரும்பிய சமுதாயத்தில் ஏழை எளியவரைத் தட்டியெழுப்பி, ஆதிக்க அரண்மனையைத் தகர்த்து, அடிமைகளின் இரத்தத்தில் சூடேற்றினால் சமதரும சமுதாயம் தானாகவே உருவாகிவிடும் என்று ஒவ்வொரு நிகழ்ச்சியின் போதும் பேசியும் எழுதியும் வந்தார்.

''ஒரு சமுதாயத்தின் இலக்கியம் அதன் தேசியத்தையும், தன்மான உணர்ச்சியையும் விட்டுவிட்டுத் தோன்ற முடியாது'' என்பதை நன்குணர்ந்த பாவேந்தர் தாம் இயற்றிய நாடகங்கள், காப்பியங்கள் அனைத்தையும் சமுதாயப் பிரச்சனைகளை அடிப்படையாக வைத்தே உருவாக்கினார்கள். அவரின் சமுதாயப் பார்வையின் பொருள் புரிந்து கொண்ட மக்கள் அவரைப் 'புதிய சமுதாயம் மலர நல்வழி காட்டிய கவிக்கோமான் என்றும், எல்லார்க்கும் எல்லாமும் என்பதான இடம் நோக்கி இவ்வையம் நகர வேண்டும் எனக் கூறிய புரட்சிக் குயில்' என்றும் பலபடப் பாராட்டினார்கள்.

சமுதாயக் கொடுமைகளைச் சாய்க்கும் பணியினைக் கவிதை மூலம் தொடங்கியவர் பாரதியார் என்றாலும், அவர் தாசனாம் பாவேந்தர் தம்மை முழுவதுமாக அதற்காகவே ஈடுபடுத்திக் கொண்டதோடு புரட்சி நெருப்பில் பூத்த புதுமலராக ஒளிவீசினார், சமூகவியல் கருத்துகளுக்கு முதலிடம் தந்த பாவேந்தரின் பார்வை படாத துறைகளே இல்லை என்று கூறுமளவிற்கு அவருடைய கவிதைப்பணியமைந்ததென்பது வெள்ளிடை மலையாம்.

சமுதாயத்தைப் பல கோணங்களில் பார்த்துப் பார்த்தவற்றைச் சிந்தித்து முடிவுக்கு வந்த பிரஞ்சு நாட்டு அறிஞர் ஆகஸ்ட் காம்ட் புரட்சி சகாப்தத்தைத் தோற்றுவித்த ஜெர்மன் நாட்டுக் காரல்மார்க்ஸ், ஏற்றத் தாழ்வுகள் மனிதரால் உருவாக்கப்பட்டவையே கடவுளுக்கும் அவற்றிற்கும் தொடர்பே இல்லை என்று கூறிய ரூசோ ஆகியோர் சிந்தனை வழி கவிதை எனும் போர்வாளைக் கையிலெடுத்தார். விளைவு! அறியாமை அகன்றது. சமூகச் சீர்திருத்தம் எனும் விதை மூலை முடுக்கெல்லாம் பரவி வளர்ந்து பயன்தரத் தொடங்கிவிட்டது.

**'கவிஞனைச் சமுதாயத்தின்கண்'** என்றார் இக்பால். அதனாற்றான் போலும் சமுதாயம் எனும் உடலில் ஓர் அங்கம் துன்புற்றாலும் கண்ணாகிய கவிஞன் துடித்தெழுகின்றான் என்பதனைப் பாவேந்தரின் கவிதை வரிகள் நமக்குப் புலப்படுத்துகின்றன.

'சமுதாயத்தில் வாழ்வதே தவறு என்று எண்ணுகின்ற நலிந்தவர்களுக்காக நான் பாடல் இயற்றுகின்றேன்' என்று கூறுவதோடு ''சமுதாயத்தில் பொட்டுப்பூச்சிகளாகப் புன்மைத்தேரைகளாக வீழ்ச்சியுற்றுக் கிடக்கும் மக்கள் எழுச்சி பெறவே நான் பாட்டிசைக்கின்றேன்'' என்று தன் உள்ளக் கிடக்கையை வெளிப்படையாகக் காட்டும் பாவேந்தரைச் சமுதாயம் நன்றியுணர்வோடு போற்ற வேண்டுமல்லவா?

மேலும், சமுதாயத்தின் பேரங்கமாக இருக்கும் மகளிர் முன்னேற்றத்திற்காகக் குரல் கொடுத்த கவிஞர், அவர்களுக்காகப் புரட்சிக் கருத்துகளை உதிர்க்கத் தயங்கினாரில்லை.

# ஓ! ஓ! இளைஞரே!

**கவிஞர் இ. கோமதி நாயகம்**

ஓ! ஓ! இளைஞரே! ஓ! ஓ! இளைஞரே!
ஒருகணம் நின்று உரைப்பன கேட்பீர்!
உதிரங் குன்றி உறங்கிக் கிடந்த
மதியிலாத் தமிழர் மயக்கந் தெளிய
மருந்தாய் விருந்தாய் நறுந்தமிழ் தந்தவர்;
நாடும் மொழியும் பீடுறப் பொலியவும்
கேடுறு சாதிக் கொடுமை நீங்கிக்
குமுகாயம் உயரவும் குமுறி யெழுந்து
அமுதக் கருத்துகள் அள்ளித் தெளித்தவர்;
ஏனென்று கேட்டு எதையும் சிந்திக்க
தேனொத்த தமிழில் வினாக்கணை தொடுத்தவர்!
கூனியும் நாணியும் கூசா தூக்கியும்
மானம் என்பதை மறந்தும் நினையா
ஈனர் சிலரை எரியாய்ச் சுட்டவர்;
நெருப்பாறு தன்னை! நீந்திக் கடந்த
புரட்சிக் கவிஞரின் புதுமைக் கருத்தினைப்
போற்றற் குரிய நூற்றாண்(டு) விழாவில்
ஏற்றுச் செயற்பட ஏற்பீர் உறுதி!
பட்டி மண்டபம் பாட்டின் அரங்கெனக்
கொட்ட மடித்துக் கொள்கை மறந்து
இலக்கியச் சுவைஞராய் இருந்து விடாமல்
இருக்கும் அறிவை இருகூறு ஆக்காமல்
சுருக்கெனச் செயற்படத் துள்ளியெழு வீரே!
ஓ! ஓ! இளைஞரே! ஓ! ஓ! இளைஞரே
ஒருகணம் நின்று உரைப்பன கேட்பீர்!

---

'பெண்ணுக்கு விடுதலை நீர் இல்லை யென்றால் பின்னிந்த உலகினிலே வாழ்க்கை யில்லை' என்று தேசியக்கவிஞர் பாரதியார் கூறிப்போந்தார். அவர் வழியில் புரட்சிப் பூக் களைக் கொய்ய முயன்று வெற்றி பெற்ற பாவேந்தர்,

'பெண்ணடிமை தீருமட்டும் பேசும் திருநாட்டு
மண்ணடிமை தீர்ந்து வருதல் முயற் கொம்பே'

என அறுதியிட்டு உறுதியாகக்கூறுகிறார். சமு தாயத்தில் பெண்கள் கல்வியறிவு இல்லாது இருக்கும் இழி நிலையைக்

'கல்வியில்லாத பெண்கள் களர்நிலம், அந் நிலத்தில்
புல்விளைந்திடலாம் நல்ல புதல்வர்கள் விளை வதில்லை'

எனக்கூறி கல்வி கற்கத் தூண்டுவதோடு,

''கல்வியில்லை உரிமையில்லை பெண்க ளுக்குக் கடைத்தேற வழியின்றி விழிக்கின் றார்கள்'' என்று தம் எண்ணக் குமுறலை வெளிப்படுத்துகின்றார்.

சமுதாயத்தில் பெண்ணடிமைக்குக் காரணம் மூடப்பழக்கங்கள் தாம், என்பதை யுணர்ந்த கவிஞர் மறுமணத்தை ஆதரித்து உலகில் வேறெந்தக் கவிஞரும் செய்யாத புரட்சியைச் செய்தார். கணவரை இழந்து வாடும் பெண்களைக் கோரிக்கையற்றுக் கிடக் கும் வேரிற்பழுத்த பலா என்றும், குளிர் வடி கின்ற வட்ட நிலா என்றும் புகழ்வதோடு வாடாத பூப்போன்ற மங்கைநல்லாள் மண வாளன் இறந்தால் பின் மணத்தல் தீதோ?' என்று கேட்டுப் பழமை வாதிகளைத் திகைக்க வைக்கின்றார்.

இங்ஙனம் பல்வேறு சமுதாயக் கூறுகளி லும் தன் பார்வையைச் செலுத்திய பாவேந் தர் அவர்கள். இந்த மண்ணிலிருந்து மறைந்து விட்டாலும் அவர்தம் கவிதைகள் என்றும் வாடாது மணம் வீசிக்கொண்டே இருக்கு மென்பது உண்மையிலும் உண்மை வெறும் புகழ்ச்சியில்லை.

# பாவேந்தரின் அரசியல் கோட்பாடுகள்

முனைவர் இரா. சேது

## புதுவை அரசியல்

சுதந்திரம், சமத்துவம் சகோதரத்துவம் (Liberty, Epuality, Fetanity) என்ற முப்பெரும்கொள்கையை உலகுக்களித்த, பிரெஞ்சு ஆட்சி புதுவை மண்ணில் கால் கொண்டிருந்தது; இந்தியத்துணைக்கண்டத்தில் பிரித்தானிய ஆட்சி நடைபெற்றுக் கொண்டிருந்தது. இந்திய மண்ணில் வேற்றரவர் ஆட்சி கண்டு மனம் குமுறினார்.

புதுவை அரசியற் போரில் இறங்குவேன் எனத் தன்வரலாற்றிற் குறித்துள்ளார். புதுவை அரசியல்போரில் இறங்குவேன் எனக் குறித்தாற்போல் திருபுவனை கொம்முயினில் தமிழாசிரியராகப் பணியாற்றும் போது பிரெஞ்சு அரசுக்கு எதிராகச் செயல் பட்டாரெனக் குற்றம்சுமத்தி $1\frac{1}{4}$ ஆண்டு சிறைவைக்கப்பட்டார்.

பதினேழாவது வயது முதற் கொண்டே பாரதிதாசன் அரசியலில் பங்கெடுத்தார். தேர்தல் பிரச்சாரம் போலிங்ஸ்டேஷன் நிருவாகம் துணிவுள்ள காரியங்களுக்குத் தலைமை ஆகிய விஷயங்களிலே பாரதிதாசனுக்குப்பேர் உண்டு. இவரது பிரச்சாரத்தால் ஜயித்த தேர்தல்கள்பல. அரசியலில் பங்கெடுத்தது காரணமாக இவர் இரண்டு வருஷம் உத்தியோகத்திலிருந்து விலக்கப்பட்டார். ஒரு மாதம் சிறையிலிருந்தார் என ஏ.கே. செட்டியார் குறிப்பிடுகின்றார்.

(ஏ.கே. செட்டியார் புரட்சிக்கவிஞர் முல்லைமுத்தையா தொகுப்பு நூல்: ப 62)

தொடக்கமுதல் 1928 ஆம் ஆண்டு வரை இந்தியப் பேராயக் கட்சியில் இணைந்து 'சிறுவர் சிறுமியர் தேசியகீதம்; தொண்டர் நடைப்பாட்டு கதர் இராட்டினப் பாட்டு முதலான தேசியப்பாடல்களைப் பாடினார். கதர் இராட்டினப்பாட்டை வெளியிட்ட காசி ஈ.இலட்சுமணபிரசாத் வரைந்துள்ள முகவுரையில், நம்பாரதநாட்டில் ஒத்துழையாமை சுடர் விட்டு எரியும் போது நான் ஸ்ரீபாரதிதாசனவர்களைக் கேட்டுக்கொண்டபடி அவர்கள் எழுதித்தந்த நூற்கள் இருபது சிறு சிறு நூற்கள் ஒத்துழையாமையின் ஒவ்வொரு தத்துவத்தையும் பற்றியவை எனக் குறிப்பிட்டுள்ளார். ஒத்துழையாமைப் போராட்டத்தில் பங்கேற்றார். பின்னர் பெரியாரின் தன்மான இயக்கத்தில் தன்னை இணைத்துக் கொண்டு பகுத்தறிவுக் கருத்துகளை விதைப்பாராயினார் பத்துக் கவிதைகள் அடங்கிய சுயமரியாதைச்சுடர் எனும் சிறுநூலை வெளியிட்டார் தன்மான இயக்கத் தந்தை பெரியாரால், பாவேந்தர் தன்மான இயக்கத்தின் ஒப்பற்ற கவியெனப் பாராட்டப்பட்டார்.

பெரியாரோடு இணைந்து திராவிடர் கழகக் கொள்கைகளை நாடெங்கும் பரப்பினார்; பெரியார், மணியம்மையை மணந்து கொள்வது குறித்து அறிக்கை வெளியிட்ட போது, திருச்சியில் கூடவிருந்த திராவிடர் கழகச் செயற் குழுவினருக்கும் திராவிடர் கழகப் பெருமக்கட்கும் பெரியார் போக்கைக் கண்டித்துப் பாவேந்தர் அறிக்கை வெளியிட்டார், திராவிடர் கழகத்தினின்று பிரிந்து பேரறிஞர் அண்ணா கண்ட 'திராவிட முன்னேற்றக் கழகத்தில் இணைந்தார். இதனைப் பாவேந்தரின் தலை மாணவரான கவிஞர் சுரதா,

**'பெரியாருக்கோர்**
**நங்கூரம் போன்றிருந்து பிரிந்து காஞ்சி**
**நல்லறிஞர் கழகத்தாற் பெருமை பெற்று'**

எனக்குறிப்பிடுவது சிந்தனையில் கொள்ளத் தக்கதாகும். புதுவையில் சட்ட மன்றத் தேர்தலில் போட்டியிட்டுச் சட்டமன்ற உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார். பின்னர்

திராவிட முன்னேற்றக் கழகத்தையும் அறிஞர் அண்ணாவையும் தாக்கிக் கவிதை புனைந்தார். குடந்தையில் நடைபெற்ற திராவிட மாணவர் மாநாட்டில் உரையாற்றினார். 1957 தேர்தலில் தி.மு.க வேட்பாளரகாப் போட்டியிட்ட முல்லை வடிவேலு அவர்களை எதிர்த்து தி.க.வின் சார்பில், இந்தியப் பேராயக் கட்சியின் வேட்பாளரை ஆதரித்துத் தேர்தல் பிரச்சாரம் செய்தார்.

திராவிடர் கழக மாநாட்டிலும் திராவிடர் கழகப் பொதுக் கூட்டங்களிலும் கலந்து உரையாற்றினார். சிதம்பரத்தில் இவர் தலைமையில் 'சுதந்திரத் தமிழக மாநாடு' நடைபெற்றது. குளித்தலையில் நடைபெற்ற 'சுதந்திரத் தமிழக' மாநாட்டிலும் கலந்து கொண்டு சொற்பொழிவாற்றினார். சென்னை வாணி மகாலில் இவர் தலைமையில் கனனட எதிர்ப்பு மாநாடு நடைபெற்றது. இவர் வாழ்வு, இந்திய விடுதலை, திராவிட நாடு, தமிழக விடுதலை, தமிழ் மொழி விடுதலை இவற்றைக் குறியாகக் கொண்டு விளங்கியது. உரிமையைப் போற்றினார்; பிறர் உரிமையைப் பறித்தோரைச் சாடினார்.

## உரிமை வேட்கை

பாவேந்தர் கவிதையுலகில் நுழைந்த போது, உலகெங்கும் உரிமை முழக்கங்கள் எழுந்தன; இந்தியத் துணைக்கண்டம், ஆங்கிலேயரிடமிருந்து விடுபட்ட போது, 'விடுதலை வேட்கை உயிரின் இயற்கை' என்ற தலைப்பில் உருவகக் கதையைக் கவிதையாக வடித்துத் தந்தார். தனி மனிதனும் 'நாடும்' உரிமையோடு வாழ வேண்டுமென விரும்பினார். கொடுங்கோலாட்சியை எதிர்த்துப் பொதுவுடைமை ஆட்சியை மலரச் செய்த இலெனினை 'யுகமாகி நின்ற லெனினே ; உழைப்பாளர்ஆட்சி நெறி உரமாக்கி வைத்த லெனினே' என உளம் பூரிக்க வாழ்த்தினார்.

உலக நலத்திற்கு ஊறு விளைவிக்கும் தன்னல வெறி கொண்ட இட்லரை இழித்துப் பழித்துரைத்தார். நாடு கொள்ளும் அவனது நப்பாசையைச் சாடினார். அதனால் விளைந்த தீமையை எடுத்துரைத்தார்.

## குடியரசு

இவர்தம் கவிதைகளிலும் கட்டுரைகளிலும் மன்னராட்சியை எதிர்த்து மக்களாட்சியைப் போற்றினார். தம் காப்பியங்களில் வரும் மாந்தரும் மக்கள் கூட்டமும் முயற்சியை முறியடித்துக் குடியாட்சியை உருவாக்குவதைக் கொள்கையாகக் கொண்ட ஒரு மனிதனின் தன்னலத்திற்காக மக்களின் உரிமைகள் பறிக்கப்படும் மன்னராட்சியைக் கிஞ்சிற்றும் விரும்பினார் அல்லர். தம் ஆத்திசூடியில் கோனாட்சியை வீழ்த்து எனஆணையிட்டார். மேலும்,

> 'ஒரு மனிதன் தேவைக்கே இந்தத்தேசம்
> உண்டென்றால் அத்தேசம் ஒழிதல்
> நன் றாம்

என்ற தன் விருப்பத்தை வெளிப்படுத்தினார். குடியரசுக் கொள்கையில் அழுத்தமான நம்பிக்கை கொண்ட அவர், முடியரசை வீழ்த்திக் குடியரசாட்சியை உருவாக்கிய பிரெஞ்சு நாட்டை,

முடியரசு நாடு குடியரசுகொள்ள முடியும் என்பதை முடித்த பிரான்சை' எனப் போற்றினார். உலகில் மக்கள் தொகை கடல் போன்று பரந்து விரிந்தது; ஆனால் அம்மக்கள் கூட்டத்தை ஆளும் மன்னர்களோ அக்கடல் மேல் தோன்றும் சிறிய நீர்க்குமிழி போன்றவராவர். பெரிய கடலை, சிறிய நீர்க்குமிழி ஆளுவதா?

> "உலகில் வாழும் மக்கள் கூட்டம் கடல்
> போன்றது; இன்னல் இழைக்கின்ற
> வகுப்போ அக்கடலில் தோன்றும் குமிழிகள்
> போன்றது"

> "அரசபதவி தேவையில்லாதது; அரசன்
> என்பதே மடமையின்
> சின்னம்"

என எள்ளி நகையாடினார்.

வலிமை படைத்த சிலர் எளியவர்களாகிய பலரைத் துன்புறுத்துவதை எங்ஙனம் பொறுத்துக்கொள்ள முடியும்? மன்னராட்சிக் காலத்தில் இக்கொடுமைகள் மலிந்திருக்கலாம். ஆனால் மக்களின் மனப்போக்கு மாறிவரும் இக்கால்த்திற்கு ஏற்றதாக அமைய முடியுமா?

> 'வலியோர் சிலர் எளியோர் தமை வதையே
> புரிகுவதா?
> மகராசர்கள் உலகாளுதல் நிலையாம் எனும்
> நினைவா?'

ம்கராசர்கள் உலகை ஆளும் நிலை மாறி வருகின்றதென்பதை வலியுறுத்துகிறார். மக்களின் அடிப்படை உரிமைகள் பறிக்கப்பட்டு அவர்களைச் சுரண்டுகின்ற கொடிய முடியாட்சி முழுமையாக மண்ணிலிருந்து அகற்றப்பட வேண்டுமென எண்ணினார். புரட்சிக் கவி'யில் உதாரன் கொலைக்களத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டான். தலைப்பாகை அதிகாரி உதாரனிடம் இறுதியாகச் சில பேசிடுக என அழைத்தான். அப்போது தமிழ்க் கவிஞன் வீரமுழக்கமிட்டான்.

**'வாழிய என் நன்னாடு பொன்னா டாக**
**வாழிய நற்பெருமக்கள் உரிமை வாய்ந்தே**
**வீழியபோய் மண்ணிடையே விண்வீழ் கொள்ளி**
**வீழ்வதுபோல் தனித்தாளும் கொடிய ஆட்சி'**

தனிமனிதனின் கொடுங்கோன்மையை எதிர்த்தான். அவ்வுரை கேட்ட மக்கள் கிளர்ந்தெழுந்து உதாரனின் உயிரைக் காப்பாற்றினர். மக்களின் எழுச்சியைக் கண்ட மன்னன் மனம் மாற்றமடைந்தான்.

'அரசும் அனைத்து உடைமைகளும்,
மக்களுக்கேஎனச் சட்டம் இயற்றினான்'.

அதனாலே துன்பம் நீங்கி இன்பம் விளைந்தது மக்களுக்கு. இதனைச்,

**'செல்வமெலாம் உரிமையெலாம் நாட்டாருக்கே**
**நவையின்றி யெய்துதற்குச் சட்டம் செய்தார்**
**நலிவில்லை! நலமெல்லாம் வாய்ந்த தங்கே'**

எனப் போற்றினார்.

வீரத்தாயில் வரும் சுதர்மன் தம் கைக்கு ஆட்சி வந்தவுடன் புரட்சியான திட்டங்களை வெளியிட்டான். நாட்டு மக்களுக்கே உரியதாகும். நாட்டிலுள்ள உரிமைகளும் மக்களுக்கு உடைமையாகுமென அறிவித்தான்.

**'எல்லார்க்கும் தேசம் எல்லார்க்கும் உடைமை எலாம்**
**எல்லார்க்கும் எல்லா உரிமைகளும் ஆகுகவே'**

எனப் பறை சாற்றினான்.

## தமிழர் ஆட்சி

தமிழ்நாட்டில் தமிழ் எல்லாத்துறையிலும் அரசோச்ச வேண்டுமெனத் துடித்தார். தமிழனின் தொன்மையையும் சிறப்பையும் விளக்கியதோடு தமிழ் தமிழ்நாட்டின் தமிழ்த் தெருவில் இல்லையென வேதனைப்பட்டார். தமிழ்நாட்டில் ஆட்சிமொழியாக அலுவலக மொழியாகப் பயிற்சிமொழியாகத் தமிழ் அரியணையில் வீற்றிருக்க வேண்டுமென விழைகிறார். தமிழ்ப் பகைவர்களைச் சாடினார். தமிழ்க் காவலர்களைப் போற்றினார். தமிழில் நன்கு கற்றுத் தேர்ந்த தமிழனே தமிழ் நாட்டின் முதலமைச்சனாக வருதல் வேண்டுமென வரையறுத்தார். இதனைத்,

**தமிழாய்ந்த தமிழன்தான்**
**தமிழ்நாட்டின் முதலமைச்சாய்**
**வருதல் வேண்டுமெனத்** தம் வைரவரி வரைந்தார்.

திராவிடநாட்டின் விடுதலையைப் பண்ணாக இசைத்தபோதிலும் தமிழ் நாட்டின் விடுதலையை உயிர் மூச்சாகக் கொண்டிருந்தார். தமிழர் ஆட்சியை உருவாக்க எத்தகைய இன்னலையும் ஏற்க ஆயத்தமானார்.

இதனை,

**'ஆன எம் தமிழர் ஆட்சியை நிறுவ அல்லல்கள் வரின் ஏற்பேன்**
**ஊன் உடல் கேட்பினும் செந்தமிழ் நாட்டிற்கு உவப்புடன் நான் சேர்ப்பேன்'**

எனப் பாடினார்.

தனித்தியங்கும் தகைமைசான்ற தமிழில் ஆரியக் கலப்பைச் சாடினார், தாயகம் விடுதலை பெற, தமிழினம் தன்மானத்தோடு வாழ, தமிழ் மொழி சிறக்கத் தம் எழுதுகோலைப் போர்க்கருவியாகப் பயன்படுத்தினார்.மொழிக்கு எதிரான போக்குகள் தலைதூக்கிய போது,

**'செந்தமிழுக்குத் தீமைவந்த பின்னும்-இந்தத்**
**தேசம் இருந்தொரு லாபமுண்டோ?'** எனச் சீறினார்.

## கல்வி

மாந்தர் பெற வேண்டிய செல்வங்களுள் தலையாயது கல்விச்செல்வமாகும். அச்செல்வத்தைப் பெறாது ஏனைய செல்வங்களைப் பெற்றிருப்போர் விலங்காகவே கருதப்படுவர். கல்வியில்லாத மக்களால் தங்களுக்கும் நாட்டுக்கும் பெருந்தீமை விளையுமென்பதை உணர்ந்த பாவேந்தர்,

# அவனுக்கும் தமிழென்று பேர்

**இனமானப் பாவலர் இளஞ்சித்திரன்**

அவன்பா வேந்தன்; பாரதி தாசன்!- புரட்சிப்
பாவேந்தனவன் எங்கள் நேசன்! (அவன்)

அவனுக்கும் தமிழென்று பேர்! - என்றும்
அவனெங்கள் தமிழெங்கள் இயக்கத்தின் வேர்!
அவனுக்கும் புலிஎன்று பேர்! - என்றும்
அவனெங்கள் உணர்வெங்கள் கொள்கைகள் தேர்!
அவனுக்கும் களிறென்று பேர்! - என்றும்
அவனெங்கள் உயிரெங்கள் மானத்தின் சீர்!
அவனுக்கும் மலரென்று பேர்! - என்றும்
அவனெங்கள் வாழ்வெங்கள் வளத்துக்கும் நீர்! (அவன்)

அவனெங்கள் கைகளில் வாள்! - பகை
அழித்திடப் புடைத்திங்கே எழுந்திட்ட தோள்!
அவனெங்கள் போர்முனை வேல்! - தளை
அறுத்தெம்மை விடுவிக்க மலர்ந்திட்ட நூல்!
அவனெங்கள் புரட்சிக்குத் தூண்! - அவன்
அறிவெங்கள் உயர்வுக்கும் கிடைத்திட்ட ஊண்!
அவனெங்கள் உரிமைக்கும் போர்! - இனம்
ஆர்த்தெழத் தமிழ்மண்ணை உழவந்த ஏர்! (அவன்)

அவனெங்கள் செம்மைக்குத் தாய்! - இழி(வு)
அகன்றிட, மடமையைக் கொளுத்திடும் தீ!
அவனெங்கள் மேன்மைக்கு யாழ்! - தமிழ்
அன்னைக்கை விலங்குகள் முறிக்கின்ற ஊழ்!
அவனெங்கள் புகழுக்கு வான்! - அவன்
அகமெங்கள் புறமெங்கள் நலத்துக்குத் தேன்!
அவனெங்கள் வெற்றிக்குப் பேர்! - அவன்
அறமெங்கள் தமிழெங்கள் வாழ்வுக்கே ஊர்! (அவன்)

---

**'கல்லாரைக் காணுங்கால்**
**கல்வி நல்காக் கசடர்க்குத் தூக்கு மரம் அங்கே உண்டாம்'**

என்ற வரிகளால் கல்வி நல்காத அரசைச் சாடுகிறார். கல்வி அவரவர் தாய் மொழியிலேயே கற்பிக்கப் படவேண்டுமென்பது கவிஞரின் தெளிவான கோட்பாடாகும்.

**'தமிழ்க் கல்வி தமிழ் நாட்டில் 'கட்டாயம் என்பதொரு சட்டம் செய்க'**

என அரசியல் சீர் வாய்ந்தோரை வேண்டுகிறார். நல்ல அரசியல் நெறிபரவக் கல்வி இன்றியமையாததென நம்பினார். ஆண்களோடு பெண்களும் கல்வி கற்று நல்ல குடும்பம் ஒரு பல்கலைக் கழகமாகத் திகழப் பாடுபட வேண்டுமென வேட்கை கொண்டார். கல்வியில்லாத பெண்கள் களர்நிலத்திற்கு ஒப்பானவர்கள். **அந்நிலத்தில் புல் விளைந்திடலாம். நல்ல புதல்வர்கள் விளைவதில்லை'** எனப் பெண் கல்வியின் சிறப்பை வலியுறுத்தினார்.

தமிழ் நாட்டு மக்கள் ஆண்களும் பெண்களும் கல்வியால் சிறப்புற்று விளங்க விழைந்தார்.

இதனை,

**'என்னருந் தமிழ் நாட்டின்கண் எல்லாரும்**
**கல்வி கற்றுப்**
**பன்னருங்கலை ஞானத்தால் பராக் கிரமத்தால்**
**அன்பால்**
**உன்னத இமயம் போல் ஓங்கிடும் கீர்த்தியெய்தி**
**இன்புற்றார் என்று மற்றோர் இயம்பக் கேட்டிடும் நாள் எந்நாளோ!**

எனப் பாடினார்.

பாவேந்தன் அரசியல் கோட்பாடு, உரிமை உணர்வு, மக்களாட்சி, தமிழ்நாட்டின் விடுதலை, தமிழ் நலம் ஆகிய குறிக்கோள்களைக் கொண்டு வீறுநடை போடுகிறது.

—6

# பாரதிதாசன் பெண்மை போற்றியதேன்?

முனைவர் சரளா ராசகோபாலன், எம்.ஏ.

"ஆடை அணிகலன் ஆசைக்கு வாசமலர்
தேடுவதும் ஆடவர்க்குச் சேவித்
திருப்பதுவும்
அஞ்சுவதும் நாணுவதுவும் ஆமையைப்
போல் வாழ்வதும்
கொஞ்சுவது மாகக் கிடக்கும் மகளிர்குலம்
மானிடர் கூட்டத்தில் வலியற்ற ஓர்பகுதி'
(வீரத்தாய் பா.கவி.1ப 37)

என்று ஆடவர் மகளிரை அலட்சியமாக நினைத்த காலத்தில்தான் பாரதிதாசனும் தோன்றினார்.

## பாரதிதாசனாரின் புரட்சி உள்ளம்

இவர் இயற்கையாகவே புரட்சி உள்ளம் கொண்டவர். அவருடைய உரிமை உள்ளம் பெண்களின் அடிமை வாழ்வை எதிர்த்தது. அவர் விரும்பிய உரிமை வாழ்வை மகளிரும் பெற விரும்பியது.

## இதழாசிரியர் பணி

பெண்ணடிமை நீக்க விரும்பியவர்களில் பெரும்பாலோர் பத்திரிகைத் தொழிலில் இருந்தனர் என்ற உண்மை குறிப்பிடத்தக்கது காந்தியடிகள் 'நவஜீவனையும்' பெரியார் ஈ.வெ.ரா. குடியரசு, விடுதலை ஆகிய இதழ்களையும் நடத்தினார். பாரதி சக்கரவர்த்தினியின் ஆசிரியராகவும், சுதேசமித்திரன், இந்தியா ஆகிய இதழ்களின் துணை ஆசிரியராகவும் பணி புரிந்தார் திரு.வி.க. தேசபக்தன், நவசக்தி ஆகிய இரு இதழ்களை நடத்தியவர். பாரதிதாசன் குயில் ஏட்டை நடத்தியவர். இதழ்களின் ஆசிரியராக இருந்தவர்கள் கட்டுரை எழுதும் முறையில் பல நாட்டுச் செய்திகளை ஆடவர் மகளிர் நிலையை அறிய வேண்டிய கட்டாயத்திற்கு உரியவராயிருந்தனர். மேல் நாட்டு மக்களின் உயர்நிலையை அறிந்த பாரதிதாசன் தன்னாட்டு மகளிரும் அந்நிலை அடைய வேண்டும் என விரும்பி இருக்கக் கூடும் அதன் விளைவாகப் பெண்களின் உள்ளத்தில் எழுச்சியூட்டவும் ஆண்களின் உள்ளத்தில் கொடுஞ்செயலை நினைத்துப் பார்க்கும்படி செய்யவும் பல கவிதைகளை எழுதினார்.

## பிரெஞ்சு மக்களின் உரிமை வாழ்வு

ஆடவர்கள் பரந்த உள்ளத்தோடு தங்கள் மனைவியருக்கு உரிமை கொடுத்து வாழ்ந்ததைப் பார்த்த அவர் தமிழ்ப் பெண்களும் ஏன் உரிமை வாழ்வு வாழக் கூடாது என நினைத்தார். பிரெஞ்சு மகளிரும் ஆடவரும் சமவுரிமையுடன் வாழ்வதால்தான் சிறப்பும் வளமும்பெற்று வாழ்கின்றனர். இந்தியர் பெண்களை அடிமையாக நினைத்ததால்தான் அடிமையாயினர் என நினைத்தார். இக்கருத்தைச் சஞ்சீவி பர்வதத்தின் சாரலில் வஞ்சி என்னும் இளங்குமரி மூலம் தெளிவாக்கியுள்ளார்.

"பெண்ணுக்குப் பேச்சுரிமை வேண்டாம்
என்கின்றீரோ
மண்ணுக்கும் கேடாய் மதித்தீரோ,
பெண்ணினத்தை'

என்று தெளிவாகக் கூறியுள்ளார். அதனால் மண்ணடிமை தீரப் பெண்ணடிமை நீங்க விழைந்தார்.

## மனை வாழ்வு

பாரதிதாசனாருக்கு வாய்த்த அருந்துணைவியார் பழனியம்மாள் கவிஞரின் ஆருயிர் பிரியும் போது பழனியம்மா என்று கூறியபடியே பிரிந்தது. அவருடைய மூத்தமகள் சரசுவதி (திருமணம் ஆவதற்கு முன்பு) குடும்பவிளக்கு தோன்றுவதற்குக் காரணமாயிருந்தவர். அவரைப் பாவேந்தர் குடும்பவிளக்கு என்றே அழைப்பார். பாவேந்தரின் மனை வாழ்க்கை சிறப்பாக அமைந்தமையால் அவருக்கு மகளிரிடமும் பரிவும் பாசமும் உண்டா

யிற்று. அவர்களும் ஆடவர்களைப் போலவே உரிமை வாழ்வு வாழவேண்டும் என நினைத் தார்.

## வள்ளுவரின் வழியில்

பாரதிதாசன் திருக்குறள் வழியில் தன் வாழ்வை நடத்தியவர். தான் பெரிதும் போற்றிய பெரியார் திருக்குறளைக் கொளுத்த விரும்பியபோது அவர் அக்கருத்திற்கு உடன் படாதவர். தான் படைத்த ''குடும்பவிளக்கைக் குறளோவியம் என்று போற்றிப் புகழ்ந்தனர். வாழ்க்கைத்துணை நலத்தையே குடும்ப விளக் காக்கியவர்.

''திருவள்ளுவரின் திருக்குறள் தன்னைக்
கசடறக் கற்க; கற்றே
இசையொடு தமிழர் இனிது வாழ்கவே!''
(பா.கவி. 2:ப.158)

என்று தமிழர் புகழோடு வாழ வேண்டு மெனின் திருக்குறளைக் கற்க வேண்டும் என விரும்பியவர்.

## மாயூரம் நீதிபதி வேதநாயகரின் வழியில்

தமிழகத்தில் முதன் முதலில் பெண்களின் முன்னேற்றத்திற்காகப் பாடுபட்டவர் மாயூரம் நீதிபதி ச.வேதநாயகம் பிள்ளையே ஆவர். அவர் பெண்களுக்காகப் பெண்கல்வி, பெண் மானம், பெண்மதிமாலை போன்ற நூல்களை எழுதினார். முதல் நாவலாசிரியரான இவர் பிரதாப முதலியார் சரித்திரம், சுகுண சுந்தரி சரித்திரம் ஆகிய புதினங்களின் மூலம் பெண் களின் பெருமையை விளக்கினார். தன் நீதி நூலின்மூலம் பெண்களுக்குஅறவுரைகூறினார். சர்வ சமய சமரசக் கீர்த்தனைகளின் மூலம் பெண்களின் பெருமைகளை எடுத்துக் காட்டி னார். தேவமாதா அந்தாதி. திருவருள் அந்தாதி ஆகியவற்றின் மூலம் பெண்ணின் இறைமையை எடுத்தியம்பினார். அவர் பாவேந்தருக்கு முன்னோடியாக இருந்துள் ளார். பாவேந்தரின் குடும்பவிளக்கு, பிரெஞ்சு இலக்கியங்களைப் பின்பற்றி எழுதப்பட்டுள் ளது என்று சிலர் கருதினர். அதைப் பாவேந் தர் மறுத்து தான் வேதநாயகரின் கருத்தை விளக்கி எழுதியிருப்பதாகத் தன்னிடம் கூறிய தாகப் 'பாவேந்தம்' என்னும் நூலில் திரு கோவேந்தன் எழுதியுள்ளார்.

## பாரதியின் பாதையில்

கனக சுப்புரத்தினக் கவிஞரைப் பாரதிதா சனாக்கியவர் புதுமைப் பெண்ணைப் படைத்த பாரதியார் தான்.

பெண்களுக்குப் புதுநெறி காட்டிய பார தியைத் தன் இளமைக் காலத்தில் சந்தித்த சுப்புரத்தினக் கவிஞர் அவருடைய உயர்ந்த கொள்கைகளில் தன்னை அடிமைப்படுத்தி, தன் நாமம் கெட்டார். பாரதிக்குத் தாசன் ஆனார்.''பாரதியின் புரட்சிப் போக்கு அவரது தாசனின் சுவை மிகுந்த கவிதைகளில்தான் அதிகமாக மிளிர்கிறது.

## பகுத்தறிவுப் பகலவனின் பாசறையில்

பாரதிதாசன் பகுத்தறிவுத் தந்தையின் பாசறையில் தலைசிறந்த கவிஞராக மிளிர்ந் தார். 'பகுத்தறிவுப் பகலவன் தந்தை பெரி யார் ஈ.வெ.ரா. இலக்கிய உலகில் அவருக்குக் கிடைத்ததலைசிறந்தபாவலர் புரட்சிக்கவிஞர் பாரதிதாசன்'. தந்தை பெரியார், 'பெண் ஏன் அடிமையானாள்' என்ற சிறந்த நூலொன்றை எழுதியுள்ளார். பெரியார் அவர்கள் நடத்திய வைக்கம் போராட்டத்தில் அவருடையதுணை வியார் நாகம்மையாரும் கலந்து கொண்டார். பெரியார் அவர்கள், பெண்களை ஆடவர்கள் ஆளுவதைக் குறிக்கும் 'ஆண்மை' என்ற பதத் தையே அகராதியிலிருந்து நீக்க வேண்டும் என்றார். அவர் வள்ளுவரின் 'தெய்வந் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்' என்று பெண்ணடிமையைக் குறிக்கும் இவ் வொரு தொடருக்காகவே வள்ளுவரை வெறுத் தார் என்றால் பெண்ணுரிமையை எந்த அள விற்கு வரவேற்றார் என்பது கவனத்திற் கொள்ளத்தக்கது. இத்தகைய பெரியாரைத் தன் வாழ்நாளின் இறுதிவரை புரட்சிக்கவிஞர் போற்றினார். அவருடன் சேர்ந்து பல கலப்பு மணங்கள் நடத்தினார். சுயமரியாதைத் திரு மணங்கள் நடத்தினார். தான் முதன் முதலில் எழுதிய வெற்றி நாடகமான 'இரணியன் அல்லது இணையற்ற வீரன்' என்னும் நூலை யும் அவருக்கே காணிக்கையாக்கியுள்ளார். பெண்ணுரிமை போற்றும் நிலையில் அவர் பெரியாரையும் பொன்னே போல் போற்றி னார். இன்னோரன்ன காரணங்கள் பாவேந் தர் பெண்களின் முன்னேற்றத்திற்குப் பாடு படத் துணை புரிந்திருக்கலாம்.

# அழகில் ஆழ்ந்த அழகர்

இரா. இளங்குமரன்

"அழகு சிரிக்குமா?"

"ஏன் சிரியாது?"

"விளக்குச், சிரிப்பதைப் பார்த்ததுண்டா?"

"இல்லையே"

"பார்த்தவர் சொல்கிறார்"

"எப்படி?"

"அழகு என்பாள் திருவிளக்கில் சிரிக்கின்றாள்"

"எனக்குத் தெரியவில்லையே"

"திருவிளக்கைப் பார்த்து, நீ சிரிப்பது அதற்குத் தெரிந்தால் அல்லவா, அது சிரிக்கும்"

"அப்படியானால்"

"நாம் சிரித்தால் அழகும் சிரிக்கும்"

"நாம் அழுதால் அழகும் அழும்"

"அப்படியானால் அழகு எங்கே இருக்கிறது"

"அது எங்கே இல்லை?"

"கேள்விக்குக் கேள்வியா?"

"கேள்விக்குக் கேள்வியே பதிலாவதும் உண்டு; எங்கேயும் இருக்கும் அழகை, 'எங்கே இருக்கிறது' என்றால்"

"சரி சொல்"

"சரி! சொல்கிறேன்!"

"சிரிக்கவா?"

"ஆம்! கேள்!" நன்றாகக் கேள்:—'

நகையோடு நோக்கடா; எங்கும் உள்ளாள்;

நல்லழகு வசப்பட்டால் துன்பம் இல்லை!"

உன்னிடம் அழகு வசப்பட-நீ அழகு வசப்பட்டு நில்! - இது அழகு வசப்பட்ட அழகர் பாவேந்தர் அழகு மொழி!"

அழகைத் துய்க்க, நெஞ்சப் பறவை சிறகடித்து மேலேமேலே பறக்க வேண்டும்!

"நெஞ்சப் பறவைக்குச் சிறகு வேண்டும்!

"இரு சிறகு வேண்டுமே! அவை எவை?

'அவை, விழிகளாம் சிறகுகள்!

'இரண்டு போதுமா, சிறகுகள்! எத்தனை விரிந்து பரந்த அழகுக் கொள்ளை! அவற்றை ஒரு மொத்தமாகக் கொள்ளை கொள்ள, சிறகுகள் போதா? எத்தனை வே... கோடி வேண்டும்! போதுமா? தோற்... போகும்! காணக் கண் சிறகுகள் போதா! ஓடி ஓடிப் பறந்தாலும் போதா!

"இருவிழிச் சிறகால் நெஞ்சம்
எழுந்திடும்; முழுதும் காண,
ஒருகோடிச் சிறகு வேண்டும்;
ஓகோகோ! எனப்பின் வாங்கும்"

நேற்றுப் பார்த்தது; முந்திய நேற்றுப் பார்த்தது; இன்று பார்க்கிறது; நாளைப் பார்க்கப் போவது இது என்ன? பார்த்ததே பார்த்து; பார்த்ததையே பார்த்து! பழகப் பழகப் பாலும் புளிக்கும்; பன்னீராண்டு சென்றால் தேனும் புளிக்கும்! பார்த்ததே பார்க்கப் பற்றுமா?"

"பார்த்ததா? ஊன்றிப் பார்! உற்றுப் பார்! நேற்றுப் பார்த்ததா இன்று பார்க்கிறாய்? நேற்று இப்படிப் பார்த்தாயா? இன்னொரு முறை இதனை இப்படிப் பார்ப்பாயா? ஒவ்வொரு நாளும் அல்ல! ஒவ்வொரு பொழுதும் அல்ல! ஒவ்வொரு நொடியும் அதற்குமுன் பார்த் தறியாப் புத்தம் புதுக் காட்சி! பருகடா பருகு! பயின்றறியாப் புத்தம் புதுப் பழச் சுவையாய்ப் பாகுச்சுவையாய்ப்பருகு! மீளவும், இச்சுவை வாய்க்குமென எண்ணாமல் முடிந்த அளவும் பருகு! ஆம்

"பழங்கால இயற்கை செய்யும்
புதுக்காட்சி பருகு தம்பி!"

"இதோ காண்! கவிதையைக் காண்!"

"ஏடில்லை எழுத்தில்லை; பாடுவோன் இல்லை பயில்வோன் இல்லை; இசைஞன் இல்லை இசையரங்கில்லை; எப்படிக் கவிதையைக் காண்பது- கேட்பது?"

'இந்த மலர்க்காட்டைக் கண்ட பின்னருமா சொல்கிறாய், ''ஏடில்லை எழுத்தில்லை இசையில்லை'' என்று! எல்லாம் இருந்தும் இல்லை என்பது ஏன்? அவை உன்னிடம் இல்லை தம்பி உன்னிடம் இல்லை! உன்னிடம்! உண்டா! அவற்றிடமும் உண்டு!

''மலர்க் காடு என்ன சொல்கின்றது? உனக்கு? நினைவு வேறு நோக்கு வேறு ஆகாதே! ஆம்! நெஞ்சத்தையும் வழியையும் வேறு வேறாக வைத்துக் கொண்டு, 'பா'வில் லையே என்று பாழாகாதே! 'பாவி'யாகாதே

''இருமையும் ஒருமையாகு! ஆம்! நெஞ்சும் விழியும் ஒன்றாகு! நெஞ்சைக் கண்ணுளேவை! பின்னர், அக்கண்ணால் நோக்கு! அப்பொழுது என்னில் கவிதையைக் காண்பாய்!

''அறிவுக்கு ஆய்வு வேண்டும்! துய்ப்புக்கு அறிவை மறந்து - தன்னை மறந்து - ஒருமை நிலையாதல் வேண்டும்' உலகின் அழகைப் பார்க்கும் போது உன் கண்ணும் அழகும் அன்றி ஊடு பொருள்-குறுக்கீட்டுப் பொருள்-ஒன்று வந்து விட்டால் நீ நீயில்லை! அழகும் அழகில்லை! எல்லாவற்றையும் விட்டு அழகை மட்டும் விடாது பற்றிக் கொண்ட - கவ்விக் கொண்ட ஒருமையே வீடு! பேரின்பம்!

கேள்! அழகு என்ன சொல்கின்றது?

''நெஞ்சைக், கண்ணுளே வைக்கச் சொல்லிக், கவிதையைக் காணச் சொல்லும்''

''எங்கே போகிறாய்?

''என் உலகத்துக்குப் போகிறேன்''

''உன் உலகமா?''

''ஆமாம்''

''உனக்கென வீடு கூட இல்லையே''

''உலகமே இருப்பவனுக்கு, வீடு இல்லை என்பவன் மூளையைப் பற்றி ஆராயத்தான் வேண்டும்''

''சரி உன் உலகம் எங்கே இருக்கிறது?

''என்னிடமே இருக்கிறது''

''சிறிதா? பெரிதா?''

''சிறிதினும் சிறிது; பெரிதினும் பெரிது!''

''வியப்பாக அல்லவோ இருக்கிறது!''

''வியப்பினும் வியப்பு; அந்த உலகில் கட்டில்லை காவல் இல்லை!
அவலம் இல்லை கவலை இல்லை!
நோய் இல்லை! நொடி இல்லை!''

''ஏன், இன்பில்லை துன்பில்லை என்று அடுக்குவது தானே!

''அறியாதவன் அடுக்கன்று; அறிந்தவன் அடுக்கு! அங்கு இன்பமே அன்றித் துன்பமே இல்லை!''

''அப்படியோர் உலகம் உண்டா? இறந்த பின்னர் அடையும் வீட்டுலகம் என்பார்களே அதுவா?''

''இறந்து போனான் என்று செய்தி சொன்னார்களே! அது, நீங்களா? உங்கள் அண்ணனா?'' என்று கேட்ட மடவனுக்கு அண்ணனாக அல்லவா பேசுகிறாய்! நான் உயிரோடு தான் இருக்கிறேன்; உயிரோடு தானே பேசிக் கொண்டிருக்கிறேன். அவ்வாறாகவும் இறந்த பின்னர் அடையும் வீட்டுலகம் என்று இட்டுக் கட்டுகிறாயே ஏன்?'.

''இப்படி ஓர் உலகத்தைக் கேள்விப் பட்டதே இல்லை!''

''கேள்விப் பட்டிருந்தால் நீயல்லவா எனக்குச் சொல்லியிருப்பாய்; எங்கேயோ இன்ப உலகம் உண்டு என்பவரும் உன் கூட்டத்தார்கள் தாம்!''

''சும்மா அடுக்காதே! அந்த வீடு-தவறு-அந்த-உலகம் எங்கே என்று சொல்! துன்பமே இல்லாத அந்த உலகத்தில் நான் ஒரு நொடிப் பொழுதாவது இருக்க வேண்டும் என விரும்புகிறேன்''! அந்த உலகத்தை அடைய என்ன முயற்சி வேண்டும்! என்ன செலவு செய்ய வேண்டும்! எவ்வளவு காலம் வேண்டும்!''

''முயற்சி-செலவு-காலம் எதுவும் வேண்டியதில்லை. ஒரே ஒரு சிறிய இழப்பு தான் வேண்டும்! உடனே அந்த உலகம் உன் உடைமை!''

''சின்ன இழப்பு தானே! இன்னதென்று சொல்! செய்து விடுகிறேன்.''

''இழப்பு-சல்லிக் காசும் இழவா இழப்பு''

''இது என்ன வியப்பு!''

''ஆமாம் வியப்பினும் வியப்புதான்''

''அது என்ன இழப்பு!''

''உன்னை இழப்பது''

''சாவதா?''

''உன் கண்மூடித் தனம்-அறியாமை இன்னும் போகவில்லையே!''

''சாவாமலே உன்னை இழக்க முடியாதா!'

''தெரியவில்லை!''

''உன்னை மறந்து பார்!மறப்பது இழப்பு இல்லையா?''

''இழந்து எதைப் பார்ப்பது?''

''எதைப் பார்த்தால் என்ன? உன்னை மறந்து பார்!''

''என்ன கிடைக்கும்?''

''இன்ப உலகம் கிடைக்கும்''

''எப்படி உறுதியாகச் சொல்கிறாய் இதனை''

''எனை நான் இழந்தேன்
உலகத்தில் வாழ்த லுற்றேன்!''

—என்பது அழகில் தோய்ந்து தம்மை இழந்து எய்துதற்கு அரிய இன்ப உலகம் எய்தி அதிலே திளைத்த அழகர் பாவேந்தர் மொழி இது!

# பெண்ணின் பெருமைபற்றிப் பாவேந்தர்

கே. சாந்தகுமாரி

"இல்லதென் இல்லவள் மாண்பானால் உள்ளதென்
இல்லவள் மாணாக் கடை"

என்பது வள்ளுவர் வாக்கு. இல்லத்தின் மாண்பு மனைவியிடம் தான் உள்ளது; பெண்ணே வாழ்வின் ஆதாரம் என்பதைப் பாரதிதாசனார் தம் பாடலில் விளக்கிக்காட்டுகிறார். தன் குடும்பமே உலகம் என்றெண்ணி வாழும் ஏந்திழையாரின் நிலைகாணப்பொறா பாவேந்தர் பெண்டிர்க்கு உரிமை வழங்க மறுக்கும் ஆடவரைச் சாடுகின்றார்.

"பெண்ணடிமை தீருமட்டும் பேசும் திருநாட்டு
மண்ணடிமை தீர்ந்து வருதல் முயற் கொம்பே"

என முழங்குகின்றார். பெண் அன்பில் தாதியாய் உழன்று பணிபுரிகின்றாள் அதையே ஆண் இனம் அவளைப் பணிப் பெண்ணாக நடத்துவதை அவர் பொறுக்கவில்லை. இயற்கையிலேயே தாய்மையுள்ளம் கொண்ட பெண் திரியாய் உருகித் தீய்ந்து ஒளி தரத் தயங்குவதில்லை. சமூகம் ஆண்-பெண் இருபாலால் ஆனது. ஆண் பெண் என இருபால் உயிரும் தனித்தனியே இயங்கினாலும், அவை இரண்டும் இணையும்போது தான் வாழ்வு முழுமை பெறுகிறது. ஆண் தன்னை ஆண்டானாகவும், பெண்ணை அடிமையாகவும் எண்ணினால் அங்கு இல்லறம் இருக்காது.

"அறிவு மனையாளால் அமைதியுலகு உண்டாகும்
என்ன இதில் ஐயம்". என வினவுகிறார் பாவேந்தர்.

கல்வியில்லாப் பெண் களர்நிலத்துக்குச் சமமானவள், கல்வியுடைய பெண்ணோ திருந்திய கழனி, மக்கள் வாழ்வு என்பது முதலில் வீட்டில் தொடங்குகிறது. பின் படிப் படியாக ஊர், நாடு, உலகம் என விரிகிறது. இல்லாமையில் ஏற்படும் தீமைகளை இருண்ட வீட்டில் காட்டுகின்றார். பெண்கள் வசதியுள்ள வீட்டில் வாழ்ந்தாலும் கல்வி இன்மையால் இல்லறக் கடமைகள் ஏதும் செய்யாமல் சோம்பேறிகளாக வாழ்வதால் வீட்டில் இருட்டே நிலவும் என்கிறார்.

பெண் கல்வி இன்றேல் அறிவில்லை; ஒழுக்கமில்லை; நல்லன ஏதும் இல்லை என்ற பேருண்மையைக் குறித்திட இருண்ட வீட்டுத் தலைவியைப் படைத்தார்.

கல்வியறிவுடைய பெண்களால்தான் நல்லறிவுடைய மக்களை உருவாக்க முடியும். இதனைத் தான் குடும்ப விளக்குத் தலைவி மூலம் உணர்த்துகிறார். கற்றலும், அதற்குத் தக நிற்றலும் நிறைந்திருக்க வேண்டும். கணவனிடத்தும் துணைவியினிடத்தும்என்பது பாவேந்தரின் சிந்தனை.

விருந்தோம்பல் தமிழரின் தனிச்சிறப்பு 'செல் விருந்தோம்பி, வருவிருந்து பார்த்திருப்பது நம் பண்பாடு.

'நடை வீட்டைத் தாண்டி வரும் விருந்தைத்
தான் கண்டாள் கையேந்திப் பூண்ட மகிழ்வால்
புகழேந்தி வேண்டி வருக! அம்மா வருக
ஐயா வருக! வருக! பாப்பா தம்பி' என வரவேற்கும்

பாங்கையும், விருந்தினரை உபசரிக்கும் அழகையும் எடுத்துக் காட்டுகின்றார். இதற்கு நேர் எதிராக 'இருண்ட வீட்டில்' வீட்டுத் தலைவியின் அண்ணன் வெளியூரிலிருந்து விருந்தினனாக வருகின்றான். விடியலில் புறப்பட்டு வழிப்பயணத்தில் உணவுக்கு வழியில்லாததால் பசி பொறுக்காமல் தன் பசியைத் தானே புகன்றும் அதை உணராத் தங்கை, வீணே பேசிப் பொழுதைப் போக்குகின்றாள். வந்த அண்ணனோ உணவு விடுதியில் உண்டு மீள்கிறான்.

இயல்பான முறையான பெண்ணுரிமை களைத் தாமே முன்வந்து வழங்க வேண்டும். இன்றேல் 'ஞாயம் தராவிடில்' விடுதலை மேற்கொள்' என்பதே பாவேந்தரின் அறிவுரையாகும். பெண்கள் உரிமை காத்தற்கு உரிய வகையில் போராடாது அடங்கி இருந்தால் பெண் இனம் மட்டுமன்று, சமுதாயமே அழியும் என்கிறார். பொருந்தா மணம் கண்டு பொங்கிய அவர்

'மலம் முடத்தான் மலர் பறித்தேன் எனில்
குளிர் மலர்ச்சோலை சோவென்
றழாதோ?

என்று இளம் பெண்ணை முதியவனுக்கு மணம் முடிக்கும் கொடுமை கண்டு மனம் வெதும்புகிறார். சில்லிட்ட பிணத்திற்கு மணம் செய்ய மெல்லிய வாழைக் கன்றை வெட்டுவதா என்று சீறுகிறார்.

குழந்தை மணம் கண்டு குமுறி எழுந்தவர் நம் பாவேந்தர்.

'கூவத் தெரியாக் குயிலின் குஞ்சு
தாவாச் சிறுமான், மோவா அரும்பு
தாலியறுத்துத் தந்தையின் வீட்டில்'

என 'விதவைக் கோலம் கண்டு கதறுகிறார். மனைவி இறந்த பத்தாம் நாளே புது மாப்பிள்ளையாகும் ஆண்களைக் கண்டு ஏளனம் செய்கிறார்.

'பேடகன்ற அன்றிலைப்போல் மனைவி
செத்தால்
பெருங்கிழவன் காதல் செயப் பெண்
கேட்கின்றான்.'

துணையோடு வாழ விரும்பும் ஆசை இயல்பானது. இயல்பினை மறுத்தல் அறமன்று.

'கோரிக்கையற்றுக் கிடக்குதண்ணே-இங்கு
வேரிற் பழுத்த பலா'

எனக் கழிவிரக்கத்தில் கண் கலங்குகின்றார். எதிர்க்கத் துணிவில்லாப் பெண்கள் தற்கொலையை நாடும் பயங்கரம் இனி நாட்டில் நடக்கக் கூடாதெனக் கூறும் பாவேந்தர், மறுமணம் செய்யும் உரிமை ஆணுக்கு இருப்பது போல் பெண்ணுக்கும் உண்டு என உலகிற்கு 'மாந்தோப்பில் மணம்' என்ற பாடல் மூலம் உணர்த்துகின்றார். பொருந்தா மணம் கண்டு பொங்கி எழுகின்றார்.

'கல்லென உன்னை மதிப்பார்—கண்ணில்
கல்யாண மாப்பிள்ளை தன்னையும்
காட்டார்'

எனும் கவிஞர் கணவனைத் தேர்ந்தெடுக்கும் உரிமை கண்மணியே உனக்குண்டு எனத் தெளிவுபடுத்துகிறார். 'கற்றவனே! ஒன்று சொல்வேன், உன் கண்ணைக் கருத்தை கவர்ந்தவன்தான் கணவன்! இதற்கு உன் பெற்றோர் சம்மதிக்கவில்லை எனில் 'விடுதலை மேற்கொள்' என அறிவுரை கூறுகின்றார்.

'பெண்ணுக்குப் பேச்சுரிமை வேண்டாம்
என்கின்றீரோ
மண்ணுக்கும் கேடாய் மதித்தீரோ
பெண்ணினத்தை?'

என ஆணினத்தைச் சாடுகின்றார்.
அதேசமயம் பெண் என்பவளோ

'தற்காத்துத் தற்கொண்டான் பேணித்
தகை சான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்'

என்னும் வள்ளுவர் வாக்கின்படி வாழ வேண்டும் என்றே குடும்ப விளக்கில் நகை முத்துவைக் காட்டுகின்றார்

இளமையில் தொடங்கும் காதல் நல் இல்லறத்தில் தவழ்ந்து நன்மக்களைப் பெற்று முதுமையிலும் தொடர்கிறது என்பதை முதியோர் காதலில் விளக்குகிறார்.

பெண் எவ்வளவு கற்றிருப்பினும் தன் குடும்பம் என்னும் பல்கலைக் கழகத்தில் நல்லாசிரியையாக விளங்க வேண்டும் என்பதே பாவேந்தரின் விருப்பம்.

சொத்துரிமை, கணவரைத் தேர்ந்தெடுக்கும் உரிமை, மணவிலக்கு, விதவை மறுமணம் என எல்லா வழிகளிலும் அரசு சட்டம் இயற்றிப் பெண் மேன்மையடைய வழி வகுத்துள்ளது. பெண் பெருமை பெற்றுத் திகழ ஆண்-பெண் சமத்துவம் வேண்டும். காதல் மணம் போற்றப்பட வேண்டும். பொருந்தா மணம் பொசுக்கப்பட வேண்டும். கைம்மைத் துயர் களைந்தெறியப்பட வேண்டும் எனப் பாட்டிசைத்த பாட்டுலக வேந்தராம் பாரதிதாசனார் புகழ் ஓங்குக.

# பாவேந்தரும் ஒடுக்கப்பட்டோரும்

புலவர் கோ. தேவராசன், எம்.ஏ.,பி.எட்

## பாவேந்தர் ஏழைகளின் காவலன்

கடவுள் பெயரால், மதத்தின் பெயரால் நால்வருண நச்சுக் கொள்கையின் பெயரால் விதியின் பெயரால் ஏழை-எளிய மக்கள் ஒடுக்கப்பட்டபோது, அந்த ஒடுக்கப்பட்ட மக்களுக்காக, பிடர் சிலிர்க்கும் சிங்கமென எழுந்து, எரிமலையென வெடித்து, இடியென முழக்கம் செய்தவர் பாவேந்தர்.

சமுதாயத்தில் மிகமிகப் பிற்படுத்தப்பட்ட சூத்திரர்களுக்காகவே, பஞ்சமர்களுக்காகவே-வாழ்நாள் முழுவதும் தன் கவிதைப் படையை நடத்திச் சென்ற தானைத் தலைவராக, தன்மானக் கவிஞராக விளங்கியவர் பாவேந்தர்.

கோடிக் கணக்கான ஊமை மக்களின் குரலாய், அவர்களின் உயிர்மூச்சாய் விளங்கினார் ஏழை எளிய பிற்படுத்தப்பட்ட, தாழ்த்தப்பட்ட மக்களின் விம்மல்களும், பொருமல்களும், குமுறல்களும், கோபங்களும், சாபங்களும், அழுகுரல்களும், பாவேந்தர் பாடல்களில் புயலின் வேகத்தோடும் எதிரொலிப்பதைக் கணலாம். எப்பொழுதும் எந்நிலையிலும் அவர் ஏழை மக்களின் காவலனாகவே வாழ்ந்தார்.

## புத்துலகைப் படைத்தவர் யார்?

ஏழைத் தொழிலாளர்கள் இன்றேல் அவர்களின், தோள் வலிமை, கைத்திறன், உயிர்மூச்சு, வியர்வைத்துளிகள், செங்குருதி ஆகியவை இன்றேல் இந்த வையத்திற்கு வாழ்வும், வனப்பும் ஏது? மாட மாளிகை கூட கோபுரங்கள் ஏது? என்று அடுக்கடுக்காக வினாக் கணைகளை எழுப்பி நம்மை ஆழ்ந்த சிந்தனையில் ஆழ்த்துகிறார் பாவேந்தர்.

காடு களைந்தும் ஊர்கள் உண்டாக்கியும் கழனி திருத்தியும், உழவு புரிந்தும் உலகைப் புரப்பது தொழிலாளர்களின் தோள்கள் அல்லவா?

கற்களை உடைத்தும், மலையைப் பிளந்தும் இரும்புக் கனிகளைக் கொணர்ந்து கருவிகள் செய்தும் புவியைப் புரப்பது தொழிலாளர்களுடைய கைகள் அல்லவா?

பாதாளம் சென்று பசும்பொன் எடுத்து வரவும், ஆழ் கடல் மூழ்கி முத்தும், மணியும் கொண்டு வரவும் அடக்கிய மூச்சு தொழிலாளர்களுடைய மூச்சல்லவா?

"சிற்றூரும் வரப்பெடுத்த வயலும் ஆறு
தேக்கிய நல்வாய்க்காலும் வகைப் படுத்தி
நெற்சேர உழுதுழுது பயன் விளைக்கும்
நிறையுழைப்புத் தோள்களெலாம் எவரின் தோள்கள்"

என்று பாவேந்தர் வினாவும் போது நெஞ்சு துடிக்கத்தான் செய்யும்.

சித்திரச் சோலைகளைப் பார்க்கும் போது, அதில் பூத்துக் குலுங்கும் சிவந்த மலர்கள் பாவேந்தர் கண்களில் படவில்லை. அத்தச் சோலையை உருவாக்குவதற்கு ஏழைத் தொழிலாளர் சிந்திய செங்குருதிதான் காட்சி அளிக்கிறது.

## தொழிலாளர் நிலை

இந்த நாட்டைச் சலியாத வருவாய் உடையதாக மாற்றுவதற்குத் தங்கள் வாழ்க்கையைப் பலியிட்டுக் கொண்ட தொழிலாளர்களுக்குக் கிடைத்த பரிசு என்ன?

"காண்பதெல்லாம் தொழிலாளி செய்தான்-அவன்
காணத் தகுந்தது வறுமையாம்-அவன்
பூணத் தகுந்தது பொறுமையாம்"

இதுதான் அவர்களுக்குக் கிடைத்த மாபெரும் பரிசு.

பஞ்சமன் சூத்திரன் என்று பட்டங்கள் அளித்து ஊர்ப்புறத்தே ஒதுக்கி வைக்கப்பட்டவன் உலகுக்கெல்லாம் உணவை வழங்கும் உழவன்.

## பரிசு என்ன?

''முழங்கால் சேற்றில் நெல்முக்கி
விளைப்பவன்
மூடச் சகோதரன் பள்ளப்பயல்''

என்பதுதான். உயர் வகுப்பினரும், உயர் வர்க்கத்தினரும் உழவனுக்குத் தந்த பட்டம் ''பள்ளப் பயல்'' என்பதனை அறியும் போது இதயம் துடிக்கிறது.

பாவேந்தர் வானைப் பார்க்கிறார். விண்மீன்கள் அவருக்கு வான் மங்கையின் உடலில் தோன்றிய கொப்புளங்களாகத் தோன்றுகின்றன.

பொழுதெல்லாம் அவர்கள் உழைப்பை உறிஞ்சும் புலையர்கள் அவர்கள் மீது சொல்லம்புகளைப் பாய்ச்சும் கொடுஞ் செயலைக் கண்டு துடித்தது. அந்த வேதனை வெப்பத்தால் அதன் மேனியெங்கும் கொப்புளங்கள் தோன்றின. அந்தக் கொப்புளங்கள் விரிவானம் முழுவதும் விண்மீனாய்க் காட்சியளிக்கிறது என்று பாவேந்தர் குறிப்பிடுகிறார்.

## விதியின் பெயரால் சதி

''கூழுக்குப் பற்பலர் வாடவும்—சிற்சிலர்
கொள்ளை யடிப்பதும் நீதியோ''

என்று வினா எழுப்பும் போது—ஆதிக்க வர்க்கம்—அது ஆண்டவன் கட்டளை—முற்பிறவிப் பயன் என்று வெந்த புண்ணில் வேல் பாய்ச்சியது. கடவுள் பெயரால் விதியின் பெயரால் உழைக்கும் வர்க்கத்தின் உழைப்பெல்லாம் கொள்ளையடிக்கப் பட்டபோது, பாவேந்தர் கொதித்தெழுந்தார். ஏழை எளிய மக்களுக்கு எதிராக நிற்பது எந்தச் சக்தியானாலும், அது கடவுளாகவே இருந்தாலும் அந்தச் சக்தியைத் தூள் தூளாக்குவோம் என்று முழங்கினார்.

ஏழை எளிய ஒடுக்கப்பட்ட மக்கள் இன்று எலியாக, முயலாக வாழலாம். ஏமாந்த காலத்தில் ஏற்றங் கொண்டோன் புலி வேடம் போடலாம். ஆனால் அது நிலையானதன்று. காலம் மாறும். கதையும் மாறும்.

உழைப்பவரோ பலர். செல்வர்களோ மிகச் சிலர். உழைப்பவர் கடலைப் போல உள்ளனர். உழைப்பை உறிஞ்சி வாழும் செல்வர்கள் கடலில் மிதக்கும் ஓடம் போல உள்ளனர். கடல் கொந்தளித்தால் ஓடம் என்னவாகும்?

## பாவேந்தரின் கனவு

ஏழை எளிய ஒடுக்கப்பட்ட மக்களுக்காகவே வாழ்ந்தவர் பாவேந்தர். தனது பாட்டுத் திறம் முழுவதையும் அவர்களுக்காகவே பயன்படுத்தியவர் பாவேந்தர். அவர்கள் அடிமைத்தனம் நீங்கிட, அச்சம் போக்கிட,

''மனிதரில் நீயுமோர் மனிதன்; மண்ணன்று
இமைதிற எழுந்து நன்றாய்
எண்ணுவாய்
தோளை உயர்த்து. சுடர்முகம் தூக்கு
மீசையை முறுக்கி மேலே ஏற்று''

என்று வீர முழக்கம் செய்தார். அவரது இலட்சியம் ஆண்டான் அடிமையற்ற பொதுவுடைமைச் சமுதாயம் காண்பதேயாகும்.

''பொது உடைமைக் கொள்கை
திசையெட்டும் சேர்ப்போம்
புனிதமோடு அதையெங்கள் உயிரென்று
காப்போம்''

என்பதே அவரது கனவு. அதற்காகவே தன் வாழ்நாள் முழுவதும் பாடுபட்டவர் பாவேந்தர். ஒடுக்கப்பட்ட தொழிலாளி வர்க்கம் அவரை என்றென்றும் தன் நெஞ்சில் சுமந்து கொண்டிருக்கும் என்பது உறுதி.

---

## தொண்டு செய்வாய்!

ஒண்டமிழ்த்தாய் சிலம்படியின்
முன்னேற்றம் ஒவ்வொன்றும்
உன்முன் னேற்றம்!
கண்டறிவாய்! எழுந்திருநீ!
இளந்தமிழா! கண்விழிப்பாய்!
இறந்தொ ழிந்த
பண்டைநலம் புதுப்புலமை
பழம்பெருமை அனைத்தையும்நீ
படைப்பாய்! இந்நாள்
தொண்டுசெய்வாய்! தமிழுக்குத்
துறைதோறும் துறைதோறும்
துடித்தெ ழுந்தே!

புரட்சிக் கவிஞர்
''தமிழியக்கம்''

# நான் கண்ட பாவேந்தர்

மா. சு. சம்பந்தன்

எதிர்பாரா வகையில் பாரி நிலையம் உள்ள கட்டடத்தில் பாவேந்தரைப் புறாக்கள் சூழ இருந்த அறையில் காணும் வாய்ப்பு ஏற்பட்டது. அவரைப் பார்த்து வணக்கம் சொல்லி, பொங்கல் வாழ்த்து ஒன்று எழுதித் தரும்படி கேட்டுக் கொண்டேன். மறுநாள் வந்து வாங்கிப் போகும்படி சொன்னார். முத்து முத்தான எழுத்தால், பஃறொடை வெண்பாவான பாட்டைத் தந்தார். மகிழ்ந்து வாங்கிக் கொண்டேன். அதனை அழகாகப் பொங்கல் வாழ்த்து மடலில் அச்சடித்துப் பரப்பினேன்.

"கடல்மேல் எழும்பரிதித் தங்கக் கதிர்கள்
உடல்மேல் ஒளியாய் உயிர்மேல்
உணர்வாகிப்
போந்தநாள், பொங்கற் புதுநாள்
நனிவாழி!
ஆர்ந்த பாற்பொங்கல் அருந்தி எம்
பொன்னுடை
கட்டுமணிச் சிற்றிடையார் காளையரும்
ஆந்தமிழர்
மட்டற்ற செல்வம், உயர்மக்கள், உற
வோடுநலம்
பெற்றுப் பெருவாழ்வும் பேருலகின்
மாப்புகழும்
உற்றுநனி வாழ்க உவந்து!"

—பாரதிதாசன்

பாவேந்தர் 'முல்லை' எனும் மாத இதழைச் சென்னையில் திரு. முத்தையாவுடன் சேர்ந்து தொடங்கினார். அவ்விதழ்க்குச் சென்னை நகரில் முகவராகச் (ஏஜெண்ட்), சில காலம் இருந்து விற்பனை செய்தேன்.

அடுத்து, நான் தமிழன் பதிப்பகம் எனும் வெளியீட்டு அமைப்பைத் தொடங்கிய போது, முதன் முதலாகப் பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரையாரைக் கொண்டு வருங்காலத் தமிழகம் எனும் தலைப்பில் ஒரு நூலை எழுதச் செய்து வெளியிட்டேன். அதற்குப் பாவேந்தரிடம் முன்னுரை வாங்கிச் சேர்த்துள்ளேன்.

காஞ்சிபுரத்திலிருந்து வானம்பாடி வெளியீட்டின் சார்பில் பாவேந்தரின் எதிர் பாராமுத்தம் எனும் கவிதை நூல், மேல் பகுதியில் கவிதையும் கீழ்ப்பகுதியில் ஓவியர் இராய் சவுதிரி எழுதிக் கொடுத்த படமும் இணைத்து அச்சடிக்கப் பட்டிருந்தது. இம்முதற் பதிப்பைக் கண்டு களித்து இன்பங் கொண்டேன். இவ் 'எதிர் பாரா முத்தக்' கதை பின்பு திரைப்படமாக எடுக்கப்பட்ட போது 'பொன்முடி' என்று பெயர் மாற்றப் பட்டு வெளியாகியது அப்படத்தைக் கண்ட வர்கள் தம் குழந்தைகளுக்கு - ஆணாக இருந்தால் பொன்முடி என்றும் பெண்ணாக இருந்தால் பூங்கோதை என்றும் பெயர் சூட்டி மகிழ்ந்ததை நான் நேராக அறிந்து மனம் பூரித்துப் போனேன்.

பதிப்பகத்தார்கள் சேர்ந்து ஒரு பொதுக் கூட்டத்தைச் சென்னை ஆயிரம் விளக்குப் பகுதியில் நடத்தினார்கள் அக்கூட்டத்திற்கு நான் பதிப்பாளன் என்ற முறையில் சென்று இருந்தேன். அங்குப் பாவேந்தர் வந்திருந்தார். பல தீர்மானங்கள் உருவாககப்பட்டன அவற்றைச் செம்மையாகத் திருத்திக் கொடுத்தவர் பாவேந்தரே ஆவார்!

சென்னைத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தில் செயற்குழு உறுப்பினனாக நான் இருந்த போது அச்சங்கத்தின் சார்பில் மெமோரியல் கூடத்தில் மாநாடு நடைபெற்ற போது, பாவேந்தர் அவர்களுக்கும் திரு பா. தாவுத்ஷா அவர்களுக்கும் திரு சி. சக்கரவர்த்தி இராச கோபாலாச்சாரியார் அவர்கள் முன்னிலையில் கேடயம் கொடுத்துப் பாராட்டச் செய்துள்ள நிகழ்ச்சி என் நினைவில் இன்னும் பசுமையாகவே உள்ளது!

# பாட்டினில் குண்டை வைத்தோன்!

**பனையபுரம் ந. கு. பாண்டுரங்கன்**

இனப்பற்றும் மொழியின் பற்றும்
எழுதி எழுதித் தந்தவர்!
மனத்தினின்று மடமை தன்னை
மரண மாக வைத்தவர்!
தன்துஇனம் விழிப்பு கொள்ள
தட்டி யெழுப்பி விட்டவர்!
தினவெடுத்த தோள்கள் தம்மைத்
திரண்டு எழவே செய்தவர்!

ஆத்திகத்தின் பொய்மை யெல்லாம்
அழித்தோ ழிக்க வந்தவர்!
நாத்திகத்தின் அடிக்கல் நாட்டி
நமக்கு வீடு தந்தவர்!

சாத்திரத்தை மூட்டை கட்டிச்
சகதி தன்னில் எறிந்தவர்!
பாத்திறத்தால் தமிழி னத்தைப்
பாது காத்து நின்றவர்!

பாட்டினாலே சுரணை சூடு
படர வைத்த நல்லவர்!
காட்டிவிட்ட தீயைப் போலக்
கருத்தி விட்ட வல்லவர்!
நாட்டிவைத்த பாட்டு வித்தை
நமது நெஞ்சில் ஊன்றுவம்!
பாட்டிலெல்லாம் குண்டை வைத்த
பாவின் வேந்தர் வாழ்கவே!

---

தமிழ் அவருக்கு உயிர், தமிழ் அவருக்கு அமிழ்து; தமிழ் அவருக்குத் தேன்; தமிழ் அவருக்குக் களைப்பை நீக்கும் அருமருந்து. 'கரும்பு தந்த தீஞ்சாறே கவி தந்த நறுஞ் சுளையே! கவின் செய் முல்லை அரும்பு தந்த வெண்ணகையே அணி தந்த செந்தமிழே'' என்று அவர் ஏற்றிப் போற்றுகிறார். அப்படிப்பட்ட அருந்தமிழை 'இரும்பு தந்த நெஞ்சுடையார்—துறைதோறும்', 'எழிலை ஈடழித்து வரும் புதுமை நினைக்கையிலே' அவர் நெஞ்சு துடிக்கிறது; வாய் பதைக்கிறது!

''தொண்டு வந்த நெஞ்சுடையார்—துறை தோறும் தமிழின் எழிலைத் துரிக்காவண்ணம் உண்டு வரல் நினைக்கையிலே'' அவர் உளம் பதைக்கிறது.

''உடலியக்கும் நல்லுயிரே—உயிரியக்கும் நுண்கலையே—மக்கள் வாழ்வாம், கடலியக்கும் சுவைப்பாட்டே—கண்ணான செந்தமிழே! அன்பே, நாட்டில்—கெடல் இயக்கும் நெஞ்சுடையார் துறைதோறும் தமிழின் எழிலைக் கெடுக்கப் பாடுபடல் தன்னை நினைக்கையிலே'' அவர் நெஞ்சு பதைக்கிறது!

''வணிகர்க்கும் தமிழென்றால் வெறுப் புண்டோ அரசியல் சீர்வாய்க்கப் பெற்றோர்! ஆணிகர்த்த பேடிகளோ? அரும்புலவர் ஊமைகளோ? இல்லறத்தைப் பேணு மற்ற யாவருமே உணர்வற்றுப் போனாரோ? பெருவாழ்க்கோர் ஏணி பெற்றும் ஏறாத—தமிழர் உயிர் வாழ்வதிலும் இறத்தல் நன்றே''! என்று பாவேந்தர் அழுத்தம் திருத்தமாகக் கூறுகிறார்.

அறத்தலைவர், அறநிலையக் காப்பாளர் விழாவெடுப்போர் மணம் புரிவோர், கல்வி தரும் கணக்காயர், அவர்தம் மாணாக்கர் ஆகியோர் நகுமாறு நந்தமிழை நலிவு செய்யும் தீயர்களோ? நல்வாழ்வுக்குரிய வழிகளைப் பேணாமல் புறக்கணிப்பார்களானால், அத்தகைய தமிழர் உயிர் வாழ்வதிலும் இறத்தல் நன்றே! என்று அவர் சாடுகின்றார்.

தமிழர் வாழ, தமிழ்நாடு வாழ துயர் நீக்கி, தோளுயர்த்தி, பாடுபட்டுச் சீரடைய வழிகாட்டுகின்றார்.

பாவேந்தர் நூல்களை வாங்கிப் படித்து அவர் கூறும் கருத்துகளைச் சீர்தூக்கிப் பார்த்து ஏற்று, உணர்ச்சி பெற்றுத் தமிழினம் வாழ அயராது பாடுபடுவோமாக. பாவேந்தருடன் பழகியவர்களையும், அவருக்குச் சிறப்புச் செய்தவர்களையும், என்றென்றும் ஏற்றிப் போற்றி வருவோமாக. வாழ்க பாவேந்தர்! வளர்க அவர்தம் உணர்ச்சிப் பெருக்கான உயிரோவியங்கள்!

# புரட்சிக் கவிஞரின் நகைச்சுவை

**புலவர் காவிரிச் செல்வன்**

ஒன்பான் சுவைகளில் ஒரு தனிச்சுவை நகைச்சுவையாகும். அச்சுவையறியாமல் படைக்கும் படைப்பு நல்ல படைப்பாகுமா? வீரம் முதலான எத்தனை சுவையிருந்தாலும் நகைச் சுவையில்லாப் படைப்பு நிலவில்லா வானமே! நல்ல மணமில்லா மலரே!

ஒரு கருத்தினை மக்கள் மனத்தில் பதிய வைக்கப் பயன்படுவது நகைச் சுவையே-அதன் வாயிலாகக் கொடுக்கப்படுகின்ற கருத்து உள்ளத்தில் ஒன்றிக் கலந்து உணர்வூட்டும்; கலைவாணர் முதலானோர் அதற்குச் சான்று.

நூற்றாண்டு விழாக் காணும் நம் போற்றுதலுக்குரிய புரட்சிக் கவிஞர் அவர்கள் பல் துறைப் படைப்புகளைப் படைத்தளித்துள்ளார்கள். அவர் படைத்த நகைச் சுவை நளினமானது. கருத்துச் செறிந்தது. கற்போர்க்குக் கழிபேருவகை தரத்தக்கது.

''நல்லதோர் குடும்பம் பல்கலைக் கழகம்' என்று சொன்னவன் கல்லாரால் விளைந்த கணக்கற்ற தொல்லைகளை அடுக்கடுக்காய்த் தருகின்றான் இருண்ட வீட்டில் நகைச் சுவையோடு.

தூங்கி வழியும் தாய் - சொத்தைப் பல் தோண்டும் கணவர். பிட்டைத் தின்னும் ஆவலில் பாலால் வாய் கொப்புளிக்கும் மகன் என்னே! குடும்பத்தின் - நிலை கல்லாதார் குடும்பம் எப்படியிருக்கும்? காலைக் கடன் முடிக்காப் பெரியமகன் பிட்டுத் தின்னப்படும் பாடு சொல்லவே வேண்டாம்! பெட்டி மீது உட்கார்ந்து ஆவலோடு உண்ண வயிறு வலிக்கிறது அந்தோ பாவம்! கடமையை முடிக்க எழ, 'வடையின் சுவையோ விடேன் விடேன்' என்றதாம். அவன் படும் வேதனையை நகைச் சுவையுடன் கூறுகின்றார் புரட்சிக் கவிஞர். கொல்லைப் புறம் நோக்கி விரைந்து செல்ல- எத்தனை தடைகள் - இடர்ப்பாடுகள- நாயை மிதித்து, பானையைத் தள்ளி கன்றின் நெற்றியில் மோதி என்று சொன்னால் மட்டும் போதாதா? போன வேகத்தில் தடுமாறிக் கீழே விழுந்து,''இரண்டு பற்களை எங்கேயோ போட்டு'' என்று வருகின்ற இடம்தான் நகைச் சுவையின் உச்ச கட்டம்.

கல்லார் குடும்பத்தில் நாள்தோறும் என்ன இடர்ப்பாடுகள் வரும் என்பதை இந்தப் பெரிய மகன் வாயிலாகக் காட்டும் நகைச் சுவை கற்போர் மனத்தில் தெற்றெனப் படும் கல்வியின் சிறப்பு.

மகனோ இப்படி! தாய் எப்படி? தூக்க மயக்கத்தில் கலங்கிக் கிடக்கிறாள் காலைப் போதில் - பொத்தல் மரத்துப் புழுப் போல் நெளிந்தாளாம்.

நகைச்சுவையின் உச்சகட்டத்தினைப் பாருங்கள் பல் விலக்கிவிட்டு செம்பில்வைத்த மீதிப் பாலில் சாணத்தை எடுத்து போட்டுக் கரைத்து, வீட்டின் முன் தெளித்தாளாம் எவ்வளவு அறியாமை! அறியாமையால் வந்த தூக்கத்தின் அவலத்தினை எவ்வளவு நகைச் சுவையுணர்வுடன் புரட்சிக் கவிஞர் தருகின்றார் பாருங்கள்!

இதிலிருந்து என்ன தெரிகின்றது. ஆண்கள் கற்க பெண்கள் கற்க அனைவரும் கற்க என்பது புலப்படவில்லையா? கல்வியின் சிறப்பை உணர்ந்த இவ்வளவு நகைச்சுவையுடன் கருத்துக் களைத் தருகின்றார் புரட்சிக் கவிஞர்

பிறர் சொல்வதை மறைந்திருந்து கேட்கும் குணம் ஆண்பாலாரை விடபெண்பாலாருக்கு மிகுதியும் உண்டு என்ற கருத்து ஒன்று நிலவுகிறது. தமிழகத்தில். ஒற்றுக் கேட்டல் ஒரு இழி குணம். அதை எப்படி உணர்த்துவது அதுவும் பிறர் உணர உணர்த்துவது. அதற்கு

ஒரு முறையினைக் கையாளுகின்றார் புரட்சிக் கவிஞர், மயிலின் அழகை வருணிக்கின்றார். அதன் கழுத்தை நீளத்தை-பலவண்ண அழகினைக் கூறுகின்றார். அத்தோடு விடவில்லை; பெண்கள் கழுத்து ஏன் குட்டையாக இருக்கிறது தெரியுமா? என வினவி, 'அயலவன் வீட்டு அறையில் நடப்பதை எட்டிப் பார்க்கா திருப்பதற்கே-இயற்கையன்னை இப்பெண்கட் கெல்லாம் குட்டைக் கழுத்தைக் கொடுத்தான்' என்று விடை கூறுமுகத்தான் நகைச்சுவை மிளிரக் கூறுகின்றார்.

காதல் உணர்வுகளை நுட்பமாக-அழகிய லுணர்வுடன் வெளிப்படுத்தும் புரட்சிக்கவிஞர் சில இடங்களில் நகைச் சுவையை நடை பயில வைக்கின்ற பாங்கு வியப்புக்குரியது. தலைவனைத் தலைவி பார்க்கிறாள்-அவனுடைய அழகை அள்ளிப் பருகுகிறாள்-எண்ணத்திலே ஏக்கம்-அவன் நிமிர்கிறான்-பார்வை பாவையின் மேல் படுகிறது. இருவர் விழிப் பார்வையும் நேர் எதிர்எதிர்மின் பாய்ந்த நிலை-என்ன செய்தார்கள்?

''பாடம் படித்து நிமிர்ந்த விழி தனிற்
பட்டுத் தெறித்தது மானின் விழி!''

ஆடை திருத்தி நின்றாள் அவன்தான்''-அதுதான் இயற்கை. காதலன் கண் பட்டவுடன் கை ஆடையில்தான். இருக்கும் அங்கங்களை மூட, அவள் அதைத்தான் செய்தாள். இதுவரை சரி! இனிமேல்தான். புரட்சிக் கவிஞரின் நுண்மை. அவன் மயங்கி விட்டான்.

''ஆயிரம் ஏடு திருப்புகின்றான்'' என்று. படித்துக் கொண்டிருந்தவன் எ ண் ண ம் எங்கோ செல்ல அவன் ஆயிரம் ஏடு திருப்பினானாம்! இந்த உணர்வுகளை எப்படிச் சொல்வது! ஒரு பெரிய நாடகக் காட்சியை எவ்வளவு நகைச்சுவையுணர்வுடன் காட்டி விட்டார் பாருங்கள்!

நகைச் சுவையின் உச்சக் கட்டம்.

நிலபுலம் ஆள் அம்பு மாடு மனை இவையெல்லாம் மடங்கள் சொத்து. மடாதிபதி ஆடை அணிமணிகள் சந்தன மணமலைகள் இத்தனையுடன் நாள்தோறும் அறுசுவை உணவு இப்படி வாழ்பவர்கள் மகளிர் புடை சூழக் கட்டிலறை நோக்கிச் செல்கிறார்களாம் பூம்பட்டு மெத்தையிலே புதுமலர்கள் பூரிப்பு அவர் சைவத்தை ஆரம்பித்தன்'' என்கிறார். அதோடுவிட்டாரா? மடாதிபதி கனவு காண, அதில் இவன் தோன்றி மடத்தின் ஆஸ்தியெல்லாம் மக்களுக்காக்கிவிட்டேன்! திடத்தில் மிக்கவனே இனி நீ சிவபுரி வாழ்க்கை நடத்துக!'' என்றாராம்.

சிவனடியார், திடுக்கிட்டெழுந்து கூப்பிடு காவலரை எனவே கூச்சல் கிளப்பிவிட்டார்'' என்கின்ற போது அந்நாளைய தமிழக மடாலய நிலையினை எவ்வளவு நகைச்சுவையுடன் தெளிவுடன் துணிவுடன் சொல்லியிருக்கிறர் என்பது எண்ணி எண்ணி வியக்கத்தக்கதாகும்.

யாரும் தொட அஞ்சுகின்ற செய்திகளை நகைச்சுவையுடன் சொல்லித் தன் கருத்துக்கு வலிமை தேடிக் கொள்ளப் புரட்சி கவிஞர் எவ்வளவு முயன்றிருக்கின்றார் பாருங்கள்! இதிலும் கூட பொதுமையை அவர் மறக்கவில்லை! அவரையும் மறக்க முடியுமா?

---

## இறத்தல் நன்றே!

**கூற்றமென வாழ்வதுவோ தமிழுக்கே ஏடெழுதும் கூட்டம்? தீமை**
**மாற்றவரும் அச்சகத்தார் வகைமறந்து போனாரோ? சொல்லாக் கத்தார்**
**தூற்றுமொழி ஏன்சுமந்தார்? துண்டறிக்கை யாளருமோ தீயர்? வாழ்வில்**
**ஏற்றமுற எண்ணாத தமிழருயிர் வாழ்வதினும் இறத்தல் நன்றே!**

**புரட்சிக்கவிஞர்-தமிழியக்கம்**

---

# பாவேந்தர் பாட்டமைப்பு

ஆலந்தூர் கோ. மோகனரங்கன், எம்.ஏ.

பாவேந்தர் பாட்டமைப்பு பெரும் புலவர்களும் போற்றிப் பாராட்டும் தன்மை உடையது. யாப்பிலக்கணத்தின் வழிமாறாமல் சொல்ல எண்ணிய கருத்தை வலிவோடும் பொலிவோடும் சொல்லி மரபுக் கவிதையின் மாண்பினை நிலை நாட்டுகின்ற திறத்தினைப் பாவேந்தர் பாடல் முழுவதும் காணலாம்.

அவர் தம் இசைப் பாடல்கள் நெஞ்சை அள்ளுகின்றன. இலக்கணம் அறிந்தோரால் உணரப்படும் இயைபுத் தொடை அடிதோறும் அமைந்து பழைய மரபினைக் காப்பதோடுகருத்துப் புதுமையினால் மக்களிடையே மறுமலர்ச்சியைப் பெற வைத்தன. இயைபுத் தொடை என்பது இசை நயத்தை ஊட்டவும் மொழியழகினைக் காட்டவும் புலவர்களால் பொருத்தமாகக் கையாளப்படும் இலக்கண உறுப்பு.

தொடு என்னும் தொழிற் பெயரை முதலாகக் கொண்டு அமைந்த "தொடை" என்னும் சொல் தொடுக்கப்படும் பாடல்களுக்குத் துணையாகவும் தூணாகவும் நின்று பாட்டுக் கலை அமைப்பைக் கட்டிக் காப்பாற்றி வருவதைக் காட்டும். மலர்களால் மாலை தொடுக்கப்படுவது போல் தொடைகளால் பாடல் தொடுக்கப்படுகிறது.

தொடைகள் பலவகை. அவற்றுள் இயைபுத் தொடை ஒன்று. மோனைத் தொடையும் எதுகைத் தொடையும் பாட்டுக்கு முதுகெலும்பு என்றால் இயைபுத் தொடையைக் கால்களுக்கு நிகராகக் கூறலாம்.

கருத்தை முகமாக வைத்தும் உணர்ச்சியை உயிராகப் படைத்தும் யாப்பிலக்கண உறுப்புகளைப் பொருத்தியும் பாட்டு உண்டாக்கப் படும்போது பல்வேறு அழகுகள் பொங்குகின்றன. பொங்கி வரும் அழகுகளிலே ஒன்று இயைபுத் தொடை. அது பாட்டின் அமைப்பிற்குத் தனியழகினைத் தருகிறது. தமிழினுடைய தனித்தன்மையையும் வரலாறு காணாத தொன்மையையும் குறிப்பிட விரும்பிய பாவேந்தர்,

"தனித்தியங் கும்தன்மை தமிழினுக் குண்டு
தமிழே ஞாலத்தில் தாய்மொழி பண்டு
கனிச்சாறு போற்பல நூலெலாம் கண்டு
காத்ததும் அளித்ததும் தமிழ்செய்த
தொண்டு"

(இசையமுது முதற்பகுதி பக் 38)

என்று பாடும்போது உண்டு - பண்டு-கண்டு-தொண்டு என்னும் சொற்கள் ஓசையினிமையைப் பெருக்கி உள்ளத்தை ஈர்ப்பதோடு கருத்தையும் நம் நெஞ்சில் நிறுத்துகின்றன. தமிழின் சிறப்பையும் விளக்குகின்றன.

புகைச் சுருட்டு தீமைதரும் என்பதைக் குறிப்பிடும் பாவேந்தர்,

"மூச்சுக் கருவிகள் முற்றும் நோய்ஏறும்
—பிள்ளை
முத்தம் தருநேரத்தில் வாய்நாறும்!
ஓய்ச்சல் ஒழிவில் லாதிருமல் சீறும்—நல்
ஊரோ உன்னைச் சீஎன்றே கூறும்"

(இசையமுது முதற்பகுதி பக் 33)

என்னும் பாட்டடிகளில் ஏறும்-நாறும்-சீறும்-கூறும் என்னும் சொற்கள் பொருத்தமாக அமைந்து பாட்டினைப் பொலிவாக்குகின்றன.

பேய் என்று சொல்லும் அச்சத்தை மடமை என்று காட்ட வந்த பாவேந்தர்

"முச்சந்தி காத்தானும் உண்டா?—இதை
முணுமுணுப் பதுநேரில் கண்டா?
பச்சைப் புளுகெல்லாம் மெய்யாக - நம்பிப்
பல்பொருள் இழப்பார்கள் மடமை
விரும்பி'

(இசையமுது முதற்பகுதி பக் 54)

# இவனொரு புரட்சிக்காரன் !

**கவிஞர் தமிழ்த்தாசன்**

*கம்பனவன் மறுபிறப்பு கவிக்குலத்தின் தலைப்பிறப்பு!*
*வம்பெனவே தீயசக்தி வளரா(து) ஒழித்தே, நல்ல;*
*கொம்பெனவே நிமிர்ந்து நிற்கும் கொள்கையின் வீர மார்பன்!*
*தும்பைப்பூ மனத்தைக் கொண்டோன்! துயர்கண்டார் போற்றும் வள்ளல்!*

*தமிழேநீ அமுது என்றான்; தமிழ்தன்னை உயிராய்க் கொண்டான்!*
*தமிழேநீ தாய்ப்பால் என்றான்; தமிழ்மொழியை மதுவாய் உண்டான்!*
*தமிழேநீ வளமும் வாழ்வும் தமிழர்க்கே என்றான்; என்றும்*
*தமிழேநீ உயிர்மூச் சென்றான்; தமிழ்காக்கும் பணியில் நின்றான்!*

*பாரதிக்குப் பின்னர் வெற்றிப் பாரதியின் தாசன் ஆனான்!*
*பாரதியை விஞ்சுகின்ற பாடல்கள் செய்தான்; அந்தச் (கோதை)*
*சாரதிக்கோர் வீரன் உண்டு சரித்திரத்தில்; ஆனால் இங்கே*
*சாரதியும் இவனே! வில்லின் சாதுர்யம் இவனே! கண்டீர்!*

*பாட்டுக்குப் புதிய பாதை பார்வைக்குக் காட்டி வைத்தான்!*
*ஏட்டுக்(கு) உயர்வைத் தந்தான்! எழிலியற்கைக் கவிகள் செய்தான்!*
*கூட்டுக்கு உதவாக் கொள்கை குப்பையிலே போட்டு விட்டு*
*வீட்டுக்குள் விளக்கை ஏற்றி விதவைமணம் உயர்த்திச் சொன்னான்!*

*இவன்பாடா எழிலே இல்லை! இவன்கவியில் எதுதான் இல்லை !*
*இவன்பழிக்காத் தீமை இல்லை! இவனன்றோ பெரியார் சீடன்!!*
*இவன் சொல்லா உவமை இல்லை! இவன்தானே உணர்ச்சிப் பாடல்!*
*இவன்வாழா வாழ்க்கை இல்லை! இவன்வாழ்வே வீர வாழ்வு!!*

*இவன்கண்கள் நெருப்புக் கண்கள் இழிவுகளைச் சுட்டெரிக்கும்!*
*இவன்கையோ புலியின் கையாம் ஈனர்தம் படையை வீழ்த்தும்!*
*இவன்கைகள் களிற்றுக் கால்கள்; எதிரிகளை நசுக்க லுண்மை!*
*இவன்முகமோ நிலவின் தோற்றம்! இவன்உண்மைப் புரட்சிக் காரன்!!*

---

என்று பாடி அறியாமை உடையவரின் மடமையைப் போக்குகின்றார். அவருடைய பாடல்களில் இயைபுத்தொடை அழகு மிளிர்வதைக் காணலாம்.

மெய் சொல்லல் நல்லது என்று பாடிய பாவேந்தர் அக்கருத்தை வலியுறுத்தும் போது,

''பின்னவன் கெஞ்சியும் நின்றாலும் அன்றி
முன்னவன் அஞ்சிட நின்றாலும்
மன்னவரே எதிர் நின்றாலும் —புலி
தின்னவரே னென்று சொன்னாலும் —நீ
மெய் சொல்லல் நல்லதப்பா''

(இசையமுது முதற்பகுதி பக் 22)

எனத் தீட்டிக் காட்டுகின்றார். அடிதோறும் அமைந்த சொற்கள் கருத்தின் வலிவை அழகுபட எடுத்துக் காட்டுகின்றன.

தன் கணவர் வருகின்ற அழகினைப் பாடும் பெண்ணொருத்தி வாயிலாகப் பாவேந்தர் காட்டுகின்ற சித்திரத்தை,

''இருப்பவர் உள்ளே முதலாளி செட்டி
ஏறுகால் மேல்தானென் சர்க்கரைக் கட்டி
தெரிய வில்லையோடி தலையில் துப்பட்டி?
சேரனே அவர்என்றால் அதில்என்ன
அட்டி?''

(இசையமுது முதற்பகுதி பக் 3)

என்னும் பாடலில் காணலாம். இப்பாடலின் ஈற்றடிகளில் காணும் சொற்கள் பாட்டுக்கே உயிர் தருகின்ற அழகினைக் காணலாம்.

பாவேந்தரின் பாட்டமைப்பு ஆராயுந்தோறும் அழகுகள் விளங்குவன; இன்பங்கள் வழங்குவன. பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம் பார்ப்பது போல் இயைபுத்தொடை அழகு ஒன்று மட்டுமே காட்டியுள்ளேன். நீல வானின அழகெல்லாம் பாவேந்தர் பாடல்களில் காணலாம். ஆழக்கடலின் முத்துக்கள் அவர் படைப்பில் அணிவகுப்பு நடத்தும்.

# பாரதிதாசனும் கண்ணதாசனும்

புலவர் தமிழ்ப்பித்தன், எம்.ஏ.

பாவேந்தர் பாரதிதாசன் அவர்களிடம் மிகுந்த ஈடுபாடு கொண்டவர், கவியரசர் கண்ணதாசன். அது போலவே கவியரசர் கண்ணதாசனிடம் மிகுந்த பற்று வைத்திருந் தவர் பாவேந்தர் பாரதிதாசன்.

இருவருக்குமிடையே தொடர்பு மாடர்ன் தியேட்டர்ஸ் நிறுவனத்தில் 1946-ஆம் ஆண்டி லேயே தொடங்கி விட்டது எனலாம். பாவேந் தருக்கும் கவியரசருக்கும் இடையே பல ஒப்பியல்புகள் உள்ளன.

பாரதியாரின் கவிதை வரிகளை அடித்தள மாக வைத்து, பாரதிதாசன் ஓரிரு பாடல் களை உருவாக்கியிருக்கிறார்; கண்ணதாசனும் அவ்வாறே உருவாக்கியுள்ளார்.

**ஆடுவோமே, பள்ளுப் பாடுவோமே—நாம்**
**ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டோம்**
**என்று**

இது பாரதியின் பாடல் வரி.

**ஆடுவோமே, பள்ளுப் பாடுவோமே—தமிழ்**
**ஆட்சியின் மாட்சியில் கூடுவோமே.**

—இது பாவேந்தரின் பாடல் வரி.

**தீராத விளையாட்டுப் பிள்ளை—கண்ணன்**
**தெருவிலே பெண்களுக் கோயாத**
**தொல்லை**

—இது பாரதியின் பாடல் வரி.

**தீராத விளையாட்டுப் பிள்ளை—இவன்**
**சிங்கார மன்மதன்தான் சந்தேகம் இல்லை**

—இது கண்ணதாசனின் திரைப்படப் பாடல் வரி.

இயற் பெயராலன்றிப் புனைபெயரால் சிறப்புப் பெற்ற இந்த இரு கவிஞர்களின் புனைபெயர்களிலும் 'தாசன்' ஒரு நாயகம் வகிக்கிறது.

பாவேந்தர் புதுவை மாநிலத்தைச் சேர்ந்த வராதலால் பாண்டிச்சேரியில் வாழும் வாய்ப் பைப் பெற்றவர். கண்ணதாசன் 'தீர்த்த யாத் திரை'க்காகப் பலமுறை பாண்டிச்சேரிக்குச் சென்று திரும்பும் வாய்ப்புப் பெற்றவர்.

அருந்தமிழ்க் கவிதைகளை யாத்ததுடன் கட்டுரை, கதை, நாடகம் ஆகிய நூல்களைப் பாவேந்தர் படைத்திருக்கிறார். கண்ணதாச னும் கவிதை நூல்களுடன் நாடகம், சிறுகதை, கட்டுரை, நவீனம் எனப் பலவகை நூல்களை உருவாக்கித் தமிழுலகிற்கு அளித்துள்ளார்.

பாவேந்தர் மேடைப் பேச்சிலும் வல்லவ ராக விளங்கினார். கண்ணதாசனும் மேடைப் பேச்சில் தனக்கென ஒரு பாணியை வகுத்துப் புகழ் பெற்றார்.

பாவேந்தரின் எழுத்துக்களில் நகைச்சுவை யுணர்வு பரிணமிக்கும். கண்ணதாசனின் எழுத்துக்களிலும் நகைச்சுவை உணர்வு கொலுவோச்சும்.

பாவேந்தர் திரைப் படங்களுக்கு உரை யாடல்களையும் பாடல்களையும் செறிவாக அமைத்துத் தந்தார். கண்ணதாசனும் திரைப் பட உரையாடல்களையும் பாடல்களையும் தீட்டிப் புகழ் பெற்றார்.

பாவேந்தர், நகரதூதன் போன்ற இதழ் களில் எழுதியதுடன் சொந்தமாகக் 'குயில்' என்னும் இதழை நடத்தி வந்தார். கண்ண தாசனும் பொன்னி, தாய்நாடு போன்ற இதழ் களில் எழுதி வந்ததுடன் பிற்காலத்தில் தென் றல், முல்லை, கடிதம், கண்ணதாசன் போன்ற இதழ்களைச் சொந்தமாக நடத்தி வந்தார்.

பாவேந்தர், பாண்டியன் பரிசு என்னும் தமது காவியத்தைத் திரைப்பட மாக்குவதற் காக, பாரதிதாசன் பிக்சர்ஸ் என்ற நிறுவனத் தைத் தொடங்கினார். கண்ணதாசனும் சொந்தத்தில் கண்ணதாசன் புரடெக்ஷன்ஸ் என்னும் நிறுவனத்தைத் தொடங்கினார்.

பாண்டிச்சேரியில் வாழ்ந்து வந்த பாவேந்தர் சென்னைப் பொது மருத்துவமனையில் இயற்கை எய்தினார்.

சென்னையில் வாழ்ந்து வந்த கண்ணதாசன், கவிஞர்கள் மாநாட்டில் கலந்து கொள்வதற்காக அமெரிக்கா சென்று சிகிச்சைக்காக சிகாகோ மருத்துவமனையில் சேர்ந்து, உயிர் துறந்தார்.

1954 ஜூன் திங்களில் தென்றல் என்னும் வார ஏட்டைத் தொடங்கிய கண்ணதாசன், முதல் இதழிலேயே 'நமது குடும்பம்' என்ற தலைப்பில் ஒரு கவிதையைப் படைத்திருந்தார்.

> "நாமெல்லாம் ஒரே குடும்பம்-அடடா அந்த
> நயமிகுந்த வார்த்தையில் தான் என்ன
> இன்பம்"

என்று தொடங்கும் அந்தக் கவிதையில் பேரறிஞர் அண்ணா, கலைஞர் கருணாநிதி, மதியழகன், என். வி. நடராசன், ஈ.வி.கே. சம்பத் ஆகியோரைக் குறிப்பிட்டிருந்தார்.

12 பக்கங்கள் கொண்ட தென்றல் வார ஏட்டின் முன் பக்கத்தில் பகுத்தறிவியக்கத் தலைவர் ஒருவரின் புகைப்படத்தைப் பொருத்தமான தலைப்புடன் வெளியிட்டு வந்தார் கண்ணதாசன்.

அறிஞர் அண்ணாவின் புகைப்படத்தை வெளியிட்டு, 'சிந்தனைக்கோர் இமயம்' எனத் தலைப்புத் தந்திருந்தார்.

ஈ. வி. கே. சம்பத்தின் புகைப்படத்தை வெளியிட்டு, 'திராவிடத்தின் மாலங்கோவ்' என்று தலைப்புக் கொடுத்திருந்தார்.

என். வி. நடராசனின் புகைப்படத்திற்கு வழங்கப்பட்டிருந்த தலைப்பு,

> 'சலியாத உழைப்பாளி தங்கக் கம்பி
> தமிழ்காத்த நடராசன் நல்ல தம்பி'

என்பதாகும்.

பாவேந்தரின் படத்திற்கு வழங்கப்பட்டிருந்த தலைப்பு 'புரட்சி மலர்கள் பூத்த தோட்டம்' என்பதாகும்.

புரட்சிக் கவிஞர் என்று வழங்கப்பட்டு வந்த பாவேந்தரைப், புரட்சிக் கவிஞர்கள் பலரை உருவாக்கிய பூந்தோட்டம் எனக் கண்ணதாசன் குறிப்பிட்டிருந்தது நயமாகவும் புதுமையாகவும் திகழ்ந்தது.

1955 வாக்கில் நானே ராஜா என்னும் திரைப்படத்திற்குத் திரைக்கதை-உரையாடல் ஆகியவற்றை எழுதி வந்தார் கண்ணதாசன். படத்திற்குரிய பாடல்களைக் குயிலன், கே. டி சந்தானம், தஞ்சை ராமய்யதாஸ் ஆகியோர் எழுதியிருந்தனர். கண்ணதாசன் பாடல் எழுதவில்லை.

அந்தப் படத்தில் அரசவையில் நாட்டியம் நடைபெறும் கட்டம் ஒன்று திட்டமிடப்பட்டது. அதற்குரிய பாடலை எந்தக் கவிஞரிடம் எழுதி வாங்கலாம் என்று கண்ணதாசனிடம் வினவினார். படத் தயாரிப்பாளரும இயக்குநருமாகிய ஆர்.ஆர். சந்திரன்.

உடனே கண்ணதாசன் குறிப்பிட்டார்.

"ஆடற்கலைக் கழகு தேடப் பிறந்தவள்' என்றொரு பாடலைப் பாவேந்தரிடமிருந்து விலைக்கு வாங்கிப் படத்தில் பயன்படுத்திக் கொள்ளலாம், பாடலின் பின் பகுதியை மற்றொரு கட்டத்தில் பயன்படுத்தலாம்" என்று தெரிவித்தார்.

அந்தப் பாடல் நானே ராஜாவில் பயன்படுத்தப்பட்டது. பாவேந்தரின் பாடலைப் பயன்படுத்த வேண்டும் என்று கண்ணதாசன் சொன்னது, பாவேந்தரிடம் அவருக்கிருந்த பற்றுதலை எடுத்துக் காட்ட உதவுகிறது.

1956 வாக்கில் கவியரசர் கண்ணதாசனின் தமையனார் ஏ. எல். சீனிவாசன் அம்பிகாபதி திரைக்கதை உரையாடல்களை அமைத்துத் தரவேண்டுமென்று தன் தம்பி கண்ணதாசனைக் கேட்டார்.

"ஆம்! பாவேந்தர் பாரதிதாசன் அவர்களால்தான் இந்தக் காதல் காவியத்திற்கு உயிரோட்டமுள்ள உரையாடல்களை எழுத இயலும். அவரைத் தவிர வேறு யார் எழுதினாலும் சுவையிருக்காது" என்று சொல்லிய கண்ணதாசன், இராம. சுப்பையா அவர்களைப் பாண்டிச்சேரிக்கு அனுப்பி, பாவேந்தரை அழைத்து வரச் செய்து, அவரை அம்பிகாபதி திரைப்பட உரையாடல் எழுதச் சம்மதிக்க வைத்துவிட்டார்.

ஒருநாள், படப்பிடிப்பின் போது ஒரு காட்சி அமைப்பில் இயக்குநருக்கும் பாவேந்தருக்கும் கருத்து வேறுபாடு ஏற்படவே, பாவேந்தர் அரங்கத்தை விட்டு வெளியேறி, கண்ணதாசனைச் சந்தித்து, நடந்த நிகழ்ச்சியைச் சொல்லி, ''நான் உரையாடல் எழுதும் பொறுப்பிலிருந்து விலகிக் கொள்கிறேன். உன்னிடம் சொல்லி விட்டுப் போகணும்னு தான் வந்தேன்'' என்றார்.

கண்ணதாசன் சமாதான வார்த்தைகள் எதுவும் எடுபடவில்லை. பாவேந்தர் பாண்டிச்சேரி நோக்கிப் புறப்பட்டுச் சென்று சென்றுவிட்டார்.

''பாவேந்தர், அம்பிகாபதிக்கு உரையாடல் எழுதாதது தமிழ்ப்பட உலகிற்கு ஓர் இழப்பு'' என்று கண்ணதாசன் பல நாட்கள் சொல்லிச் சொல்லிப் புலம்பிக் கொண்டிருந்தார்.

இந்த நிகழ்ச்சியிலிருந்து இரு உண்மைகள் நமக்குத் தெளிவாகின்றன.

கண்ணதாசன், தனக்குக் கிடைத்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ளாமல் அதனைப் பாவேந்தருக்கு வழங்கியதன் மூலம் பாவேந்தரிடம் கண்ணதாசன் கொண்டிருந்த அளவற்ற ஈடுபாடு தெளிவாகியது.

இயக்குநரிடம் கோபித்துக் கொண்டு வெளிவந்த பாவேந்தர் அப்படியே ஊருக்குப் போகாமல், கண்ணதாசனை வந்து சந்தித்து, விவரத்தைக் கூறிச் சென்ற நிகழ்ச்சி, கண்ணதாசனிடம் பாவேந்தர் வைத்திருந்த அளவற்ற அன்பை வெளிப்படுத்துகிறது. படத்திற்கு உரையாடல் எழுத வேண்டுமென்று கேட்டுக் கொண்டு அதற்குரிய ஏற்பாட்டைச் செய்து தந்த கண்ணதாசனிடம் நடைபெற்ற நிகழ்ச்சியைச் சொல்லாமல் செல்வது முறையாகாது என்று பாவேந்தர் செயல்பட்டது அவரது நேர்மைக் குணத்தை எடுத்துரைக்க உதவுகிறது.

1957 ஆம் ஆண்டில் ஒருநாள் தென்றல் அலுவலகத்திற்குள் நுழைந்த கண்ணதாசன் சற்றுக கோபத்துடன் காணப்பட்டார்.

''பாரதிதாசனைப் பார்த்தீங்களா! அண்ணாவைக் கண்டபடி திட்டிக்குயில்பத்திரிகையில் எழுதியிருக்கிறார்'' என்று மன வருத்தத்துடன் என்னிடம் சொன்ன கண்ணதாசன், மறுவினாடியே ''பாரதிதாசனை இந்த வாரத் தென்றலிலே ஒரு பிடி பிடிச்சிர வேண்டியதுதான்! சொல்றேன் எழுதுங்க'' என்றார். நான் டிக்டேசன் எடுப்பதற்குத் தயாரானேன். கண்ணதாசன் நடந்து கொண்டே சொல்லத் தொடங்கினார்.

பாவலன் குயிலே உன்னைப்
பகுத்தறி வாளன் என்றே
பாவியான் நினைத்தேன்! இல்லை
பண்பிலாச் சிறுவன் நீயே

எனத் தொடங்கி பல பாராக்கள் சொன்னார். 'குரல் கெட்ட குயிலே' என்னும் தலைப்பையும் கொடுத்தார்.

1961 இல் கவிஞர் கண்ணதாசன் தமிழ் தேசியக் கட்சியில் அங்கம் வகித்தார். செப்டம்பர் திங்களில் நடைபெற்ற த. தே. க. மாநாட்டில் பாவேந்தர் தலைமையில் நிகழ்ந்த கவியரங்கில் பங்குபெற்ற 'குரல் கெட்ட குயிலே கேள்' கவிதையை எழுதியமைக்காகப் பாவேந்தரிடம் மன்னிப்புக் கேட்டார். அந்தக் கவிதையின் ஒரு பகுதி,

இருபதுடன் பதினான்கு வயது சென்றும்
இயல்பினில்யான் குழந்தையென அறிவாய் அன்றோ
இருள்சூழ்ந்த உலகில்யான் வாழ்ந்த காலை
என்பெருமை நின்கையைக் கடித்து விட்டேன்
பொறுத்தருள்வாய்! யானறிவேன்! என்ற போதும்
பொறுக்காத நெஞ்சத்தால் புலம்புகின்றேன்!

1957 இல் பாவேந்தரை ஒரு வேகத்தில் தாக்கி எழுதிவிட்ட போதிலும், பின்னர் அதற்காகப் பலமுறை வருத்தப்பட்டு வந்தார் கண்ணதாசன். இதன் உச்சக் கட்டம்—1961ல் த. தே. க. மாநாட்டுக் கவியரங்கில் - பகிரங்க மன்னிப்புக் கேட்டதன் மூலம் கண்ணதாசன் மன நிம்மதி பெற்றார். நாக்கில் நரம்பில்லாமல் எத்தனையோ தலைவர்களைக் கண்டன மொழிகளால் வசைபாடிய கண்ணதாசன் பின்னர் எவரிடமும் கழிவிரக்கம் கொண்டதாகவோ மன்னிப்புக் கேட்டதாகவோ

வரலாறு கிடையாது. ஆனால், பாவேந்தர் ஒருவரிடம்தான் பகிரங்க மன்னிப்புக் கேட்டிருக்கிறார்.

1964 ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 20 ஆம் நாள் கண்ணதாசன் எழும்பூரில் உள்ள கீதா கபேயில் தங்கித் தனது சொந்தத் தயாரிப்பான 'கறுப்புப் பணம்' குறித்து இயக்குநர் ஜி.ஆர். நாதனுடன் கலந்துரையாடல் நடத்திக் கொண்டிருந்தார். இரவு 8 மணி இருக்கும். கண்ணதாசன் புரடக்ஷன்ஸ் அலுவலகத்திலிருந்து தயாரிப்பு நிர்வாகி தொலைபேசியின் மூலம் கண்ணதாசனிடம் பாரதிதாசன் அவர்கள் உடல்நலக் குறைவுக்கு ஆட்பட்டுச் சென்னைப் பொது மருத்துவமனையில் சிகிச்சைக்காக அனுமதிக்கப்பட்டுள்ளாராம் அவரது உடல்நிலை மிகவும் கவலைக்கிடமாக உள்ளதாம். பொன்னடியான் என்பவர் இந்தத் தகவலைத் தெரிவித்தார் எனக் கூறினார்.

உடனே கலந்துரையாடலைப் பாதியில் நிறுத்திவிட்டு, என்னையும் அழைத்துக் கொண்டு, பொது மருத்துவமனை நோக்கிக் காரில் விரைந்தார் கண்ணதாசன்.

பாவேந்தரின் அருகில் சென்றார் கண்ணதாசன். அப்போது ஈ.வி.கே. சம்பத், பாவேந்தரின் அருகில் அமர்ந்திருந்தார். அவரதுகையை பிடித்தவாறு அவரிடம் ஏதோ சொல்லிக் கொண்டிருந்தார். பாவேந்தர்.

"கண்ணதாசன் வந்திருக்கிறார்" என்று பாவேந்தரிடம் தெரிவித்தார் பொன்னடியான்.

உடனே ஏறிட்டுப் பார்த்து, "கண்ணதாசா, வா!வா! " என்று வரவேற்றார், பாவேந்தர்.

அப்போது ஈ.வி.கே. சம்பத் பாவேந்தரிடமிருந்து விடை பெற்றுக் கொண்டார்.

பாவேந்தர் கண்ணதாசனிடம் உரையாடத் தொடங்கினார்.

"கண்ணதாசா! முன்னே நான் எழுதுனனே ஒருநாளு.. இந்தப் பண்டிதமணி, டி.கே.சி இவர்களை எல்லாம் தாக்கி தமிழியக்கம்னு அது மாதிரி நீ ஒண்ணு எழுது! இப்ப அப்படி ஒரு நூறு தேவைப்படுது!" என்றார்.

"எழுதுகிறேன் அய்யா! "-கண்ணதாசன் பதில் அளித்தார்,

"கண்ணதாசா! உடல் நலத்தைப் பேணிக்கணும்னு நம்ம தோழர்கள் எல்லாரிடத்திலயும் சொல்லு" -பாவேந்தர் கூறினார்.

"சொல்றேன் அய்யா! "-கண்ணதாசன் மறுமொழி கூறினார்.

பின்னர் சில நிமிடங்கள் அங்கு இருந்துவிட்டு சுமார் 8.30 மணி அளவில் பொது மருத்துவ மனையை விட்டுப் புறப்பட்டார் கண்ணதாசன்.

மறுநாள் பொழுது, 'பாவேந்தர் முந்திய நாள் இரவு 12½ மணிக்குமேல் இயற்கை எய்திவிட்டார்' என்ற செய்தியுடன்தான் விடிந்தது. செய்தி அறிந்த கண்ணதாசன் துடித்தார்; துயர வெள்ளத்தில் மிதந்தார். பாவேந்தரின் பரு உடல் பாண்டிச்சேரிக்கு எடுத்துச் செல்லப்படுவதற்குத் தனது நாடக நிறுவனத்தின் வாகனத்தை (VAN) கொடுத்துதவினார் கண்ணதாசன்.

பாவேந்தர் பாரதிதாசன்—கவியரசர் கண்ணதாசன் இருவரிடையே இருந்த உறவில் புலமைக் காய்ச்சல் காணப்படவில்லை; புலமைப் பாராட்டலே காணப்பட்டது. இருவரும் ஒருவரை யொருவர் மதித்தனர்; போற்றினர்! நலம் பாராட்டினர். கற்றாரைக் கற்றாரே காமுறுவர் என்னும் பொன்மொழி மெய்தான் என்பதை உணர்த்திய பெருமக்களாக அவர்கள் இருவரும் திகழ்ந்தனர்.

---

## தாழ்மையினைத் துடைப்பாய்!

உயர்தமிழ்த்தாய் இந்நிலத்தில் அடைகின்ற வெற்றியெலாம் உன்றன் வெற்றி
அயராதே! எழுந்திருநீ! இளந்தமிழா, அறஞ்செய்வாய்! நாமடைந்த
துயரத்தைப் பழிதன்னை வாழ்வினிலோர் தாழ்மையினைத் துடைப்பாய் இந்நாள்
செயல்செய்வாய் தமிழுக்குத் துறைதோறும் துறைதோறும் சீறி வந்தே!

**புரட்சிக் கவிஞர்-தமிழியக்கம்**

---

# மார்க்சிய வழிக் கவிஞன்

நெல்லிக்குப்பம் கே. ஆர். சபாபதி

பாட்டுலகின் பாதையை மாற்றிய பாரதிக்குத் தாசனாகிப் பாரதியின் பார்வைக்குத் தப்பிவிட்ட சனாதனக் கோட்டையை வெடிக்குண்டுக் கவிதைகளால் தகர்த்தவர் பாவேந்தர்.

மூடத்தனத்தின் மொத்த உருவமாக சாதீயப் பிடிப்புகளில் மதவாதச் சேற்றில்

தன்னை மறந்து
தாய்மொழியை மறந்து
தன்னிலையிழந்து
தாசானுதாசனாகி

அழிந்துகொண்டிருந்த தமிழினத்தின் அவல நிலையினைப் போக்க வந்தவர்களுள் பாவேந்தரும் ஒருவராவார்.

நெறிகெட்ட மாந்தர்கள் நிலையானதென வகுத்த ஆரிய மூடத்தனப் பழக்கவழக்கங்கள் அத்தனையும் மனித குலத்தின் எதிரி என அவன் எண்ணினான்.

'பிறப்பொக்கும் எவ்வுயிர்க்கும்' என நெறி வகுத்து எல்லோரும் கற்க, கல்வியே வாழ்வின் கண்ணாகும் என அறிவு வழிநின்று' ஈதல் இசைபட வாழ்தல் என்னும் குறிக்கோளுடன் வாழ்ந்த தமிழ்ச் சமுதாயத்தில் ஆரியம் புகுந்தது. தமிழினம் வழி தவறியது. அதன் விளைவு....

மதம் வாழ்வின் ஜீவனானது.
சாதிகள் பெருகின.
சடங்குகள் சம்பிரதாயங்கள் இடத்துக்கு இடம்,
ஊருக்கு ஊர், சாதிக்கு சாதி வேறுபட்டன.

இதன் விளைவு

தமிழன் தாழ்ந்தான்.
தமிழ் கலப்பட மொழியாயிற்று.
கருத்து வேறுபாடுகளைக்கூடப் பலநோக்குடன் பார்த்து
வாழத் தலைப்பட்டான்.

இதை எண்ணிய பாரதி,

''ஐந்துதலை பாம்பென்பான் அப்பன்
ஆறுதலையென்று மகன் சொல்லிவிட்டால்
நெஞ்சு பிரிந்திடுவார் பின்பு
நெடுநாளிருவரும் பகைத்திருப்பார்''

என்று பாடினார்.

அப்பனும் மகனும்கூட கருத்து வேறுபாட்டால் பகைவர்களாகி விடுவார்கள் என்று தமிழ்ச் சமுதாயத்தின் இழிநிலையினை எடுத்துக்காட்டி,

''நெஞ்சு பொறுக்குதில்லையே
இந்த நிலைகெட்ட மனிதரை நினைத்து விட்டால்''

என்று வேதனைப்பட்டார்.

இத்தனைப் பிரிவை ஏற்படுத்தியது எது?
''மதம்'' - மதத்தால் உருவான சாதியும் சாத்திரங்களுமே காரணமாகும்.

இதனைப் புரிந்துகொண்ட பாவேந்தர் முதலில் மதத்தின் பிடியில் இருந்து மனிதனைக் காக்க வேண்டும் என எண்ணினார். அதனால்,

''மதம் என்ற கருங்கற்பாங்கில்
மல்லிகை பூப்பதில்லை
மதியினில் மயக்கம் என்ற
நஞ்சொன்றே மலரும் நாட்டில்
புதியதோர் பொல்லாங்கென்றும்
எரிமலை புகையும் மக்கள்
இது நலம் இது தீதென்னும்
எண்ணமும் இழந்து போவார்''

என்று பாவேந்தர் நம்பினார்.

'மதம் என்பது மக்களை மயக்கும் அபின்' என்ற மார்க்சிய தத்துவத்தை இந்திய நாட்டில் மிக எளிதாக விளக்கிய முதல் பாவலர் பாவேந்தர் என்றே கூறலாம். எந்த மதமானாலும் அது ஏழையைச் சுரண்டி, எத்தர்கள் பிழைக்க வழிவகுக்கும் ஏற்பாடு மதியினை

மாய்த்துத் தலைவிதியென நம்ப வைத்து வீரத்தை விளைக்காது கோழைத்தனத்துக்கு அழைப்பு விடுக்கும் என்பதை வலியுறுத்தினார். மதம் ஒரு பலிபீடம் என அறிவித்தார்.

பாடுபட்டவன்
பட்டியில் மாடென உழைத்து ஒரு
பருக்கைச் சோற்றுக்கு வழியின்றிப்
பாதிக்குதே பசி என்றுரைத்தால் செய்த
பாவத்தைக் காரணம் காட்டுவார்கள்
மதவாதிகள்'

எதிர்த்து நின்றால்
ஏன் என்று கேட்டால்

இது நாத்திக வாதம் என்று கவிப்படை திரட்டுவான் என்பதையும் வலியுறுத்தினார்.

''கூடித் தவிக்கும் குழந்தைகள்
மனைவியர்
கூழை நினைத்திடும் போதினிலே
கோயில் வேடிக்கையாம் தெருமீதிலே''

எரிச்சலடைந்து இந்த இழிநிலை போக்க-அறிவுத் தெளிவு பெற

''மூடத்தனத்தை முடுக்கும் மதத்தை
நிர்மூலப்படுத்தக் கை ஓங்குவீர் பலி
பீடத்தை விட்டினி நீங்குவீர்''

என்று துணிந்து புரட்சிக்குக் குரல் எழுப்பினார் பாவேந்தர்.

பாவேந்தர்

''ஒரு தனிப்பிறவி
காலத்தின் அருட்கொடை
கவியுலகின் திருப்புமுனை
கருத்துப் பெட்டகம்
பழமைக்குப் பேரிடி
புதுமைக்குப் பேரொளி''

அவரது ஆசைக் கனவுகளில் ஒன்று மதமென்னும் பேய் மக்களைப் பிடியாதிருக்க வேண்டும் என்பதாகும். அது நிறைவேறியிருந்தால்,

மகாமகம் நடந்திருக்காது; மாண்டவர்கள் சொர்க்கம் போனார்கள் என்ற மமதையான பேச்சும் பேசமுடியாது.

இன்று

மதம் அரசியல்வாதிகளின் ஆயுதம்' மக்களை ஏமாளிகளாக்கிப் பதவிபெறும் படிக்கட்டுகளாக்கிவிட்டது. இன்றைய நிலையில் தமிழ்நாட்டுச் சரித்திரம் ஒரு களப்பிரர் ஆட்சிக்கு வந்துவிட்டது. இது நீடித்தால் மெல்லத் தமிழினிச் சாகும். தமிழினம் பழையபடி தன்னிலை மறக்கும். தாழ்வுற்று வறுமை மிஞ்சி அழிந்து போகும். இதனைத் தடுத்திடும் மாமருந்து பாவேந்தருடையதே. அவரது கவிதையே நம்பிக்கையூற்று. ஆதிக்கப் புரியினர் அச்சுறுத்தினாலும் அழிக்க நினைத்தாலும் அது நடக்காது என்பதையே,

''கோட்டை நாற்காலி இன்றுண்டு—நாளை
கொண்டுபோய் விடுவான் திராவிடக்
காளை
ஏட்டையும் நூலையும் தடுப்பது கூடும்—
உரிமை
எண்ணத்தை மாற்றுதல் எப்படிக் கூடும்
அடக்குமுறை செய்திடல் முடியும்—
கொள்கை
அழிக்குமுறை எவ்வாறு முடியும்
ஒடுக்குசிறை காட்டுதல் முடியும்—உணர்
வொடுக்குதல் எவ்வாறு முடியும்''

என்று பாடியதை நினைத்துப் பாவேந்தரின் கனவு நனவாகத் தமிழினம் ஒன்றுபட்டுக்

கருத்து மாற்றம்
கட்சி வேறுபாடு
சாதிப் பிரிவுகள்
சமயப் பிணக்குகள்

அனைத்தையும் மறந்து ஒதுக்கி ஓரணியில் நின்று

தமிழினம் காப்போம்
தமிழை உயர்த்துவோம்
தன்மானத்தோடு உலக அரங்கில்
வாழ்வோம்

எனச் சூளுரைத்துப் பணியாற்றுவதே பாவேந்தருக்குக் காட்டும் நன்றியாகும்.

வாழ்க பாவேந்தர்!

வளர்க அவரது புரட்சிப் பாதை!!

வெல்க தமிழினம்!!!

# பாவேந்தரின் மொழியுணர்வு

**புலவர் த. சுந்தரராசன் எம்.ஏ.,எம்.எட்.,**

தமிழினம் வரலாற்றுக் காலம் தொட்டு மொழிப் பகையினையும், இனப்பகையினையும் வெவ்வேறு வடிவங்களில் சுமந்து இடர்ப் பட்டு வருகிறது.

இனப்பகையைக் களைவதற்கு அவ்வப் போது ஆற்றலாளர்கள் தோன்றினாலும், அவர்களுள் எவரும் துணிந்து நின்று மொழிப் பகையைக் களைய முற்படவில்லை.

20ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் மறைமலையடிகளார், திரு.வி.க. நாவலர் சோமசுந்தர பாரதியார், தேவநேயப் பாவாணர், பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரையார் போன்ற தமிழ்ச் சான்றோர் மொழிப் பகையைக் களைவதற்குத் தக்கதோர் களம் அமைத்தனர். அக்களத்தில் சீறிப்பாயும் புலியென முழக்கமிட்ட தன்னேரில்லா வீரனே பாவேந்தர் பாரதிதாசன்.

மொழியுணர்வையும், இனவுணர்வையும் பாவேந்தர் தன் இருகண்களாகப் போற்றினார். தமிழ் உணர்வுப் பெருக்கால் உந்தப் பட்ட பாவேந்தர் தமிழ் மொழியின் சிறப்பினை விண்ணுயரப்பாடி மகிழ்ந்தார்.

மானிடப் பிறப்பில் ஆசைகள் அலையாய் வந்து மோதுவதும், அவற்றுள் சில நங்கூரம் பாய்ச்சப்பட்ட கப்பல் போல் நின்று தமிழ்ப் பண்பாட்டைச் சுமந்து நிற்பதும் இயல்பே!

இதோ! பாவேந்தர் உள்ளம் சுமந்த பண் பாட்டுப் பாடல்,

**''அதுதான் என் ஆசை- தமிழ்**
**அன்னை அவள் முன்னைப் போலத்**
**தன்னைத்தானே ஆளவேண்டும்''**

பாவேந்தரின் உள்ளம் சுமந்த தமிழ் உள்ளத்தைச் சுமந்து திரியும் தமிழ் மறவர்கள் தமிழ் நிலப்பரப்பில் இன்று எண்ணிலடங்கார் வாழ்கின்றனர்.

தமிழ் மக்களும், தமிழ் அறிஞர்களும் தமிழ் வளர்ச்சி, தமிழ்வழிக்கல்வி இவற்றின் பால் அளவற்ற ஈடுபாடு கொண்டுள்ளனர் தமிழ் வளர்ச்சிக்கும், தமிழ் வழிக்கல்விக்கும் ஆட்சியாளர்களும், மேட்டுக் குடியினருமே தடையாக உள்ளனர். மொழியுணர்வினை மக்கள்பால் ஊட்டி, அதன் வாயிலாக ஆட்சிப் பொறுப்பேற்ற ''திராவிட இயக்கம்'' மொழி வளர்ச்சிக்கும் இனவுணர்வு மேம்பாட்டுக்கும் தடைக் கல்லாகக் காணப்பட்டது; காணப்படுகின்றது. இந்த உண்மையினைப் பாவேந்தர் அன்றே உணர்ந்தார்.

**''அன்னையின் சீர் அழிப்பதற்கே**
**ஆளவந்தார்**
**முயலுகின்றார் இன்றுமவர்**
**திருந்தவில்லை சாவேவா-அவர்**
**இனியேனும் திருந்துதற்கே''**

என்னும் பாவேந்தரின் தமிழ் உணர்வுப் பாடலை நெஞ்சத்திற் சுமந்து ஏங்கித் திரியும் தமிழ் உணர்வாளர்களின் உண்மை முகத்தினையும் அரசியலாரின் பொய் முகத்தினையும் கட்சிப் பாகுபாடின்றி இன்று எல்லா நிலைகளிலும் காணுகிறோம்.

தமிழ்த் தொண்டு என்பது உதட்டளவிலும், உள்ளத்தால் மொழி வணிகமும் அனைத்து நிலைகளிலும் நடைபெறுகிறது. இதனை உணர்ந்த பாவேந்தர்,

**''தமிழர்க்குத் தலைவரெனச் சொல்வார்**
**தாமும்**
**தமிழ்மாய்க்க காசு பெறத் துடிக்கின்**
**றார்கள்**
**தமிழ் மாய்க்க கவிதரச் சிலரும் உள்ளார்**
**தமிழ கொல்லும் தலைவர்களைக் காணும்**
**தீய**
**தலை முறையும் இதுவாகும்''**

என்று பாவேந்தரின் பாட்டினை உணர்ந்து இடர் தவிர்த்துத் தமிழ்காக்கத் தக்கதோர் கூட்டம் இந்நாளில் உருவாகி வருகிறது. ஆட்சியாளர்களுக்கு ஏற்றாற் போல் நயந்து பேசித் தன்னை வளப்படுத்திக்கொண்டு, போலிவேடம் போடுவோரைத் தமிழ் மீட்சிக்குப் போர்ப்பரணி பாடும், தமிழ் மறவர்கள் சொல்லிலும் செயலிலும் தனிமைப்படுத்தப் பெற வேண்டும்.

தமிழ் உணர்வாளர்களை ஏற்றிப் போற்றுவதொன்றே தமிழ் மீட்சிக்குத் தக்கதோர் வழியாகும். இந்த உணர்வினைத்தான் பாவேந்தரும் பெற்றிருந்தார்.

**''மீட்சிக்குத் தமிழ் காக்கும்**
**வீரர் வாழ்கவே**
**ஆட்சிக்குத் தமிழ்விற்கும்**
**அடியவர் வீழ்கவே''**

என்னும் பாடலின் பொருளை உணர்ந்தோர் யார்? உணராதோர் யார்? என்று தரம்பிரித்துத் தமிழ் கற்றோரை அடையாளம் காணவும் காட்டவும் வேண்டிய காலம் இதுவாகவுள்ளது.

பேராயக் கட்சியிடமிருந்து தமிழ் மொழியினைக் காத்திடவும், இந்தி ஆதிக்கத்தினைத் தடுத்து நிறுத்திடவும் 1937ஆம் ஆண்டு தொடங்கி இன்று வரை ''திராவிடர் இயக்கம்'' எத்தனையோ போர்க்களங்களைக் கண்டுள்ளது. பலநூறு தமிழ் மறவர்களைக் களப்பலி கொடுத்துள்ளது. திராவிட இயக்கத்தின் ஒருகூறு எனக் கூறிக்கொள்ளும் இன்றைய ஆட்சியாளர்கள் ''நவோதயப் பள்ளிகளை'' வரவேற்பதன் வாயிலாக இந்தி மொழியினை ஏற்கத் துணிந்துள்ளனர். மொழிவழிப்பட்டதே தேசியம். இந்திமொழி ஆதிக்கத்தினை ஒரு பண்பாட்டுப் படை எடுப்பாகப் பாவேந்தர் கருதினார்.

இந்தி எதிர்ப்புப் போர்க்களத்தில் நின்று பாவேந்தர் பாடிய போர்ப்பரணி

**''இந்திதனை-அதன்**
**ஆதிக்கம் தன்னைப் புதைத்திடுவோம்**
**பங்கம் விளைத்திடில் தாய் மொழிக்கே**
**-உடற்**
**பச்சை ரத்தம்பரி மாறிடுவோம்''**

இந்தப் பாட்டில் புதைந்து கிடக்கும் உண்மைப் பொருளை உணராத ஆட்சியாளர்கள் இன்று தமிழ் மொழிக்கே துரோகம் செய்ய முற்பட்டுள்ளனர்.

நவோதயப் பள்ளிகளில் முதல் வகுப்பு முதல் எட்டாம் வகுப்பு முடிய தாய் மொழிக் கல்வி, அதன்மேல் இந்தி, ஆங்கிலம் வழி கல்வி புகட்டப்படும் என்பது மைய அரசின் கொள்கை. இன்றைய கல்வி அமைச்சர் செ. அரங்கநாயகம் அவர்கள் ''கிராமப்புற மக்களை அறிவாளிகளாக்க'' மைய அரசின் கொள்கையினை ஏற்றுக் கொண்டதாகக் கூறுகிறார். கல்வி அமைச்சரின் இந்தக் கொள்கை விளக்கம் ''தமிழ் வழிக் கற்றோர் அறிவாளிகளாக முடியாது'' எனச் சொல்வதாகவுள்ளது.

இன்றைய அரசு ஆட்சிப் பொறுப்பேற்றதும் தமிழ்நாட்டுக் கல்வி நிலையங்களில் தமிழ் சிறப்பிடம் பெறும், ஆட்சி நிலையில் தமிழ் ஏற்றம் பெறும் என அறிவித்துத் தமிழ் கற்றோர் பலரைத் தடுமாற வைத்தது. தமிழ் ''அரசியல் விளம்பரத்துக்கு''ப் பயன்படுத்தப் பட்டது என்பது இப்போது தெளிவாகத் தெரியத் தொடங்கிவிட்டது.

தமிழ் வாயிலாகப் படித்து அறிவியல் திறனையும், உலக அறிவையும் பெற முடியும் என்னும் கொள்கையும் உறுதியும் இல்லாத இவர்களை எவ்வாறு தமிழ்க் காப்பாளர்கள் என ஏற்றுக்கொள்வது?

இந்நிலை ஒருபுறமிருக்க ஆங்கில மொழியினைப் பகட்டுக்கவர்ச்சிக்காக ஏற்றுக் கொண்ட திராவிடஇயக்க ''முந்தைய ஆட்சிப் பொறுப்பாளர்கள்தாம்'' தமிழகத்தில் இன்று ஏற்பட்டுள்ள இனவுணர்வு மொழிவுணர்வு வீழ்ச்சிக்குப் பொறுப்பேற்க வேண்டியவர்களாக உள்ளனர்.

இந்த உண்மையினை இன்றும் அவர்கள் உணர்ந்தார்களா? உணர்வார்களா? என்பது வினாக்குறியே! காலத்தின் கோலத்தால் தடம் புரண்ட தமிழகத்தை மீண்டும் வீழ்ச்சிக்குக் கொண்டு செல்ல ''வேதாகமக் கல்லூரிகள்'' தொடங்கப்பட உள்ளன. வடமொழி வல்லாண்மையினையும், கடவுள் மறுப்புக் கொள்கையினையும் உயிர்க் கொள்கையாகக் கொண்ட

பெரியார் வாழ்ந்த மண்ணில் "வேதாகமப் பல்கலைக் கழகம்" இற்றை நாளில் முளைக்க வுள்ளது.

பார்ப்பனர்களின், பண்பாட்டையும் வல் லாண்மையையும் நிலைநிறுத்திக் கொள்ளத் தொடங்கப்பட்டுள்ள "கோவில் சீரமைப்பு நிதிக்கு" தமிழ்ப் பண்பாட்டை அறியாத பாவேந்தரை உணராத தமிழர்கள் கோடி கோடியாகப் பணம் கொட்டிக் குவிக்கின்றனர்

இந்தக் கொடுமைகளை எதிர்த்துக் கேட் கத் தமிழ்ச் சான்றோர், தமிழ் கற்றோர் முன் வரவில்லையே!

"சலுகை போனால் போகட்டும்—என்
அலுவல் போனால் போகட்டும்
தலைமுறை ஒருகோடி கண்ட என்
தமிழ் விடுதலை ஆகட்டும்"

என்னும் பாவேந்தர் பாரதிதாசன் பாடல் வரிகளை உள்ளத்துள் பதித்து தமிழ் கற்றோர் செயல்படும் நாள் எந்நாளோ?

உணர்வுகளைத் தூண்டும்படி மேடையில் ஆரவாரம் செய்வதாலோ உணர்ச்சி ஊட்டும் எழுத்துகளைப் படைப்பதாலோ தமிழ் மொழியையும், இனத்தையும் உயர்த்திட முடி யாது. தமிழ்நாட்டின் அனைத்து நிலை களிலும் தமிழ் கட்டாயம் என்னும் சட்டம் இயற்றப்பட்டு வாழ்வியலின் எல்லா நிலை களுக்கும் தமிழ் பயன்படும் மொழியாக உயர்த் தப்படாதவரை தமிழ் மொழியும் இனமும் ஏற்றம் பெறா.

தமிழகத்தில் எத்தனையோ ஆட்சி மாற் றங்கள் நிகழ்ந்துள்ளன. மூச்சுக்கு முந்நூறு தடவை தமிழ் மொழியின் பெயரைச் சொல்லி வாழ்வு பெற்ற "திராவிட இயக்கங்கள்" கூடத் தமிழ் மொழி ஏற்றத்துக்குத் தக்க செயல் வடிவு கொடுக்கவில்லை!

தமிழ் மொழி ஏற்றம் பெற வேண்டும் என்று பலர் இன்று வலியுறுத்துவதனைப் பாவேந்தர் அன்றே உறுதிபடக் கூறினார்.

"தமிழ்க்கல்வி தமிழ் நாட்டில்
கட்டாயம் என்பதொரு
சட்டம் செய்க"

பாவேந்தர் கொள்கையான தமிழ் வழிக் கல்வி, தமிழ் மேம்பாட்டிற்குப் போராடு வோர்க்கு இன்றைய ஆட்சியாளர்கள் "தேச விரோதிகள்" என்றும் பட்டம் வழங்கியதோடு காவல் துறையினரால் பல்வேறு வகைகளில் கண்காணிப்பதற்கு உட்படுத்தப்படுகிறார்கள்; துன்புறுத்தப்படுகிறார்கள்.

தமிழ்நாட்டில் அரசுகள் மாறலாம், ஆட்சி பெற்றுப் பொறுப்பேற்போர்கள் போல் பாவனை செய்யலாம். எவர் எது செய்யினும் தமிழ் மொழியின் ஏற்றத்தில் குறிக்கோள் உடையோர் ஓர் அணியில் திரண்டு நின்று "அரசிற்கும் ஆட்சியாளர்க்கும்" உண்மை யினை எடுத்தியம்பிட வேண்டும்.

தமிழ் நலனுக்கும் தமிழர் நலனுக்கும் ஊறு விளைவிக்கும் அரசு எதுவாயினும் அது செய்யும் தவற்றைச்சுட்டிக்காட்டவும்,தேவைக் கேற்பப் போர்ப்பரணி பாடவும் தமிழ்ப் புலவர்கள் ஓரணியில் நின்று செயல்பட வேண் டும். இந்நிலையினைப் பெரும்பாலான தமிழ்ப் புலவர்கள் மேற் கொள்ளாது தங்களுக்குள்ளே பொல்லாங்கினை வெளிப்படுத்துவதில் கண்ணும் கருத்துமாக இருக்கின்றனர். இதனை உணர்ந்த பாவேந்தர்,

"பொல்லாங்கற்ற தமிழ்வல்ல
புலவர் வாழ்கவே"

எனத் தமிழ் கற்றோர்க்கு அறிவுறுத்து கிறார்.

பாவேந்தர் கண்ட "தமிழியக்க"க் கொள் கையினை நிறைவேற்றத் தமிழக அரசைத் தமிழ்ப் புலவர்கள் கட்டாயப்படுத்த வேண்டும். அரசு அதற்குச் செவி சாய்க்காது போகு மாயின் ஒவ்வொரு தமிழ்ப் புலவனும் மொழிப் போர்க் களத்தில் வீரனாய்க் களம் புகும் நெஞ் சத்தினைப் பெற வேண்டும்.

"தமிழுக்காக!—என்
தாயினுக் காக
அமையாரின் படையை
என் சினத்தால் எரிப்பேன்
அவராலே நான்சாக நேரினும் சிரிப்பேன்'

என்னும் பாவேந்தர் கொள்கை வழி நின்று தமிழ் மொழி வளர்ச்சிக்கு உழைப்பதே பாவேந்தர் நூற்றாண்டு விழாக் காணும் இந் நாள்களில் தமிழ்ப் புலவர் கூட்டம் தமிழ் மொழிக்கு ஆற்றும் கடமையாகும்.

தமிழ் மொழியினை வாழ்வியல் மொழி யாக்கி, தமிழ் இனத்தினை ஏறுநடை போடச் செய்யத் தக்க வகையில் தொண்டாற்றிடு வோம்.

# சிந்திக்க வைத்த சந்திப்பு

**பனப்பாக்கம் சீத்தா**

பனப்பாக்கம் எனதூர்ப் பக்கமாய் உள்ள
பனங்காட்டூர் எனப்படும் பனைய புரத்திலே
தினம்பார்க்கும் நண்பர் பழநியும் நானும்
இனத்தமிழ் வளர்க்கும் ஏடொன்று நடத்தினோம்!
மனத்தைத் திருத்திடும் 'மதியொளி' என்பதே
அந்த ஏட்டிற்குச் சூட்டிய ''தமிழ்ப்பெயர்''
சொந்த அச்சகம், எழுத்து கோத்திட
ஆள்தேவைப் படாமல், எங்களின் எழுதுகோல்
வாள்கொண்டு தீட்டிய கையேட்டுப் புத்தகம்!
ஓவியர் நாங்களே! எழுதிய எழுத்தைப்
பாவிய மாகப் படைத்ததும் நாங்களே!
சித்திரை மாதச் சிறப்பிதழ் ஒன்றினை
முத்திரை இதழாய்ப் 'பாவேந்தர்' படத்துடன்
முகப்பில் வரைந்தே வெளியிட் டிருந்தோம்!
அகத்தில் அறிவை அகவையில் பெற்றிடப்
படிக்கும் பள்ளிக்குப் பாவேந்தர் வருகிறார்
விக்கிரம பாண்டிய புரமெனும் ஊரே
விக்கிர வாண்டியாய் வழங்கிய ஊராம்!
அந்தஊர்ப் பள்ளியில் அறிவைக் கொளுத்திட
வருகிறார் என்பதை அழைப்பால் அறிந்தோம்!
எழுதி அமைத்த ஏட்டிற்கே மதிப்புரை
வாங்கிட நினைத்தோம்! வரும்நாள் வந்ததே!
ஏங்கிய மனத்துடன் ஏட்டொடு சென்றோம்!
கையிலே சுருட்டும் கருத்திலே தமிழும்
பையிலே காகிதப் பாட்டுத்தாள் புதையலும்
தருக்கிய தோற்றம், துண்டுப் புகையிலை
நறுக்கி வைத்தாற்போல் முகத்திலே மீசை
வறுத்த காப்பித் தூள்நிறச் சால்வை
வாடா தமிழா வாயெனும் கண்கள்,
தேடாமல் வந்த தேன்தமிழ்க் கோட்டையை
எட்டிப் பிடித்திட எடுத்தடி வைத்தோம்!
தொட்டுப் பார்த்திடத் துடிக்கும் உளத்துடன்
அகத்திலே கொஞ்சம் அச்சம் கலந்த
முகத்துடன் நெருங்கினோம். 'யாரடா பயல்கள்
என்னடா கையில்' எடுத்த சொற்களால்

# நூறுமுறை நூற்றாண்டு!

அமுத பாரதி

புதுமைக்கும் புலமைக்கும்
இணைப்புப் பாலம்-நம்
பாவேந்தர் மனமெல்லாம்
சிம்மக் கோலம்!
புதுமைக்கும் உயிரூட்டும்
பாட்டுத் தாளம்-நம்
பாவேந்தர் விழிச்சுட்டில்
வீரம் வாழும்!

கவிமேகம் பாரதியார்
மின்னல் வீச்சு-நம்
கனசுப்பு ரத்தினமோ
புலியின் பாய்ச்சு!

செவிமேவும் சத்தங்கள்
வெற்றுப் பேச்சு-நம்
செந்தமிழே பாவேந்தர்
உயிரின் மூச்சு!

கூறிவரும் கவிதைவரிக்
கருவாய் ஆகும்-நம்
கவிமன்னர் தமிழ்வாழ்வே
வாழ்வின் தாகம்!
நூறுமுறை நூற்றாண்டு
நிகழும்; போகும்-நம்
நாவேந்தர் பாவேந்தர்
புகழைப் பாடும்!

---

எங்களை அழைத்தார்; எடுத்த நடுக்கமும்
எங்கோ மறைந்தது, ஏட்டையும் அவரது
கைகளில் திணித்தோம்; 'என்னடா படமிது'
பாவேந்தர் கேட்டார்; 'அய்யா படம்தான்
அடியேன் வரைந்தது' என்றான் பழநி
'அய்யா படமா? தாடியைக் காணோம்'
பாவேந்தர் தொடர்ந்தார்; 'இல்லைதான் அய்யா!
தங்களின் படம்தான்; சித்திரை இதழில்
போட்டோம்' என்றேன்; 'என்பட மாஇது?'
ஒதுக்கிய தாளை ஒருகையில் பிடித்து
மறுகை எழுதுகோல் பிடித்துத் திருத்தினார்;
படமும் உயிர்பெற்றுப் பாவேந்தர் ஆனது
மதியொளி இதழின ஒவ்வொரு பக்கமும்
எதிர்வினாத் தொடுப்புடன் மிடுக்குடன் திருப்பினார்
ஒற்றுப் பிழைமுதல் உவமைப் பிழையையும்
அவரே திருத்தினார் அம்பெனும் சொல்லால்
சின்னப் பையல்களே! கிறுக்குத் தனமாய்
எழுதித் தமிழைக் கெடுத்திட வேண்டாம்!
என்ற ஆணையை எங்களுக்கு அளித்தார்
பெரிய மனத்துடன் நூற்றுக்கு முப்பது
மதிப்பெண்ணும் மதியொளி ஏட்டுக்கும் அளித்தார்.
முதல்முதல் சந்திப்பு இதுநாள் வரையிலும்
என்னுள் புகுந்தே ஆட்சிசெய் கின்றதே
என்மனத் தலைமையும் பாவேந்தர் ஏற்கப்
பாவேந்தர் விருதைப் பாட்டுக்கே ஏற்கச்
செய்ததை நினைத்தேன் செய்யுளாய் இனித்ததே!

# பாவேந்தரும் தமிழியக்கமும்

புலவர் தா. முத்துமணவாளன்

சீர்மிகு மொழியே செந்தமிழ் மொழி யாகும். மொழி நம் விழி; மொழி மேம்பாடு குறையின் மக்கள் மேம்பாடு குறையும்; நாட்டின் மேம்பாடும் குறையும். எனவேதான் ஒரு நாட்டை அழிக்க முற்படின் அந்நாட்டின் மொழிக்கு முதலில் கேடு சூழ்வர். இது எம் மொழிக்கும், எல்லா நாடுகளுக்கும் பொதுவே! எனவேதான் முனைவர். மு. வ. அவர்கள் 'நமக்கு மொழிப்பற்றும் நாட்டுப்பற்றும் வேண்டும். இன்றைய தமிழர்க்கு வேண்டியது அன்றாடக் கடமையைப் பற்றிய ஆராய்ச்சியே; மொழிப்பற்றையும் நாட்டுப்பற்றையும் செயலில் காட்டும் முறையே' என்று 'தம்பிக்கு' என்ற நூலில் வலியுறுத்தியுள்ளார்.

நந்தமிழைக் கன்னித்தமிழ், செந்தமிழ், பைந்தமிழ், நற்றமிழ், வண்டமிழ் என்று பல படப் புகழ்ந்தாலும் நம்மிடையே மொழிப் பற்று குறைவே. வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ்கூறு நல்லுலகின் வரலாற்றைக் காண்போமேயானால் மூவேந்தர் பெரும்பாலும் சமயம் பற்றியே கவனம் செலுத்தியுள்ளனர். பிரிட்டிஷார், பிரெஞ்சுக்காரர், முகமதியர் போன்றவர்கள் வல்லாண்மையால் தமிழ்மொழி இழிநிலை அடைந்தது. நாட்டு மொழி இந்தியாகவும், இணைப்புமொழி ஆங்கிலமாகவும், இசை மொழி தெலுங்காகவும், கோயில் மொழி வடமொழியாகவும் தமிழ் நாட்டில் தலைதூக்கியதால் தமிழ்மொழி சிறுமையடைந்தது. சென்ற நூற்றாண்டின் இறுதிக் காலம் வரை வடமொழியும் தென் மொழியும் விரவிப் பயின்றதே 'மணிப் பிரவாளம்' என்று போற்றி வளர்க்கப்பட்டது. இதைக் கண்ணுற்ற மறைமலையடிகளார் இந்நூற்றாண்டின் தொடக்கத்தில் தமிழ் மேம்பாட்டிற்காகத் தமிழ் இயக்கம் தொடங்கினார். பேசும்போதும் எழுதும்போதும் தனித்தமிழே பயன்பெற வேண்டும் என்று பேசியும் எழுதியும் வந்தார். அதுவரை உறங்கிக் கொண்டிருந்த உண்மைத் தமிழர்கள் விழித்தெழத் தலைப்பட்டனர். இதைக் கண்ட பாவேந்தர் அவர்களும் அடிகளாரைப்பின்பற்றித்தமிழியக்கத்திற்கு வழிகோலினார். மொழி முன்னேற்றமே இன முன்னேற்றம். உறங்கியது போதும் எழு.

'ஒண்டமிழ்த்தாய் சிலம்படியின் முன்னேற்றம்
ஒவ்வொன்றும் உன் முன்னேற்றம்
கண்டறிவாய் எழுந்திருநீ!
இனத் தமிழா! கண் விழிப்பாய்!'

என்றார்.

விழித்தெழுந்து செய்யவேண்டுவது யாது? மொழி வளர்க்க இலக்கியங்கள் படைத்திடல் வேண்டும்; துறைதோறும் புதுக்கருத்தைக் கூறவேண்டும்.

'அணிசெய்யும் இலக்கியம் செய்!
அறத்தைச்செய். விடுதலை கொள்
அழகு நாட்டில்......
பணி செய்வாய் தமிழுக்குத் துறைதோறும்
இளந்தமிழா கண்விழிப்பாய்;,

என்றியற்றினார்.

''தமிழ்நாட்டில் நம் தமிழ் பல துறைகளிலும் தாழ்மைப் படுத்தப்பட்டிருக்கிறது. அத்துறைகளில் சிலவற்றையே எடுத்துக் காட்டியிருக்கிறேன். இதை எழுதியதன் நோக்கம் என்னவெனில், தமிழார்வம் மிக்க இளைஞர்கள் இத்தகைய துறைகளில் தமிழ் முன்னேற்றம் கருதி இயன்றவாறு கிளர்ச்சி செய்ய வேண்டும் என்பதுதான்''

என்று தமிழியக்கம் பற்றிக் கூறியுள்ளார்.

நாடு விடுதலை பெறுதற்கு முன்னர் 1945-ஆம் ஆண்டு பாவேந்தர் புதுவையில் வாழ்ந்தபோது ஒரே இரவில் 'தமிழியக்கம்' என்னும் கவிதைத் தொகுப்பை இயற்றினார். பல தலைப்புகளில் தமிழ்நாட்டின் அவல நிலையைச் சுட்டிக் காட்டி மாணவர், மங்கையர், வாணிகர், அரசியலார் புலவர், குடும்பத்

தார், கோயிலார், அறத்தலைவர், விழா நடத்துபவர், கணக்காயர், பாடகர், கூத்தர்,பாட்டியற்றுவோர், சொற்பொழிவாளர், ஏடெழுதுவோர், பெருஞ் செல்வர், மற்றும் பலர் என்ன செய்ய வேண்டும் என்று அழகாக ஆணித்தரமாக ஆணையிடுகிறார்.

"வையத்தின் பழநிலவே, வாழ்வுக்கோர் புத்துணர்வே, ஆடல் தரும் செந்தமிழே நின் எழிலைக் கெடுக்கப் பாடுபடும் நெஞ்சுடையாரை நினைக்கையில் நெஞ்சு பதைக்கும், விளக்க வாய் பதைக்கும்."

மொழிப் போரே வேண்டுவது
தொடக்கஞ் செய்வீர்! வெல்வீர்!
—என்று மற்றும் பலர்க்குப்
பணிக்கின்றார்.

மேலும், ஒரு கூட்டம், கோவிலில் பிறமொழிக் கூச்சலைத் தடுக்க ஏன் முயலலாகாது? ஒருகுழுவினர் தெருத்தோறும்சென்று பிறமொழி விளம்பரப் பலகையை மாற்றியமைக்கச் சொல்லி ஏன் வற்புறுத்தலாகாது? மற்றும் பல வகையிலும் கிளர்ச்சி செய்யின் தமிழ் விடுபடும். இஃதன்றோ இந்நாள் இன்றியமையாத நல்வினை என வேண்டுகோள் விடுக்கிறார்.

தமிழுக்குத் தொண்டு செய்வதே தலையாய தொண்டு ஆகும். எனவேதான்,

"தமிழுக்குத் தொண்டு செய்வான்
சாவதில்லை
தமிழ்த்தொண்டன் பாரதிதான் செத்த
துண்டா?"

"சலுகை போனால் போகட்டும்—என்
அலுவல் போனால் போகட்டும்
தலைமுறை ஒருகோடி கண்ட என்
தமிழ் விடுதலை ஆகட்டும்"

"வீழ்வது நாமாக இருப்பினும்
வாழ்வது தமிழாக இருக்கட்டும்"
என்று முழங்கினார்.

"தமிழ் நாட்டில் தமிழ்த் தெருவில்
தமிழ் தானில்லை"
—என்று வருத்தமுற்றார்.

புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் போர் முகாம் அமைத்துப் போர் முரசு கொட்டிக் கூப்பிடுகிறார்.

"கொலைவாளினை எடடா மிகு
கொடியோர் செயல் அறவே"

அந்தக் குரல் காற்றில் மிதந்து வரும் கீதமாக மட்டுமின்றிக் கிண்கிணிச் சத்தத்தோடு இழைந்து வரும் கீதமொழியாக மட்டுமன்றிக் கேட்போரின் வளைந்த முதுகை நிமிர்த்தி விடும் வீரக் குரலாகிவிட்டது. எனவேதான் நமக்கொரு "வால்ட் விட்மென்" கிடைத்து விட்டார். அவர் வாழ்க என்று அறிஞர் அண்ணா அவர்கள் பாவேந்தரைப் பாராட்டினார்.

செந்தமிழ் மக்கள் சிறந்தோங்கி வாழ்வதற்கே வந்தனன் பாரதிதாசன் என்றார், மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணர். 'புரட்சிகரமான கருத்துக்களை வெளிப்படுத்திய முதல் கவிஞரும் கடைசிக் கவிஞரும் ஆவார்' என்று பாவேந்தரைப் பாராட்டியுள்ளார் தந்தை பெரியார் அவர்கள்.

'பாவேந்தரின் எண்ணங்கள் ஈடேற அவர் காட்டிய வழியில் சென்று தமிழியக்கம் செய்வதே தற்காலத்தே வேண்டுவதாகும்'

வாழ்க தமிழ்! வெல்க தமிழர்.

---

## கூட்டம் வேண்டும்!

அறிவிப்புப் பலகையெல்லாம் அருந்தமிழ்ச்சொல் ஆக்குவதே அன்றி அச்சொல்
குறைவற்ற தொடராகக் குற்றமற்ற சொல்லாக அமையு மாயின்
மறுவற்றுத் திகழாளோ செந்தமிழ்த்தாய்? தமிழ்மக்கள் மகிழ்ந்தி டாரோ
குறியுற்ற மறவர்களே! இப்பணியை முடிப்பதற்கோர் கூட்டம் வேண்டும்!

**புரட்சிக் கவிஞர்—தமிழியக்கம்**

---

# கம்பரும் புரட்சிக் கவிஞரும்

**புலவர் முத்து. எத்திராசன்**

நாடும் மொழியும் இரு கண்கள் போன்றன எனச் சொல்வர் சான்றோர்.

நாடு என்பது ஒருவன் தான் பிறந்த இடத்தை, மண்ணைக் குறிப்பதாகும். அதைத் தாய்நாடு என்று நாம் சொல்லுவோம். 'தமிழ்த் திருநாடு தன்னைப்பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா' என்பார் தேசியகவி பாரதியார்.

கம்பர் தம் காவியமான இராமாயணத்தில் நாட்டுப் படலப் பகுதியில் சோலையை வருணிக்கின்றார். அச்சோலையில், ஆணும் பெண்ணுமாகிய குயில்கள் காதல் கொள்கின்றன. மயில்கள் மரக் கொம்புகளிலிருந்து ஆடுகின்ற காட்சி, ஊர்ப்புறங்களிலுள்ள ஆடரங்குகளில் பெண்கள் நாட்டியமாடுவது போலக் காட்சியளிக்கின்றன. அன்னப் பறவைகள் நீர்நிலைகளிலுள்ள தாமரைப் பூக்களில் உறங்குகின்றன. அவ்வாறு உறங்குகின்ற அவற்றைக் காலை நேரத்தில் வண்டுகள் செவ்வழிப்பண் போன்ற இசையைப் பாடி எழுப்புகின்றன. இவற்றை,

''குயிலினம் வதுவை செய்யக்
கொம்பிடைக் குனிக்கு மஞ்ஞை
அயில்விழி மகளி ராடும்
அரங்கினுக்கு அழகு செய்யப்
பயில்சிறை அரச அன்னம்
பன்மலர்ப் பள்ளி நின்றும்
துயிலெழத் தும்பி காலைச்
செவ்வழி முரல்வ சோலை''.

என்னும் பாடல் மூலம் நமக்கு அழகாக எடுத்துக் கூறுகின்றார் கவிச் சக்கரவர்த்தி கம்பர். பாவேந்தர் பாரதிதாசனார் அவர்கள் தாம் எழுதிய 'இளைஞர் இலக்கியம்' என்ற நூலில் சோலையைப் பற்றிப் பாடியுள்ளதைக் காண்போம்.

''பச்சைமணிப் பந்தலல்ல 'சோலை,-பசும்
பட்டுமெத்தை அல்ல புல்தரைதான்!
நொச்சிச்செடிப் பாப்பாவை அணைத்துத்-தரும்
நூறுதரம் முல்லைக் கொடிமுத்து!
மச்சிவீட்டை விடஉயரம் தென்னை-மிக
மணம்வீசும் அங்கேஒரு புன்னை.
உச்சிக்கிளை மேற்குயிலும் பாடும்-பார்
ஒருபுறத்தில் பச்சைமயில் ஆடும்!

மணிக்குளத்தில் செந்தாமரைப் பூக்கள்-அங்கு
வகைவகையாய்ச் சிந்துபாடும் ஈக்கள்!
தணிக்க முடியா வியர்வை கழுவும்-நல்ல
சந்தனத்துத் தென்றல் வந்து தழுவும்!
இணைக் கிளிகள் மரக்கிளையில் கொஞ்சும்-மிக
இடிக்கும் பலாமரத்திற் பிஞ்சும் மிஞ்சும்
பிணிபோகும் மறைந்து போகும் துன்பம்
பெருஞ்சோலை அளிப்பதெலாம் இன்பம்.''

இப்பாடலில் பசும்புல் படர்ந்த சோலையில் நொச்சிச் செடியும் முல்லைக் கொடியும் ஒன்றோடொன்று தழுவி நிற்பதை மிக அழகாக எடுத்துரைக்கின்றார். தென்னை மரம் மச்சி வீட்டை விட உயர்ந்து காண்கிறது. அதன் அருகில் வளர்ந்த புன்னை மரம் மலர்களின் மூலம் மணம் வீசிக் கொண்டிருக்கிறது. அதன் உச்சிக் கிளையில் குயில் பாட, அதன் கீழ் ஒரு புறத்தில் மயில் ஆடுவதாகக் கூறுகின்றார்.

அடுத்த பாடலில்,

''குளத்தில் செந்தாமரைப் பூக்கள் மலர அதில் ஈக்கள் பாடுகின்றதாகக் கூறியவர், பூக்களின் மேல் வியர்வையைப் போல் முத்து முத்தாகக் காணப்படுகின்ற நீர்த்துளிகளைத் தென்றற் காற்று வந்து போக்குவதாகப் பாடுகின்றார். இணை இணையாகக் கிளிகள் மரக்கிளைகளில் அமர்ந்து கொஞ்சவும் பலா மரத்திலுள்ள பிஞ்சுகள் ஏராளமாக இருப்பதாகச் சுட்டிக்காட்டி, இதைப் பார்ப்பவர் மனம் மகிழ்ச்சியால் இன்பம் அடைய துன்பமெலாம் பறந்துபோனது'' என்று கூறுகின்றபோது நாமும் சோலைப் பாடலில் சொக்கிப்போய் இன்பத்தில் திளைக்கின்றோம்.

கம்பர் அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்தில் அழகுறக் காட்டிய சோலைக் காட்சியைப் பாவேந்தர் மிக எளிமையான அழகு தமிழில் சந்தம் தோன்ற இயைபு அணி அமையப் பாடியிருக்கின்றார்.

இருவேறு புலவர்களாக-கவிஞர்களாக இருந்தாலும் இயற்கையைப் படம் பிடித்துக் காட்டுவதில் இருவரும் சளைத்தவர் அல்லர் என்று நினைக்கத் தோன்றுகிறது. கம்பர் காவிய வழிநின்று சோலைக் காட்சியைச் சித்தரித்தார். பாவேந்தர் இளைஞர் உள்ளம் இயற்கையில் ஈடுபாடு கொள்ளும் வகையில் சோலையைப் படம் பிடித்துக் காட்டியுள்ளார்.

## சேவற்போர்

கோசல நாட்டின் வளத்தைக் கூறுகின்ற போது அந்நாட்டின் மக்களில் சிலர் பொழுது போக்காகச் சேவற்போர் செய்து அதனைக் கண்டு களிக்கின்றார்கள். இதைப் புறத்திணை ஆசிரியர் 'கோழிவென்றி' என்ற துறையாக எடுத்து வைப்பார்.

போர் செய்யும் சேவற் கோழிகள் முதலில் ஒன்றையொன்று பார்த்தது. கிடையாது; ஆகவே கோபம் கொள்வதற்குக் காரணமும் கிடையாது. ஆனால் சேவல் வளர்ப்பவர்கள் போர் ஏற்படுவதற்காக வேண்டி ஒன்றையொன்று முட்டவிட்டுப் போர் மூளும்படி செய்தனர்; சேவல்களும் ஒன்றையொன்று எதிர்த்துப் போரிட்டன. அப்படிப் போரிடும் போது அதன் கால்களில் கூர்மையான சிறுசிறு கத்திகளைக் கட்டி வைத்துள்ளனர். கால்ளால் ஒன்றையொன்று தாக்கும் போது அக் கத்தியால் கோழிகள் குத்தவும் வெட்டவும் படுகின்றன. இருந்தும் அவை புறமுதுகிடாமல் உயிர் போகும் வரை தாக்கிக் கொள்கின்றன. இக்காட்சியைக் கம்பர்,

''கறுப்புறு மனமுங் கண்ணிற் சிவப்புறு
சூட்டுங் காட்டி
உறுப்புறு படையிற் றாக்கி யுறுபகை யின்றிச்
சீறி
வெறுப்பில களிப்பின் வெம்போர் மதுகைய
வீரவாழ்க்கை
மறுப்பட வாவி பேணா வாரணம் பொருத்து
வாரும்'' 16-நாட்டுப்படலம்

என்ற பாடல் மூலம் எடுத்துக் காட்டுகிறார்.

சேவற் போரைப் பாவேந்தர் பாரதிதாசனாரும் மிக அழகாகப் பாடியுள்ளார். 'குயில் பாடல்கள்' என்ற நூலில் இதனைக் காண்கிறோம். நாம் இப்போரைக் கம்பர் விருத்தப் பாவில் பாடியதால் விளக்கமாகக் கூறவில்லை. பாவேந்தரோ, ஆசிரியப் பாவால் மிக விளக்கமாக அழகுற எடுத்துக் கூறியுள்ளார் இப் பாடல் கம்பர் கூறிய பாட்டுக்கு விளக்கப் பாடல் என்றே சொல்ல வேண்டும். அவ்வாறு அமைத்துப் பாடியுள்ளார் பாவேந்தர். இனி பாடலைப் பார்ப்போம் நாம்.

''போரிடு கின்றன! போரிடு கின்றன
கார்நிறச் சேவலும் கதிர்நிறச் சேவலும்
போரிடு கின்றன போரிடு கின்றன''

எனத் தொடங்கி,

''கொடியமுள் பாயக் குரல்வளை கிழிந்தது!
கதிர் விழுந்தது! கதிர் இறந்தது!
புதுப்புகழ் உலகு புக்கது! கார்நிறம்
நற்கழுத்து உயர்ந்து வளைத்தது
வெற்றி முரசொலி விளைத்த தாங்கே!''

என முடிக்கிறார் பாவேந்தர்.

புறா, மயில், குயில் போன்ற தலைப்புக்களில் இருவரும் பாடிய பாடல்களைக் காண ஏடு இடந்தராது என்ற காரணத்தால் இத்துடன் இக்கட்டுரையை முடித்துக் கொள்கிறேன்.

---

### குறைதவிர்க்க வாரீர்!

தண்டூன்றும் முதியோரே! தமிழ்த்தொண்டென் றால்இளமை தனைஎய் தீரோ!
வண்டூன்றுஞ் சிற்றடியால் மண்டுநறும் பொடிசிதறும் பொதிகை தன்னில்
பண்டூன்றுந் திருவடியால் பச்சைமயில் போல்வந்து தமிழர்க் காவி
கொண்டூன்றி வருந்தமிழ்த்தாய் கொண்டகுறை தவிர்ப்பதற்குக் குதித்து வாரீர்!

புரட்சிக் கவிஞர்—தமிழியக்கம்

# எனது நினைவுகளில் பாவேந்தர்

## பொன் கு. கோதண்டபாணி

பாவேந்தரை நேரில் பார்க்கின்ற பாக்கியம் எனக்கு முதன் முதலாகக் கிடைத்தது 1946-ல் அறிஞர் அண்ணா அவர்களது முயற்சியால் நடைபெற்ற 'பொற்கிழி' வழங்கும் விழாவில்தான்.

பொற்கிழி வழங்கிய பெரு விழாவிற்குப் பின்ஓராண்டுஇடைவெளியில் முதன்முதலாகப் பாவேந்தருடன் நெருங்கிப் பழகும் சந்தர்ப்பம் கிடைத்தது. சென்னை மயிலாப்பூர் லஸ் கார்னரில் அப்போது இருந்த கிருஷ்ணா லாட்ஜ் (தற்போது ஸ்டேட் குப்தா ஓட்டல்) வளாகத்தில் இயங்கிக் கொண்டிருந்த பங்கீட்டுக் கடையில் நான் கணக்காளனாகப் பணியாற்றி வந்தேன். அதே காலகட்டத்தில்தான் நண்பர் முல்லை முத்தையா அவர்கள் எனது பணியிடத்துக்கு மேற்குப்புறத்தில் இருந்த சாய் லாட்ஜில் தனது முல்லைப் பதிப்பகத்தை நடத்திக் கொண்டிருந்தார். அவர் ஆள்வார்ப் பேட்டையில் குடியிருந்தார். நான் அதற்கு அருகாமையில் உள்ள பீமண்ணன் பேட்டையில் குடியிருந்தேன். எங்கள் இருவருக்கும் இடையே ஏற்பட்ட நட்பின் காரணமாக நெருக்கம் ஏற்பட்டது. நான் அவரை அவரது பதிப்பகத்திலோ, இல்லத்திலோ தினசரி சந்திக்கத் தவறுவதில்லை. அந்தத் தொடர்பின் போதுதான் அவரது பதிப்பகத்தில் முதன் முதலாகப் பாவேந்தரை நேரில் பார்க்கும் வாய்ப்பு எனக்குக் கிட்டியது. அவர் புதுவையிலிருந்து சென்னைக்கு வரும்போதெல்லாம் காலை நேரத்தில் பதிப்பகத்துக்கு வருவது உண்டு. அப்படி அவர் வரும்போது பதிப்பகம் திறந்து இல்லாவிட்டால் எனது கடைக்கு அருகில் இருக்கும் தாழ்வார மேடை கட்டடச் சுவரின் மீது தனது பெட்டியை வைத்துவிட்டு உட்கார்ந்து கொண்டிருப்பார். அப்போது உதவியாளராக இருந்தவர் மாரியப்பன்(முத்து மோகன்) என்ற நண்பர்.

ஒருநாள் காலை சுமார் 8 மணி இருக்கும். மாரியப்பன் என்னிடம் வந்து கவிஞருக்கு எழுதத் தாள்கள் வேண்டும் என்றார். நான் கணக்கு சம்பந்தமாகப் பயன்படுத்தும் குறிப் பேட்டிலிருந்து இரண்டொரு தாள்கள் கிழித்துக் கொடுத்து அனுப்பினேன். சிறிது நேரம் கழித்து அவர் இருந்த இடம் சென்று வணக்கம் செலுத்திவிட்டு நின்றேன். அங்கு இருந்த மாரியப்பன் என்னைக் கவிஞரிடம் காண்பித்து இவர் முல்லை முத்தையா அவர்களுக்கு மிகவும் வேண்டியவர் என்று கூறி என்னைக் கவிஞருக்கு அறிமுகப்படுத்தி வைத்தார். மாரியப்பன் சொன்னதைக் கேட்டுக் கொண்டே தனது கைப்பெட்டியின் மேல் தாள்களை வைத்து எழுதிக் கொண்டு யோசனையில் ஆழ்ந்தபடி இருந்தார். அப்பொழுது அவர் எழுதி இருந்த வரிகள் மீது எனது பார்வை விழுந்தது. அதில் இருந்த இரண்டு மூன்று வரிகள் எனது கவனத்தை ஈர்த்தன. அந்தத் தாளில் அவர் அப்பொழுது ஏழெட்டு வரிகள்தான் எழுதியிருப்பார். என்னைக் கவர்ந்த அந்த வரிகள்,

**'மலடி என்றேன்,போ என்றேன்**
**இங்கிருந்தால்**
**மாய்த்திடுவேன் என்றுசொன்னேன்,**
**மங்கை நல்லாள்**
**கலகலென நீருகுத்த கண்ணீ ரோடும்**
**கணகணெனத் தணல் பொங்கும் நெஞ்சத்**
**தோடும்**
**விலகினாள்'**

பாவேந்தர் அப்போது தீட்டிக் கொண்டிருந்த கவிதையின் ஆரம்ப வரிகள் இவை. அந்தக் கவிதையை அப்போது அவர் முடித்ததாகத் தெரியவில்லை சிறிது நேரத்தில் பெட்டியை எடுத்துக்கொண்டு முல்லைப்பதிப்பகத்திற்குச் சென்று விட்டார். இந்தக் கவிதை அதே ஆண்டு அப்போது புதுக்கோட்டையிலிருந்து முருகு சுப்பிரமணியம் அவர்களை ஆசிரியராகவும், அரு. பெரியண்ணன் அவர்களைப் பதிப்பாளராகவும் கொண்டு வெளிவந்த 'பொன்னி, ஏட்டில்வெளியிடப்பட்டு முழுக்கவிதையையும்

படித்திருக்கிறேன், என்பது மட்டுமல்ல அதை அப்போதே மனப்பாடமும் செய்து வைத்திருந்தேன். பிற்காலத்தில் இந்தக் கவிதை முழுவதுமாகப்'பாரிநிலையம்' வெளியிட்ட 'பாரதிதாசன் கவிதைகள்—2' என்ற நூலில் இடம் பெற்றுள்ளது.

பொதுவுடைமைத் தலைவர் தோழர் ப. ஜீவானந்தம் அப்பொழுது தலைமறைவு வாழ்க்கை நடத்திக்கொண்டிருந்த காலம். அவர் சில நாட்கள் மயிலாப்பூர் வீரப் பெருமாள் கோவில் தெருவில் உள்ள இல்லத்தில் தங்கி இருப்பார். அவர்கள் இரண்டு மூன்று பேர்களாக கிருஷ்ணா லாட்ஜுக்குக் காபி அருந்த காலை நேரத்தில் வரும்பொழுது ஓரிரு சமயங்களில் பாவேந்தருடன் உரையாடிச் செல்லும் காட்சியினையும் அப்பொழுது கண்டிருக்கிறேன்.

பாவேந்தர் மயிலைக்கு வருவது முல்லைப் பதிப்பகத்துக்காக மட்டுமல்லாமல் மற்றுமொரு பணியிலும் அவர் அப்போது ஈடுபட்டுக் கொண்டிருந்தார். மயிலாப்பூர் நொச்சிக்குப் பத்துக்கடற்கரைச்சாலையில் உள்ள ஒரு கட்டடத்தில் 'கிரீன்பிக்சர்ஸ்' என்ற நிறுவனத்தினர் 'நாதவிஜயம்' என்றொரு திரைப்படம் எடுத்து வந்தனர். இசைச்செல்வர் மதுரை எம்.எம். மாரியப்பா அவர்களை முக்கிய நடிகராகக் கொண்டு முழுக்க முழுக்க இசைச்சித்திரமாக எடுக்கப்பட்டுவந்தது. இதற்குக் கதை, உரையாடல் அனைத்தும் அமைக்கும் பொறுப்பைப் பாவேந்தர் ஏற்றிருந்தார். அது சம்பந்தமாக அவர் லஸ் கார்னருக்கு வந்தவுடன் காபி அருந்திவிட்டுத் தன் உதவியாளருடன் டிராம் வண்டியில் சாந்தோம் சென்று அங்கிருந்து நொச்சிக்குப்பத்துக்குச் செல்வதை வாடிக்கையாக வைத்திருந்தார்.

பாவேந்தர் நொச்சிக்குப்பம் அலுவலகத்தில் தங்கி இருந்தபோது ஒருநாள்-அன்று வெள்ளிக்கிழமை நான் பணியாற்றி வந்த கடைக்கு வார விடுமுறை. பாவேந்தரைக் காண அதிகாலையில் நொச்சிக்குப்பம். கிரீன் பிக்சர்சுக்குச் சென்றேன். அப்போது பாவேந்தர்கடலோரம் சென்றுள்ளதாகக்கூறினார்கள். கடற்கரை ஓரத்தில் கட்டுமரங்களைக் கடலுக்குக் கொண்டு செல்லும் தீவிரத்தில் இருந்த மீனவர்களுடன் பாவேந்தர் இருப்பதைக்கண்டு அங்குச் சென்று அவருடன் நின்று கொண்டிருந்தபோது, பாவேந்தர் மீனவநண்பர்களுடன் பழகியபடி கேட்ட கேள்விகளும் அதற்கு அவர்கள் சொல்லும் பதிலும் சிலசமயம் சூடாகவும் சுவையாகவும் இருக்கும்.

அப்போது பாவேந்தர் மீனவர்களைப் பார்த்து, 'தலையில் குல்லாய் எதற்கு? பகல் உணவுக்கு என்ன செய்வீர்கள். குடிப்பதற்குத் தண்ணீர்கொண்டு போவீர்களா? எப்பொழுது வீடு திரும்புவீர்கள்?-இப்படிக் கேள்விகளை அடுக்கிக்கொண்டே போவார். அவர்களில் இரண்டொருவர் பொறுமையாகப் பதில் சொல்வார்கள். சிலர் அவர்மீது எரிந்துவிழுவார்கள். இதையெல்லாம் கேட்டுக்கொண்டே கடலோரத்திலிருந்து அலுவலகத்திற்குத் திரும்பி வருவார். இதை நான் இரண்டொரு முறை அவரைக் காணச்சென்ற போது அவருடன் இருந்து ரசித்து அனுபவித்து இருக்கிறேன்.

1954-55-ம் ஆண்டில் பொன்னி ஏடு சென்னைக்கு வந்த பிறகு அதில் துணையாசிரியனாகப் பணியாற்றி வந்தேன். அப்போது அரு. பெரியண்ணன் அவர்களின் விருப்பப்படி' 'லோட்டஸ்' எனும் 'பரிசுப்போட்டி' நிறுவனத்தின் சார்பில் நடந்த 'லோட்டஸ்' வாரம் இருமுறை ஏட்டிற்கு நிர்வாக ஆசிரியனாகப் பொறுப்பேற்றேன். அதற்கு ஒரு பொங்கல் மலர் சிறப்பிதழாகக் கொண்டுவந்தேன். அதில் பாவேந்தர் பாடல் ஒன்று இடம்பெறவேண்டும் என்று பாவேந்தருக்குக் கடிதம் எழுதினேன். அவரிடமிருந்து எந்தப் பதிலும் இல்லை. கவிதையோ, கட்டுரையோ, கிடைக்கவில்லை. இதை அப்போது பாவேந்தரின் நெருக்கமான நண்பராக இருந்த (இப்பொழுது புதுவையில் வாழ்ந்து கொண்டிருக்கிறார்)விழுப்புரம் சி. எஸ் டி. மூர்த்தியிடம் கூறினேன். நண்பர் மூர்த்தி அவர்கள் பாவேந்தரிடம் மிக நெருக்கமும், உரிமையும் படைத்தவர். உடனே அவர் என்னிடம் 'கவிதைதானே உடனே வாங்கி அனுப்புகிறேன்' என்றார். அதன்படியே மூன்றாவதுநாளே எனது கைக்குக் கவிதை வந்து சேர்ந்தது 'பொங்கல் பொங்கிற்று பொழியும் நிலவுபோல்' எனத் தொடங்கும் அந்தக் கவிதையை ஓவியச் சிறப்போடு 'லோட்டஸில்' வெளியிட்டுப் பொங்கல் மலரைப் பொலிவுறச் செய்தேன்.

# பாட்டுத் தலைவன் பாரதிதாசன்!

**முனைவர் சுப்பிரமணிய இராசதேவன்**

*பாட்டுக் கொருபுலவன் பாரதி என்றால்—அவன்*
*பாட்டை எடுத்துரைப்பன் நாட்டுக்கு இவன்!*
*வீட்டுக் கொருபுலவன் ஆவதற்கே இவன்*
*ஏட்டை நிரப்பிடுவான் தினம் தினம்!*
*கேட்டைத் திருத்துதற்குக் கோலெடுப்பான்*
*நாட்டைத் திருத்துதற்குச் செங்கோல் கொடுப்பான்!*
*வாட்ட சாட்ட மானஉடல் அவனுக்கு*
*வாகை சூடும் விழிப்பார்வை அவனுக்கு!*
*சேட்டைப் பண்ணுகின்ற சாத்திரத்தினை—ஓர்*
*சாட்டை எடுத்தவனே ஓட்டிடுவானே!*
*பூட்டை உடைத்தங்கே வெளிக்கொணர்ந்தே*
*புன்மைத் தாள்களைக் கொளுத்திடுவானே!*
*ஓட்டை ஒடைச்சல்களை இனங் காண்பித்தே—புதுப்*
*பாட்டைப் படையலாக்கித் தந்திடுவானே!*
*தீட்டைத் தீயிலிட்டுப் பொசுக்கிடுவானே*
*தினம் திகைக்கப் புரட்சிகளைத் தந்திடுவானே!*
*மேட்டைப் பள்ளமாக்கித் தந்திடுவானே—ஓர்*
*மேன்மைக் கல்வியினை விளைத்திடுவானே!*
*காட்டைக் கழநியாக்கித் தந்திடுவானே-நற்*
*கவிதைக் காட்டைத் தந்து மகிழ்ந்திடுவானே!*
*கோட்டையைப் பிடிக்க வைத்திடுவானே*
*கொடுமைகளை எதிர்த்து எரித்திடுவானே!*
*பாட்டுக்கோர் தலைவன் பாரதிதாசனே*
*பார்உள்ளளவும் யாம் போற்றிடுவோமே!*

---

அதன் பிறகு அதே 'லோட்டஸ்' ஏட்டில் பாவேந்தர் பாரதிதாசன் பிறந்தநாள் சிறப்பு இதழ் ஒன்றும் அதிகப் பக்கங்களுடன் அந்த ஆண்டில் வெளியிட்டேன்.

1956-ம் ஆண்டில் எனது சொந்த ஏடாக 'அண்ணா' எனும் பெயரில் வார ஏடு ஒன்று தொடங்கி, கிழமை ஏடாக நடத்திக் கொண்டிருந்தேன். அது தி.மு.க. சார்பு ஏடு. அப்பொழுது பாவேந்தர் பாரதிதாசன் புதுவைச் சட்டமன்ற உறுப்பினராக இருந்து வந்தார். தி.மு.க. எதிர்ப்பாளராகத் திராவிடர் கழக மேடைகளில் பேசிக் கொண்டிருந்த நேரம். தி.மு.க.வைத்தாக்கிப் பாவேந்தர் பேசியபேச்சு ஒன்றினை 'விடுதலை' ஏட்டில் படித்த நான் அவருக்கு மறுப்பாகவும் அவரைக் கண்டித்தும் அந்த வார 'அண்ணா' ஏட்டில் பாவேந்தரைத் தாக்கும் தலைப்புடன் எழுதியிருந்தேன். இந்தக் கட்டுரையைப் பாவேந்தர் படித்து இருக்க வேண்டும் என்று எண்ணுகிறேன்.

அதற்குப் பிறகு வெளிவர இருந்த 'அண்ணா' பொங்கல் மலருக்குக் கவிதையோ, கட்டுரையோ அனுப்பித் தருமாறு கடிதம் ஒன்று பாவேந்தருக்கு எழுதினேன். பாவேந்தரிடமிருந்து கவிதையோ, கட்டுரையோ கிடைக்கும் என்ற ஆவலுடன் அவருக்கென முதல் இடத்தை ஒதுக்கி வைத்துவிட்டு இதர பகுதிகளை நிறைவு செய்து கொண்டிருக்கும் போது பாவேந்தரிடமிருந்து எனக்கு ஒரு கார்டு வந்தது அந்தக் கடிதத்தில் 'இரண்டும முடியாமைக்காக வருந்துவதாகத் தெரிவித்துக் கொள்கிறார்கள்' என்று கவிஞருக்காக என்று எழுதி சாமி பழனியப்பன் தனது கையொப்பத்துடன் அனுப்பி வைத்தார்.

'அண்ணா' வார ஏட்டில் நான் எழுதியிருந்த கட்டுரை பாவேந்தரின் உள்ளத்தை மெத்தவும் புண்படுத்தி இருக்க வேண்டும். அதனால்தான் அவர் எனது விருப்பத்தை நிறைவேற்ற விரும்பவில்லை போலும்.

எனக்கும் பாவேந்தருக்கும் இடையில் ஏற்பட்ட ஒரு சில நிகழ்ச்சிகளை மட்டும் இக் கட்டுரையில் வெளியிட்டுள்ளேன். பாவேந்தர் வாழ்ந்த காலத்தில் நாமும் வாழ்ந்தோம் என்பதோடு, அவருடன் ஒரு சில நாட்களாவது பழகினோம் என்ற பெருமை எனக்கு எப்போதும் உண்டு.

# பாவேந்தர் பாட்டில் அகத்துறைக் கூறுகள்!

கவிஞர் காவனூர் வேலன்

தமிழினத்தின் எழுச்சிக்கும் தமிழ் மொழியின் வளர்ச்சிக்கும் அயராது பாடுபட்ட பாவேந்தர்,

காதல் உணர்வுகளில் தம்மையும் ஈடுபடுத்திக் கொண்டு-மிகச் செம்மையாகப் பாடுகின்றார்.

''கண்ணின் கடைப்பார்வை காதலியர்
காட்டிவிட்டால்
மண்ணில் குமரர்க்கு மாமலையும் ஓர்
கடுகாம்''

(சஞ்சீவி பர்வதத்தின் சாரல்)

வள்ளுவரும்,

''கண்ணோடு கண்ணிணை நோக்கொக்கின்
வாய்ச்சொற்கள்
என்ன பயனும் இல''

என்றார். கம்பரும்,

''அண்ணலும் நோக்கினான்
அவளும் நோக்கினாள்''

என்றுதான் சொன்னார். அதிலும் முழுமையான நோக்கு ஒரு வீச்சு இல்லை.

ஆனால், பாவேந்தரோ

கண் சிமிட்டுகின்ற நேரக் கடைப்பார்வை எத்தகைய விளைவை ஏற்படுத்தும் மாமலையும் ஒரு கடுகாக நினைக்கச் செய்யும்.

வள்ளுவர் காட்டும் பார்வையில் வாய்ச்சொற்களுக்குப் பயன் இல்லை. கம்பன் காட்டும் பார்வையில் வெறும் நோக்கு மட்டும் தான் உண்டு, பாவேந்தர் காட்டும் பார்வையில்தான் மாமலையும் ஒரு கடுகாகும்.

''சிரின்பராத்'' என்னும் உலகப் பெரும் பாரசீகக் காதற் காவியத்தில்,

மன்னன் மகளை மக்களுள் ஒருவன் காதலித்தான். இவர்களது காதலைப் பிரிக்க முடியாது என உணர்ந்த மன்னன், காதலனைப் பார்த்து, அந்த நாட்டின் வானளாவிய பெரும் மலையைக் குடைந்து அதற்கு அப்பால் உள்ள நீரைக் கொண்டு வரச் சொல்கிறான். அப்படிச் செய்தால் உன் காதலி உனக்குக் கிடைப்பாள் என்கிறான்.

காதலியைப் பார்க்கிறான் காதலன். காதலியோ கடைக்கண்ணைக் காட்டுகிறாள் அவ்வளவுதான். அந்த மாமலையையும் ஒரு கடுகாய் எண்ணிக் கோடரியைத் தோளில் போட்டுக் கொண்டு மலையைப் பிளக்கக் கிளம்பி விட்டான் அந்தக் காதலன்.

அந்தக் கடைக்கண் வீச்சின் உற்சாகத்தால் மலையைப் பிளந்து கால்வாயை வெட்டி ஊருக்குள் நீரை ஓடச் செய்து மகிழ்ச்சியுடன் வருகிறான்.

மன்னனோ சூழ்ச்சியால் ஒரு மூதாட்டியை அனுப்பி இவ்வளவு பாடுபட்டுத் தண்ணீர் கொண்டு வந்தாய், மன்னர் மகளோ வேறு ஒருவனைத் திருமணம் செய்து கொண்டாளே. என்று பொய் கூற; அதை உண்மை என்று எண்ணி மலையைப் பிளந்த அந்தக் கோடரியாலேயே தன் மண்டையைப் பிளந்த கொள்கிறான் காதலன்! கேள்வியுற்ற காதலியும் ஓடோடி வந்து காதலனை முத்தமிட்டு அந்தக் கோடரியாலேயே தன்னையும் மாய்த்துக் கொள்கிறாள்.

இந்நிகழ்ச்சி பாவேந்தர் பாட்டுக்கு இலக்கணம் அன்றோ!

## காதற் குற்றவாளிகள்

சுந்தரம் கூடத்தில் அமர்ந்து புத்தகத்தின் மீதே விழியை வைத்துப் பாடம் படித்துக் கொண்டிருக்கிறான். காதலி சொர்ணம் அருகில் சென்று அவனைப் பார்க்கிறாள்.

காதலனும், காதலியும் ஒருவரை ஒருவர் தன்னை மறந்து உலகை மறந்து பார்த்துக் கொண்டிருப்பது இயல்பு.

ஆனால்,

பாவேந்தர் குறிப்பிடும் காதலர்களான சுந்தரமோ பேரழகு! சொர்ணமோ தங்கச் சிலை! இவள் காதலனைப் பார்க்கவில்லை; பார்வையாலேயே உண்கிறாள்; மற்றக் காத

லர்கள் பார்க்கிறார்கள்! பாவேந்தர் காதலர்கள் உண்கிறார்கள்!

ஓடைக் குளிர் மலர்ப் பார்வையினால் சுந்தரத்தைப் பார்த்துக் கொண்டிருக்கும் போது,

அவன் நிமிர்ந்து பார்க்கிறான்!

இதுவரை மென்மையாக நிதானமாகக் குளிர்ச்சி பொங்கப் பார்வையாலேயே அவன் அழகைப் பருகிக் கொண்டிருந்த சொர்ணத்தின் விழியை அதிவேகமான மின்சாரத்தைப் போல் சுந்தரம் பார்த்ததும் அந்த மென்மையான சொர்ணத்தின் விழி, மானின் விழியாய்த் தெறித்துவிடுகிறது.

''கூடத்திலே மனப் பாடத்திலே—விழி
கூடிக் கிடந்திடும் ஆணழகை
ஓடைக் குளிர்மலர்ப் பார்வையினால்—
அவள்
உண்ணத் தலைப்படும் நேரத்திலே
பாடம் படித்து நிமிர்ந்த விழி—தனிற்
பட்டுத் தெறித்தது மானின்விழி
ஆடை திருத்தி நின்றவள்தான்-இவன்
ஆயிரம் ஏடு திருப்புகின்றான்!''

காதற் பாடலும் கைம்பெண் காதலும் பார்த்தோம். அதிலே கற்பொழுக்கமான இல்லற வாழ்வைப் பற்றி ஒரு பாடலைப் பார்ப்போம்.

தன் கணவன்மார்கள் வயல் வேலையாகச் சென்று இருப்பார்கள். அப்போது பெண்கள் வீட்டிலுள்ள வேலைகளையெல்லாம் செய்து விட்டு அண்டை அயலில் உள்ள பெண்களிடம் பொழுது போக்காகக் கூடிப் பேசி இருப்பார்கள். நகரத்தில் கணவன் வெளியே சென்றதும் கதவைச் சாத்தித் தாளிடும் வழக்கம் அங்கில்லை. அப்படி அவள் பேசிக் கொண்டிருக்கும் போது மந்தையின் மாடு திரும்புவதைப் பார்த்தாள்.

கணவன், வரும் நேரம் என்று அறிந்து, உள்ளம் மகிழ்ந்தாள் பேசிக் கொண்டிருந்த பெண்களிடம் கூடச் சொல்லாமல் தன் வீட்டிற்கு விரைவாகச் சென்றாள்.

''மந்தையின் மாடு திரும்பையிலே—அவள்
மாமன் வரும் அந்தி நேரத்திலே
குந்தி யிருந்தவள் வீடு சென்றாள்—அவள்
கூட இருந்தாரையும் மறந்தாள்!''

கணவனும் வந்து விட்டான். வந்தவன் ஒரு வெல்லக் கட்டியைத் தூக்குகின்ற அளவுக்குக் கொண்டு வந்து, இந்தா எனச் சொல்லிக் கொடுத்தான். வாங்க அருகில் வரும் போது எட்டி ஒரு முத்தமும் இட்டான்.

''தொங்கி சரிந்திட வேட்டிகட்டி—அவன்
தூக்கி வந்தான் ஒரு வெல்லக் கட்டி!
இந்தா எனக்கொடுத் திட்டாண்டி—அவன்
எட்டி ஒரு முத்தம் இட்டாண்டி!''

கணவன் உழைத்து மண்ணும் சேருமாகக் களைத்து வந்தவனைத் தொட்டி நீரில் குளிக்கச் சொன்னாள். குளிக்கச் சொன்னதோடு விடாமல் கூடவே சென்று அவன் தோளைத்தேய்த்துவிட்டாள். அப்படித்தேய்க்கும் போதே என்னங்க நீரில் குளிர்ச்சி இருக்கிறதா கோடை வெயில் படுத்தும் பாட்டில் என்று கேட்டாள்.

அதற்கு அவன் தொட்டியின் தண்ணீர் கொதிக்குது நீ; தொட்ட இடமெல்லாம் சிலிர்க்குது என்றான்.

''கட்டி வெல்லத்தைக் கசக்கு தென்றாள்—
அவன்
கட்டாணி முத்தம் இனிக்கு தென்றாள்''
தொட்டியின் நீரில்குளிக்கச் சொன்னாள்—
அவன்
தோளை அவள்ஓடித் தேய்த்து நின்றாள்!
''கொட்டிய நீரில் குளிர்ச்சியுண்டா—இந்தக்
கோடை படுத்திடும் நாளிலென்றாள்!
தொட்டியின் தண்ணீர் கொதிக்கு
தென்றான்—நீ
தொட்ட இடத்தில் சிலிர்க்கு
தென்றான்!''

ஏன் என்றால் முன்பு அவன் கொடுத்த கட்டி வெல்லம் கசக்குதென்றாள் கட்டாணி முத்தம் இனிக்குதென்றாள் அல்லவா. அதற்கு ஈடாய் அவனும்,

தண்ணீர் என்னவோ கொதிக்கத்தான் செய்கிறது. ஆனாலும் நீ தொட்ட இடமெல்லாம் சிலிர்க்கிறது என்றான்.

இதுகாறும் காதல் வேகத்தால் எதையும் சாதித்து விடலாம் என்றும், சமுதாயத்தில் ஒதுக்கி வைக்கப்பட்ட கைம்பெண்ணின் காதலை உயர்த்திக் காட்டி உரிமை கோரியதையும், நல்லதொரு குடும்பக் காட்சியையும் கண்டுணர்ந்தோம்.

வெல்க தமிழ்! வெல்க பாவேந்தர் நெறி!

# புதியதோர் தமிழ் உலகம் செய்வோம்

**செங்கோலரசு**

திருவள்ளுவர் காலத்திற்கு முன் உலகெலாம் ஆட்சி செய்து வந்த தமிழ் மொழி பின்பு உலகத்தின் ஒரு பகுதியாகிய இந்தியா முழுவதும் இருந்து பின் இந்தியாவின் ஒரு பகுதியாகிய தமிழகத்தில் மட்டும் வாழ்ந்து வருகிறது.

தமிழர் கடந்த இரண்டாயிரம் ஆண்டு கட்கு மேலாகத் தன்னுரிமை, தன்மான உணர்வற்று ஆரியர்களிடம் அடிமைகளாக வாழ்ந்தனர் என்பதைச் சொல்லித்தான் ஆக வேண்டும். தன்மானமுள்ள தமிழர்கள் பகுத்தறிந்து தமிழனின் இழி நிலையினையும் தமிழின அழிவையும் தாங்க முடியாமல் ஆரியர்களால் தமிழர்கள் சாதிப் பேய்க்குப் பிடிபட்டு மூடநம்பிக்கைக்குட்பட்டு அவர்களிடம் மாட்டியிருந்த தமிழகத்தை மீட்கத் தன்மானத் தன்னுரிமைக்காகப் போராடினார்கள்.

இந்த அவல நிலையில் இருந்த தன்மானமற்ற தமிழகத்தில் தன்மானச் சிங்கமாகத் தமிழின தமிழியக்கக் கவிஞராக உலகமெலாம் இருந்த தமிழர்களுக்காகப் புதுவையில் பூத்த புதுமைக் கவிஞர்தான் புரட்சிப் பாவேந்தன். தமிழியக்கத்திற்கு, தமிழினத்திற்கு இவரைப் போன்று பாடிய கவிஞர் தமிழகத்தில் எவருமில்லை என்றால் அது மிகையாகாது.

தமிழர்கள் தன்மானமற்றுத் தன்னுரிமை இல்லாமல் இருப்பதற்குக் காரணங்கள் சாதி, மற்றொன்று கடவுள். இந்த இரண்டையும் அடியோடு தமிழர்கள் மறந்து விட்டால் தமிழன் இந்த உலகத்திற்கே வழி காட்டக் கூடியவனாக இருப்பான்.

**"மானுடரின் தோளின் மகத்துவத்தைக்**
**காட்ட வந்த**
**தேனின் பெருக்கே என் செந்தமிழே**
**கண்ணுறங்கு"**

என்று ஆண் குழந்தைக்கும்

**"வேண்டாத சாதி இருட்டு வெளுப்பதற்குத்**
**தூண்டா விளக்காய்த் துலங்கும்**
**பெருமாட்டி"**

என்று பெண் குழந்தைக்கும் தாலாட்டுப்பாடும் போதே "மூடத்தனத்தின் முடை நாற்றச் சாக்கடையில்" இருந்து அவர்களை விடுவிக்க முனைகிறார் பாவேந்தர்.

மேற்சாதிப் பார்ப்பனரே மேலாட்சி பெற்று ஏனையவரை இழிவுபடுத்தி வந்ததைப் பெரியார் எதிர்த்த போது அவரின் போர் வாளாக நம்பாவேந்தர் உதவினார். பார்ப்பன ஆதிக்கம் கட்டுக் கடங்காமல் போகவே வேறு வழியின்றித் தமிழர்களையும் தமிழினத்தையும் பாதுகாக்க ஆரியப் பிடியிலிருந்தும் இந்தித் திணிப்பிலிருந்தும் விடுவிக்க தமிழர்கள் தன்னுரிமை பெற வேண்டும் என்ற கருத்து வலுப் பெற்றது.

இதில் புரட்சிக் கவிஞர் பங்கு அளப்பரியது. தனது குயிலினை ஆரம்பித்த காலம் முதல் தனது கவிதைகளின் மூலமும் நாடகம் மூலமும், தமிழர் தன்மானமும் தன்னுணர்வும் பெற வேண்டிய கட்டாயத்தை வெளிப்படுத்தினார்.

தனது குயில் 12-1-47ல் முதலாக "தனியாக்கப் போராங்கோ" என்று திராவிட நாடு என்று கூறப்படுவதை மலையாளம் பேசுபவர்களைத் தனியாகவும் தெலுங்கு பேசுபவர்களைத் தனியாகவும் துளுவம் பேசுபவர்களைத் தனியாகவும் கன்னடம் பேசுபவர்களைத் தனியாகவும் ஆக்கபோராங்கோ என்று கூறிவிட்டு

**"தனித்தனியாய்ப் பண்ணாங்கோ**
**இது நல்லதே இன்னாங்கோ"**

என்றும் கூறுகிறார்.

ஆனால் தனது 1-4-47 இதழில் மிக உறுதியாகத் தீர்ப்பான சேதி ஒன்று சொல்கின்றார்.

**"தீர்ப்பான சேதி ஒன்று சொல்வேன்**
**அண்ணே**

திராவிடத்தை மீட்க முயல் அண்ணே''
என்று தமது தீர்மானத்தைக் குறிப்பிட்டு,

''பண்டைத் திராவிட நாடண்ணே—இது
பாராண்ட தாயகமாம் அண்ணே''

என்று நமது இனத்தின் மேன்மையை உயர்த்திப் பாராண்ட வரலாற்றையெல்லாம் கூறுகிறார்.

''காய்ப்பேறிப் போனதடா அண்ணே—உன்
காட்டிக் கொடுக்கும் இழி தன்மை
தாய்ப்பால் குடித்திருப்பாய் அண்ணே—
எனில்
தன்மானம் போனதென்ன அண்ணே''

என்று கூறித்தமிழனின் தன்மானத்தை உசுப்பி விடுகிறார். அத்துடன், திராவிடர்கள் தம்முள் கருங்காலிகள் உள்ளனரென்பதையும் அவர் சுட்டிக்காட்டி அவர் திருந்தவும் இடித்துரைக்கின்றார்.

திராவிடர்க்கு விண்ணப்பம் என்னும் பாடலில் தமிழனின் தன்மான உணர்ச்சியைத் தூண்டும் நெருப்பு வரிகள் கொழுந்து விட்டெரிகிறது.

''செங்குட்டுவன் பிறந்த திராவிடத்தைச்
சிறுவடக்கர் ஆளுவதோ?''

என்று உணர்ச்சியூட்டி இனியும் அவர்களை அடக்காமல் விடக் கூடாது என்று எச்சரிக்கின்றார்.

''படியரிசித் தேவைக்கும் முழத் துண்டுக்கும்
பல்லிளித்துத் தமைநோக்கிக் கெஞ்சத் தக்க
அடிமைநிலை நோக்கவந்தார் இதுவும்
செய்வார்
அடக்காமல் விட்டு வைத்தால் எதுவும்
சொல்வார்''

என்று திராவிடர்க்கு விண்ணப்பம் என்ற பாடலில் முழங்குகிறார்.

17-6-58 குயிலில் தமிழ்த் தாயிடம் முறையிடுகின்றார். நம் கவிஞர்,

''செந்தமிழா உன்நாட்டின் பெயரென்ன
செப்பென்றால்
இந்தியா என்றே இளிக்கின்றான்
என்தாயே''

என்று தமிழன் தன்னைத்தானே இழந்து கொண்டிருப்பதைத் தனக்கே உரிய எழுச்சி வரிகளின் மூலம் உணர்த்த முற்படுகின்றார்.

தன்னுரிமைக்காக ஒவ்வொரு செயலிலும் விடுதலை முழங்கச் சொல்கிறார் பாவேந்தர்.

''அன்னைமார் விடுதலை முழக்குவர் ஆகுக
தந்தைமார் விடுதலை முழக்கம் தழுவுக,
மக்கள்மார் விடுதலை முழக்கம் வளர்க்க.

என்று கூறி,

''அழகிய விடுதலை மணிக்கொடி எழும்
வரை
பகைவர்க்கென்று மிங்கிடியென முழக்கவே',

என்று விடுதலையைத் தன் உயிராக உடலாகக் கொண்டுள்ளார்.

தன்மானமும், தன்னுரிமை உணர்வும் பெறமாட்டாரா நம் தமிழர் என்ற புரட்சிக் கவிஞரின் எண்ண எழுச்சியை, உணர்ச்சிக் குவியலை அந்தப் புரட்சிக் கவிஞரின் நூற்றாண்டிலாவது அவரின் கவிதைகளைத் தமிழினத்தார் படித்துப் புதிய தன்னுணர்வு பெற வேண்டும். நமது அடிமைத் தன்மையை உணர்ந்து தன்னுரிமைக்காக போராட பெரும்பான்மைத் தமிழர்கள் முன் வர வேண்டும். இதுதான் அந்தப் பெருங்கவிஞரின் நூற்றாண்டில் நாம் அவருக்குச் செய்யும் மிகப் பெரிய பெருமையாகும்.

''புதியதோர் தமிழ் உலகம்
இதோ,இதோ, வெல்க எழிற்றமிழ் நாடே''

---

## விடுதலை கொள்!

உணர்ந்திடுக தமிழ்த்தாய்க்கு
வருந்தீமை உனக்குவருந்
தீமை யன்றோ!
பிணிநீக்க எழுந்திருநீ
இளந்தமிழா! வரிப்புலியே!
பிற்றை நாளுக்
கணிசெய்யும் இலக்கியம்செய்!
அறத்தைச்செய்! விடுதலைகொள்
அழகு நாட்டில்!
பணிசெய்வாய்! தமிழுக்குத்
துறைதோறும் துறைதோறும்
பழநாட் டானே!

''புரட்சிக் கவிஞர் தமிழியக்கம்''

---

# அமிழ்து எது?

பாவலர் ம. கணபதி, எம். ஏ., பி.எட்

தலைவன் தலைவி இருவரும் கருத்தொரு மித்த நிலையில் உரையாடிக் கொண்டிருக் கையில் தலைவன், தலைவியிடம் இயற்கை யின் இன்ப விளையாட்டை எடுத்துரைக் கின்றான்!

தைத் திங்கள் முதல் நாளில் "பொங் கலோ பொங்கலென்று" கூறி எடுத் துண்ணும் அச்சுவையினை நீவிர் என்ன வென்று கூறுவீர் எனத் தலைவி கேட்கிறாள்!

நறுஞ்சுவைப் பொங்கலினை எடுத்துண்டு விட்டு அதை அமிழ்தென்றான்! தலைவன்.

தலைவியோ, நீங்கள் கூறுவது உண்மை யென்றால் அமிழ்து பொங்கல் மட்டுமோ அத்தான் என்றாள்!

பொங்கல் அமிழ்துதான் பொய்யில்லை. கட்டிக் கரும்பும் அமிழ்து; கனி அமிழ்து; முல்லையரும் அமிழ்து; தேனமிழ்து, அப்பம் அமிழ்து, குழந்தை மழலை அமிழ்து, குன்றாப் பழந்தமிழும், பாட்டும் அமிழ்து, தமிழ்ப் பண் அமிழ்து, திங்கள் அமிழ்து, மடிசுமந்து பெற்று வைக்கும் தாய்மை அமிழ்து, தனி இன்ப வீட மிழ்து, தென்றல் அமிழ்து, நறுஞ் செவ்விள நீரமிழ்து எனப் பட்டியிலிட்டுக் கூறினான் தலைவன்.

அப்படியானால் அமிழ்து எது?—வான் நின்றமிழும் மழைதான் அமிழ்து என்கிறான். 'மழைதான் அமிழ்து" என்று மக்கள் நம்ப வேண்டாமா? என வினவினாள் தலைவி.

"வானின்றுலகம் வழங்கி வருதலால்
தானமிழ்தம் என்றுணரற் பாற் "றென்று

சாற்றிய வள்ளுவர், அமிழ்தென்றுணரும் அருமை மழைக்கே என உரைத்தார்.

அமிழ்தா? அமுதா? அமிழ்தமா? இன்னும் அமுதமா? இங்கிவைகள் அத்தனையும் ஒன்றா?

ஆம்! அமிழ்தே 'அம்' சாரியையும் ஆன திரிபும் பெற்று 'அமிழ்தம், அமுதம் என்றா கும் என்றுரைத்தான் தலைவன்.

தேவர்களுக்காகத் திருப்பாற் கடலைக் கடைந்து பெற்றது "அம்ருதம்" என்பார் களே! ஆம் தேவர்க்கு மட்டும் திரட்டியது அம்ருதம், யாவர்க்கும் ஆதிமுதல் எங்கும் அமிழ்துயிர் என்றான்.

மழையே அமிழ்து; மழையே உலகை அழியாது காப்பாற்றும், அப்படி இருக்கையில் ஏனிதனை யாரும் வெளிப்படையாகச் சொல்ல வில்லை? எனக் கேட்டாள்.

"வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால்
வீழ்வார்க்கு வீழ்வார் அளிக்கும் அளி"

என்றும்,

"உறுதோ றுயிர் தளிப்பத் தீண்டலாற் பேதைக்
கமிழ்தின் இயன்றன தோள்"

என்ற வள்ளுவரின் பாட்டில் கமழும் கருத்தை நீவிர் காண்பீர்- உயிர் தளிர்க்கத் தீண்டினாள் தன் துணைவி. அன்னதற்குக் காரணம் அம் மாண்புடையாள் தோளையாம். அத்தோள் அமிழ்தாம். தளிர்க்க வைப்பது யாது? மழை யன்றோ? அந்தக் குளிர் மழையை அன்னார் அமிழ்தென்றார்!

குளிர் மழையே அமிழ்து!

## ஆங்கிலமா வேண்டும்?

வாணிகர்தம் முகவரியை
வரைகின்ற பலகையில்ஆங்
கிலமா வேண்டும்?

'மாணுயர்ந்த செந்தமிழால்
வரைக'என அன்னவர்க்குச்
சொல்ல வேண்டும்!

ஆணிவிற்போன் முதலாக
அணிவிற்போன் ஈறாக
அனைவர் போக்கும்

நாணமற்ற தல்லாமல்
நந்தமிழின் நலங்காக்கும்
செய்கை யாமோ?

**புரட்சிக்கவிஞர்**
**"தமிழியக்கம்"**

# பாவேந்தர் வழி நடப்போம்

புலவர் பி.சி. கணேசன், எம்.ஏ.,எம்.எட்.

பாவேந்தர் தான் வரைந்த இலக்கிய இயக்கத்தைப் பாடுபொருள் தொடர்பில் மூன்று நிலையான் பகுக்கலாம். 'தமிழியக்கம்,' ''தன்மான இயக்கம்'', சீர்திருத்த ''இயக்கம்'' என்பன தமிழர்களின் குருதியோடு இரண்டறக் கலக்க வேண்டும் என்பதே பாவேந்தரின் பேரவா!

''எங்கும் தமிழ் எதிலும் தமிழ்'' என்பதே அவரின் மூச்சு. இவ்வெண்ணத்திற்கு அடிப் படையாக அமையப்பெற்றது தமிழ்மொழியில் பிற மொழிக் கலப்பும், காலச் சூழலுந்தான். தொல்காப்பியர் காலம் முதல் ஆங்கிலேயர் காலம்வரை தமிழில் மொழிக்கலப்பு உள்ளமை தெள்ளிதின் விளங்குகிறது. இதனைக் கண்ட தன் தாக்கமே பாவேந்தரின் தனித் தமிழியக்க மாயிற்று என்போம். தொடக்க காலத்தில் வட மொழிக் கலப்பில் எழுதி வந்த பாவேந்தர், பின்னாளில் தமிழ்க்கடல் மறைமலை அடிக ளாரின் தனித் தமிழ் ஆளுகையால் ஈர்க்கப்பட் டார்.

''செந்தமிழே! உயிரே
நைந்தா யெனின் நைந்து போகும் என்
வாழ்வு''

என்பதனால் பாவேந்தர் தமிழை உயிரெனப் போற்றி-தமிழ் வாழ்விழந்தால் நாமும் வாழ் விழப்போம் என்பதனையும் காட்டுகின்றார்.

தமிழுக்காக எதையும் இழக்கும் நிலைக்குப் பாவேந்தர் வருகிறார் பாருங்கள்.

''சலுகை போனால் போகட்டும்-என்
அலுவல் போனால் போகட்டும்
தமிழ் விடுதலை ஆகட்டும்''

தமிழினம் ஒன்றுபட்டாக வேண்டும் என் பதில் பாவேந்தரின் இறுக்கமான பிடிப்பினை எண்ணி மகிழாதார் தமிழரில்லை.

''செங்குருதி...
சிறிதும் அயலான் கலப்பின்மை
வேண்டும்''

தமிழ் நாட்டின்கண் தமிழாய்ந்த தமிழ் மகனே முதல் அமைச்சனாய் வரவேண்டும் என்பதில் காட்டிய உறுதிப்பாட்டினை மிஞ்சும் வண்ணம்.

''தமிழ்ப் பகைவன் முதலமைச்சாய்த்
தமிழ் நாட்டில் வாராது
தடுத்தல் வேண்டும்''

என்ற எண்ணம் மேலோங்கி நிற்கின்றது என் போம். பாவேந்தரையும் ''தமிழ்க் கல்வி'' ஈர்த்திடத்தான் செய்தது.

''தமிழ்க்கல்வி தமிழ்நாட்டில்
கட்டாயம் என்பதொரு
சட்டம் செய்க!''

பாவேந்தரையும் பழங்கால மூடக் கொள்கை விட்டு வைக்கவில்லை. அதன் தன்மையுணரப் பெற்ற பின்னாளில் தானும் தன்மான உணர்வு பெற்றவராய்ப் பாடல் புனையத் தொடங்குகின்றார்.

''பேடி வழக்கங்கள் மூடத்தனம்-இந்தப்
பீடைகளே இங்குச் சாத்திரங்கள்''

பெரியாரின் பாசறையில் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக்கொண்டார். அதன் விளைவு பகுத்தறிவு—கொழுந்துவிட்டெரியத் தொடங்கியது. அவர் தம் பாடல்களில்.

''ஊறும் பகுத்தறிவை இல்லாதொழித்து
விட்டு''

''பகுத்தறிவைப் போற்று''
''சுயமரியாதை கொள் தோழா? நீ''
''அறம் சொன்ன வள்ளுவர் தாம்
கோயிலை அறிவித்தாரா?''

அவர் தம் பாட்டுவரிகள் அன்றைய தமிழர் களிடையே அனல் பறக்கும் உணர்வினைத் தூண்டி—செயற்படத் தொடங்கியது. மனிதன் மனிதனாக வாழ்ந்தான்! இன்றோ! மனிதன்—என்று—யாரைச் சொல்வது! எங்ஙனம் உரைப்பது! யாரிடம் உரைப்பது! கற்காலத்தே வாழ்ந்த கதையினை மீளப் படிக்கப் போகி றோமா? இல்லை, மீளத்தான் முயலப் போகி றோமா? காலந்தான் பதில் சொல்ல வேண்டும்!

# பெரியாரும் புரட்சிக் கவிஞரும்

மாணிக்க. சண்முகன்

## கவிஞர் பாரதிதாசன்

1925-க்கு முன்பு மயிலாடுதுறையில் (மாயவரம்) நடந்த ஒரு காங்கிரஸ் பொதுக் கூட்டத்தில் தந்தை பெரியார் அவர்களும் டாக்டர் பி. வரதராசலு (நாயுடு) அவர்களும் பேசினார்கள். அவரின் பேச்சைக் கேட்க வேண்டும் என்ற அவாவில், பாரதிதாசன் இக்கூட்டத்திற்குச் சென்றார். அப்போது பாரதிதாசன் காங்கிரசுக்காரர். பழுத்த ஆழமான பக்தராக விளங்கியவர். விபூதி, நாமங்களைப் போட்டுக் கொண்டு, பஜனை மடங்களில் பாடியும் ஆடியும் காலத்தைப் போக்கிக்கொண்டிருந்தவர்.

பாரதிதாசன், முதன் முதலாகப் பெரியாரின் பேச்சைக் கேட்டார். காங்கிரசுக்காரராயிருந்தாலும், வழக்கம் போல் அன்றும் சமய உணர்வு, கடவுள் உணர்வு ஆகியவைகளைக் கண்டித்து அவருக்கே உரிய முறையில் பெரியார் பேசினார். அப்பேச்சிலிருந்த நியாயத்தை அவரது உள்ளம் ஏற்றுக் கொண்டது. அன்றிலிருந்து பெரியாரின் பக்கம் நிற்கலானார்.

1925-ல் காஞ்சிபுரத்தில், திரு. வி. க. தலைமையில் நடைபெற்ற காங்கிரஸ் மாநாட்டில், தான் கொண்டு வந்த வகுப்புவாரி உரிமைத் தீர்மானத்தை அனுமதிக்காததால், பெரியார் காங்கிரசை விட்டு வெளியேறினார். இவரைப் பின்பற்றிப் பாரதிதாசனும் காங்கிரசை விட்டு வெளியேறினார்.

பின்னர் தந்தை பெரியாரின் சுயமரியாதை இயக்கக் கொள்கைகளை ஏற்று, பெரியாரின் சொல்லோவியங்களையும், எழுத்தோவியங்களையும், பாரதிதாசன், காவியங்களாக, இசைப் பாடல்களாக, நாடகங்களாக ஆக்கினார்.

## பாரதிதாசன் பற்றிப் பெரியார்

நேற்று நாம் இராமனையும், கந்தனையும் செருப்பாலடி என்று சொன்னோம். நாற்பது வருடங்களுக்கு முன்பே அவர், சீரங்கநாதனையும் தில்லை நடராசனையும் பீரங்கி வைத்துப் பிளந்தெறிய வேண்டுமென்று பாடியிருக்கிறார். செருப்பாலடித்தால் கடவுள் உருவம் இருக்கும் அந்த உருவமே தெரியாத வகையில் பீரங்கி வைத்து உடைத்தெறிய வேண்டுமென்றார். "இல்லை யென்பான் யாரடா தில்லையிலே வந்து பாரடா" என்று எவனோ ஒரு ஆஸ்திகன் பாடினான். அதற்குப் பதிலாக, "இல்லை என்பவன் நானடா, தில்லை கண்டு தானடா" என்று துணிந்து பதில் சொன்னார். ... . பாரதிதாசன் அவர்கள் சிறந்த பகுத்தறிவு வாதியாவார். அவர் பகுத்தறிவுவாதியாக இருந்து பல பகுத்தறிவுக் கொள்கைகளைப் பரப்பியவர். அவரது கொள்கையைப் பரப்புவது அவசியமாகும்"—என்று 4-5-71-ல் மயிலாடுதுறையில் பெரியார் பேசினார்.

## பெரியார் பற்றிப் பாரதிதாசன்

'நாம் இளமைப் போதில் முருகனைப் புகழ்ந்தோம், பாடினோம்—ஆனால் நாளடைவில் முருகன் புகழத்தக்க ஒரு பொருளன்று—பாடத்தக்க ஒரு பொருளன்று எனக் கண்டோம். முருகனைப் புகழ்வதை விட்டோம். தாம் போகும் வழியை மறித்துக் கொண்டிருந்த ஒரு குன்றத்தைக் குத்தி உடைத்துக் கொண்டிருந்த இரண்டு தோள்களைக் கண்டோம். தம்மை நோக்கிச் சீறி வருகின்ற நெருப்பு மழைக்குச் சிரித்துக் கொண்டிருந்த இரண்டு உதடுகளைக் கண்டோம். "தமிழ் நெறி காப்பேன், தமிழரைக் காப்பேன், ஆரிய நெறியை அடியோடு மாய்ப்பேன்" என்று அறையில் அல்ல, மலைமேல் நின்று மெல்ல, மெல்ல தொண்டை கிழிய முழக்கமிடும் ஓர் 'இருடிய'த்தால் செய்த உள்ளத்தைக் கண்டோம். அது மட்டுமல்ல, குன்று

உடைக்கும் தோளும், நெருப்பு மழைக்குச் சிரித்த உதடுகளும், இருடிய உள்ளமும் ஒரே இடத்தில் கண்டோம். இந்த அணுகுண்டுப் பட்டறைதாம் பெரியார் என்பதும்கண்டோம். பெரியாரைப் புகழ்ந்து பேசினோம், புகழ்ந்து பாடினோம்'' என்று பாரதிதாசன் குறிப்பிட்டுள்ளார்.

('குயில்' 10-5-60)

## அவர்தாம் பெரியார்

தந்தை பெரியார் அவர்கள் சாதி ஒழிப்புப் போராட்டத்தில் ஈடுபட்டதால், 14-12-57ல் அவருக்கு 6 மாத சிறைத் தண்டனையைத் திருச்சி நீதிமன்றம் வழங்கியது. 13-5-58-ல் அவர் விடுதலையானதும், தில்லையில் மிகப் பெரிய வரவேற்பு அவருக்கு அளிக்கப்பட்டது.

இந்த வரவேற்புக் கூட்டம் புரட்சிக் கவிஞர் தலைமையில் நடைபெற்றது. அந்த ஊர்வலத்தின் மாட்சியையும் கூட்டத்தின் எழுச்சியையும் கண்ட பாரதிதாசன், ஒரு அருமையான பாடலை இயற்றினார். அதன் ஒவ்வொரு சொல்லும் பொருட் சுவை செறிந்ததாக உள்ளது.

அப்பாடல்:-

''அவர்தாம் பெரியார்''

என்ற புகழ் பெற்ற பாடலாகும்.

''நமை அவரின் போருக் கொப்படை''

என முடியும் பாடலில், பெரியார் அவர்களை இப்படி, இவர் படம் பிடித்தது போல், வேறு யாரும் இதுவரை படம் பிடித்ததாகத் தெரியவில்லை.

## திராவிடப் பண்

1940-ம் ஆண்டு திருவாரூரில் நடைபெற்ற நீதிக்கட்சியின் மாநாட்டின் போது, ''திராவிட நாடு திராவிடருக்கே'' என்ற முழக்கம் உருவானது ('நம்நாடு' 15-9-59)

இந்த முழக்கத்திற்கு, ஒரு எழுச்சி மிகுந்த திராவிடப் பண்ணாக, ''வாழ்க! வாழ்கவே! வளமார் எமது திராவிட நாடு'' என்ற பாடலை எழுதினார். இது குறித்து!-

''வாழ்க, வாழ்கவே வளமார் நமது திராவிட நாடு என்ற பண்ணை ஏன் எழுதினேன் தெரியுமா? சர் செல்வம் திராவிட நாட்டுப் பண் ஒன்று என்னைக் கொண்டு சமைத்துத் தரச் சொன்னதாக நமது கி.ஆ.பெ விசுவநாதன் என்னிடம் கூறினார். அதனால் தான் திராவிட நாட்டுப் பண் பாடினேன்''- என்று பாரதிதாசன் கூறியதாக, ''திராவிட நாடு'' 1-10-44 இதழில் அண்ணா எழுதியுள்ளார்.

## இந்தி எதிர்ப்பு நடைப் பயணப் படைக்குப் பாட்டு

அன்றைய சென்னை மாகாணத்தின் முதலமைச்சர், இராசகோபாலச்சாரியார் 'இந்தி' மொழியைக் கட்டாயப் பாடமாக வைத்த போது, அதை எதிர்த்து இந்தி எதிர்ப்பு இயக்கத்தை 1938-ல் பெரியார் நடத்தினார். இந்த இயக்கத்தின் கருத்துக்களை ஊரெங்கும் பரப்ப, திருச்சியிலிருந்து வழிநடைப் பயணமாக ஒரு 'படை' பெரியாரின் மேடை முரசாகவும், 1937, 38-ல் 'விடுதலை' தின இதழின் ஆசிரியராயிருந்த பண்டித எஸ். முத்துசாமிப் (பிள்ளை) அவர்களால் 'அஞ்சா நெஞ்சன்' என்று அழைக்கப்பட்டவருமான பட்டுக்கோட்டை அ. கிரிசாமியின் தலைமையில் 1-8-38ல் புறப்பட்டு, 11-9-38ல் சென்னை திருவல்லிக்கேணி கடற்கரையில் நடைபெற்ற மாபெரும் இந்தி எதிர்ப்புப் பொதுக் கூட்டத்தில் முடிந்தது. இந்தப் படை வழியெங்கும் பாடி வர, பெரியாரின் இந்தி எதிர்ப்புக் கொள்கை பரவ, பாரதிதாசன்,

''இந்திக்குத் தமிழ்நாட்டில் ஆதிக்கமாம்''

எனத் தொடங்கும் பாடலை இயற்றித் தந்தார்.

---

# துன்பமிது!

உணவுதரு விடுதிதனைக்
கிளப்பெனவேண் டும்போலும்!
உயா நத பட்டுத்
துணிக்கடைகுச் சிலருஷாப்
எனுமபலகை தொங்குவதால்
சிறப்புப் போலும!
மணக்கவருந் தென்றலிலே
குளிராஇல் லை?தோப்பில்
நிழலா இல்லை?
தணிப்பரிதாந் துன்பமிது!
தமிழகத்தின தமிழத்தெருவில்
தமிழ்தா னிலலை!

**புரட்சிக்கவிஞர் ''தமிழியக்கம்''**

---

# பாரதியும் பாரதிதாசனும்

**எஸ். டி. காசிராஜன்**

கவிஞன் காலமண்ணில் முளைப்பவன். அவன் காலத்தில் சமுதாயத்தினை எந்தச் சக்தி ஆட்கொண்டிருக்கிறதோ அந்தச் சக்தி கவிஞனையும் ஆட்கொள்ளும். சமுதாயம் கொடுமைகளால் சிதைந்து கொண்டிருக்கிற போது அக்கொடுமைகளை எதிர்க்கவும் புதுமைகளைக் காணவும் சிந்திக்கிற கவிஞனைக் காலம் ஈன்றெடுக்கும். பாரதியும், பாரதிதாசனும் இந்த உண்மையை நிறுவுகின்றனர்.

பாரதியைப் பாடவந்த புரட்சிக் கவிஞர் பாரதிதாசன்,

> "தமிழரின் உயிர்நிகர் தமிழ்நிலை
> தாழ்ந்ததால்
> இமைதிற வாமல் இருந்த நிலையில்
> தமிழகம், தமிழுக்குத் தகும்உயர் வளிக்கும்
> தலைவனை எண்ணித் தவங்கிடக் கையில்
> இலகு பாரதிப் புலவன் தோன்றினான்"(1)

எனக் காலம் ஈன்றெடுத்த தன்மையைப் புலப்படுத்தினார். அதைக் கண்டு கொண்டதால் பாரதியிடம் நெருங்கிப் பழகலானார்.

## பாரதி பாசறை:

1908 முதல் 1918 வரை பாரதி புதுவையில் தங்கியிருந்த நாள்களில் பாரதிதாசன் அவருடன் நெருங்கிப் பழகினார். புதுவையில் வேணுநாயகர் வீட்டுத் திருமணத்தில் பாரதிதாசன் "வீர சுதந்திரம் வேண்டிநின்றார்" என்ற பாரதியின் பாடலைப் பண்ணுடன் பாடினார். அதைக் கேட்ட பாரதி பாராட்டிப் போற்றினார். இருவரது சந்திப்பும் முதன் முதலாக இவ்வாறு தொடங்கியது. பாரதியின் பாடல்களில் தோய்ந்திருந்த பாவேந்தர் உள்ளம், பாரதி போற்றிய பின் அவர் வழிச் சென்றது. அவரைப் பலவழிகளிலும் பின்பற்றும் கவிஞராக மாறித் தன் இயற்பெயரான சுப்புரத்தினம் என்ற பெயரைப் பாரதிதாசன் என மாற்றிக் கொண்டார். பாவேந்தரின் 'எங்கெங்கு காணினும் சக்தியடா' என்ற கவிதையைச் சுதேசமித்திரன் ஏட்டிற்குப் பாரதி அனுப்பிய போது, பாரதியின் கவிதா மண்டலத்தைச் சார்ந்த சுப்புரத்தினம் எழுதியது எனக் குறிப்பிட்டு பாரதி எழுதினார். பாரதியின் பாசறையில் பாவேந்தரும் கூரிய போர் வாளானார். தன் இறுதி மூச்சுள்ளவரை பாவேந்தர் பாரதியின் மெய்க்காப்பாளராக விளங்கினார்.

## புதுமை:

பழம் பாடல்களில் நல்ல பயிற்சி பெற்றிருந்த பாவேந்தர் பழம் பாடல்களின் செய்யுள் நடையையும் மரபையும் பின்பற்றிப் பாடல்கள் பல புனைந்தார். பாரதிக்கு அணுக்கமான பின் நடையில் கருத்தில் புதுமையை ஏற்றுப் போற்றத் தொடங்கினார். இதனைப் பாவேந்தரே,

> "சுப்பிரமணிய பாரதி தோன்றி என்
> பாட்டுக்குப் புதுமுறை புதுநடை
> காட்டினார்" (2)

என்று தெரிவித்தார்.

## எளிமை :

அறுவுத் திறமை வளர்ந்தால் அதன் நுட்பம் உயரும்; காலமும் முயற்சியும் மிகும்; ஆனால், மொழி வளர்ந்தால் அதன் வளம் உயரும்; எளிமையும் கூடும். எளிமையில் எழில் இருக்கிறது; ஈர்ப்பு இருக்கிறது. ஆனால் சிக்கல் இல்லை. எளிதில் எல்லாரையும் அடையும். இதனை உணர்ந்த பாரதி, தமிழ் இலக்கிய உலகில் ஒரு புதிய வளர்ச்சிக்குரிய வாயிலைத் திறந்தார். எங்கோ இருந்த தமிழ்க் கவிதையை, எல்லாருக்கும் எட்டும் பொருளாக்கினார், பாரதி; அதற்காக இலக்கணத்தைப் புறக்கணிக்கவில்லை; மரபுகளை மாற்றவில்லை. புதிய கவிதை அமைப்பையும், புதிய பொருளையும் எளிமையாக்கிப் பாடினார். பாரதியின் தொடர்பால் புதிய நடையில் எழுத வேண்டும் என்ற எண்ணம் பாரதிதாசனுக்கும் தோன்றியது. பாரதியைப் போல எளிய நடையில் மக்களுக்கு இன்றைக்கு வேண்டிய கருத்தை வைத்துப் பாடல் இயற்ற வேண்டும் என்பதைப் புலவர்க்கு நினைவூட்ட வேண்டும் என்பதற்காகவே, பாரதியை ஆதரித்ததாகவும், பாரதிதாசன் என்று புனைபெயர் வைத்துக் கொண்டதாகவும் கூறியுள்ளார். (3)

சிறுசிறு சொற்றொடராக, அன்றாட நிகழ்ச்சிகளை எளிமையாகப் படிப்போர் மனத்தில் பதியும் வண்ணம் எழுதியும் வழி காட்டினார் பாரதிதாசன்.

> "பிட்டுக்காரி தட்டினாள் கதவையே
> சட்டென்று கதவைத் திறந்தான் பெரியவன்
> பிட்டையும் வடையையும் வட்டியில்
> வாங்கினான்

பெட்டி மீதில் இட்டுட் கார்ந்தான்
ஆவலாய் அவற்றை அருந்தத்
தொடங்கினான்'' (4)

உணர்ச்சிக் கொந்தளிப்பைக் கூட எளியநடையில் பாடிக்காட்டினார் பாரதிதாசன்.

''பூட்டிய இருப்புக் கூட்டின் கதவு
திறக்கப்பட்டது; சிறுத்தையே வெளியில்வா
எலிஎன உன்னை இகழ்ந்தவர் நடுங்கப்
புலிஎனச் செயல் செய்யப் புறப்படு
வெளியில்'' (5)

**நாட்டுப்புறப் பாடல்கள்:**

பாமர மக்களுக்குப் போய்ச் சேர்வதே கவிதையின் பயன் என நன்குணர்ந்தார் பாரதி. அதற்காகப் பாரத மக்களை ஆராய்ந்தார். அவர் பாடும் பாடல்களில் கவனம் செலுத்தினார். ஏற்ற நீர்ப்பாட்டின் இசையிலும், சுண்ணம் இடிப்பார் பாட்டிலும், பண்ணை மடவார் பழகுபல பாட்டிலும், வட்டமிட்டுப் பெண்கள் வளைக்கரங்கள் தாமொலிக்கக் கொட்டி இசைத்திடுமோர் கூட்டமுதக் கும்மியிலும் மனத்தைப் பறிகொடுத்து விட்டதாகவே பாரதி பாடியுள்ளார். அந்த எளிய வடிவங்களை அவர் கையாளவும் தொடங்கினார்.

பாரதிதாசனும் நாட்டுப்புறப் பாடல் வடிவங்களான ஏற்றப்பட்டு, தாலாட்டு, சிறுவர் தம் விளையாட்டுப் பாடல்கள், கப்பல் பாட்டு, கும்மி, குடுகுடுப்பைப் பாட்டு, விடுகதைகள் முதலியவற்றில் பாடல்களைப் புனைந்துள்ளார். 'குடும்ப விளக்கு' என்ற கதைப் பாடல்களிலும் எளிய பாட்டின் பெருமையைக் குறித்துள்ளார்.

'எளிய நடைப்பாட்டு ஒன்றாலேயே தமிழின் மேன்மையை, தமிழின் பயனைத் தமிழர்க்கு ஆக்க முடியும் என்பது என் அசைக்க முடியாத நம்பிக்கை''(5) என்றே கூறியுள்ளார். இதனைக் கவிதை வாயிலாகவும் உறுதிப்படுத்தினார் பாரதிதாசன்.

''பண்டிதர்க்கும் கலைவிளக்கும் எளிய
நடைப்பாட்டு'' (6)

**சிறுவர் பாடல்கள் :**

எளிய பாட்டு, சிறுவர்களை மகிழச் செய்யும் என்னும் உளவியலை அறிந்தவர் பாரதி. அதனால் ''காலை எழுந்தவுடன் படிப்பு, பின்பு கனிவு கொடுக்கும் நல்ல பாட்டு'' என்று எளிமையாகப் பாடினார். சிறுவர் உள்ளத்திலும் அது செம்மையாகப் படிந்தது.

பாரதிதாசனும் அவர் வழியைப் பின்பற்றினார். பாரதி படிக்கச் சொன்னதை அழுத்தமாகப் பதித்தார்.

''காலையில் படி கடும்பகல் படி
மாலை இரவு பொருள்படும்படி
நூலைப்படி'' (7)

என்றார்.

பாரதி, சிறுவர்க்கென நீதி இலக்கியம் படைத்தார். பாரதிதாசனும் பழைய நீதி இலக்கியத்தில் காலத்திற்கேற்ற மாறுதலைச் செய்தார். அதற்காகவே புதிய ஆத்திசூடி படைத்தார்.

ஓர் ஆத்திசூடியை விடுதலைக்கு முன் இயற்றினார், விடுதலைக்குப் பின் இயற்றிய ஆத்திசூடியை ''இளையார் ஆத்திசூடி'' என்றார். விடுதலை உயிர்க்கு உயிராகும் என முதல் ஆத்திசூடியில் கூறியவர், இளையவர் ஆத்திசூடியில் ''எல்லோரும் ஓர் நிறை'' என்ற நீதியைக் கூறினார்.

**இசைத் தமிழ் :**

''பலருக்கும் புரியப் பாடுங்கள்'' என்றார் பாரதி. எளிய தமிழை இசையோடு சேர்த்துப் பாட முடியும் என்று காட்டியவர் பாரதி. பிறமொழிப் பாடல்களை அந்த நிமிடத்திலே தமிழிசையாக்கியவர் பாரதி. பலருக்கும் புரியத் தமிழிசையில் பாடவியலாது என்ற பகையை நடுங்கச் செய்தவர் பாரதி என்று பாரதிதாசனும் போற்றினார். போற்றியதோடு அமையாது, எளிய, இனிய, பாமரருக்கும் புரியக் கூடிய தமிழிசையில் பாடினார். தமிழில் இசையோடு பாட 'இசையமுது' படைத்தார். குடும்ப விளக்குக் காவியத்தில் தமிழிசையைப் போற்றியுள்ளார். தமிழிசையைக் கெடுத்தவை ஆர்மோனியமும், தெலுங்குக் கீர்த்தனமும் என்று பாரதியே குறிப்பிட்டதாகப் பாரதிதாசன் பேசியுள்ளார். (8) அந்த எண்ணம் பாவேந்தருக்கும் இருந்ததால் தியாகராசரின் தெலுங்குக் கீர்த்தனைகளை மொழி பெயர்த்தனர். தியாகராசர் மீதுள்ள அன்போ பாடிய பொருளின் மீது கொண்ட பிடிப்போ மக்களைக கவர்ந்தது என்றால் அதனைத் தமிழும் வழங்கும் வல்லமையுடையது என்பதை மெய்ப்பித்தார்.''ஸ்ரீ சுப்பிரமணியபாரதி கவிதா மண்டலம்'' என்னும் திங்கள் இதழுக்கு ஆசிரியரான பாரதிதாசன், 1935-ஆம் ஆண்டு ''சங்கீதம்'' எனும் பகுதியில் 11 கீர்த்தனங்களை மொழி பெயர்த்து வெளியிட்டிருக்கின்றார்.

**காவடிச்சிந்து:**

அண்ணாமலை ரெட்டியாரின் காவடிச் சிந்து சென்ற நூற்றாண்டில் தமிழ் நாட்டில் பெரும்புகழ் பெற்றிருந்தது. அதன் இசை இனிமை, யாப்பமைதி, பொருள் உணர்த்தும் பாங்கு, பாரதியைக் கவர்ந்தது. பாரதி காலத்தில் காவடிச்சிந்து பாடத் தெரிந்தவர்கள் பெரும்புலவராக மதிக்கப்பட்டனர். அதனால் பாரதி, ''எங்கள் தாய், பாரத மாதா'' ஆகியவற்றைக் காவடிச்சிந்தில் பாடினார். எட்டையபுர ஜமீன்தாரிடம் பாரதி இருந்தபோது காவடிச்சிந்து பாடியிருக்கிறார். அதில் அண்ணாமலை ரெட்டியாரையும் பார்க்கலாம் என்பர். அறிஞர் க. கைலாச

பதி (9) "தேசபக்தர் சிதம்பரம் பிள்ளை மறுமொழி" என்ற பாடலும் காவடிச்சிந்து மெட்டில் அமைந்துள்ளது. முருகன் புகழ்பாட எழுந்த காவடிச்சிந்துவைக் காளி புகழுக்கு ஆக்கினார் பாரதி அதனால்தான் பாரதியை, பாரதிதாசன் "சிந்துக்குத் தந்தை" என்று போற்றினார். மேலும் அவர் வழியில் பாரதிதாசனும் "காடு, ஆலய தரிசனம், மாடியில் நிலவு" முதலிய பாடல்களைக் காவடிச்சிந்தில் பாடினார். விடுதலைக்காக வேலவனை வேண்டுவதாகப் பாரதிதாசனும் காவடிச்சிந்தில் ஒரு பாடல் பாடியுள்ளார்.

நம் தமிழிசையோடு ஒன்றியும், பிறமொழி இசையினைத் தமிழுக்கு ஆக்கியும் வெற்றி கண்டவர் பாரதிதாசன். இவரது பாடல்கள் எளிமையும் இனிமையும் பொருந்தி நின்றமையால் அவற்றுக்கு வெற்றியும் கிட்டின.

### ஒப்பில்லாத சமுதாயம்:

விடுதலையில் ஆழ்ந்து நின்ற பாரதி சமுதாயச் சீர்திருத்தத்தினை மறந்தாரல்லர். மனித நேயம், சமத்துவம், வறுமை ஒழிப்பு கல்விப்பரவல் முதலிய சமுதாயச் சீர்திருத்தங்களுக்காக உழைத்தவர் பாரதி. கல்விப்பரவல் முதலிய சமுதாயச் சீர்திருத்தங்களுக்காக உழைத்தவர் பாரதி. "ஒப்பில்லாத சமுதாயமாக்கி மனிதரை அமரராக்கப் பல கல்வி தரப்படல் வேண்டும்" என வலியுறுத்தினார். புதுமைப் பெண்களாகத் திகழ வேண்டும் என வலியுறுத்தினார். புதுமைப்பெண்களாகத் திகழ வேண்டும் என்று பெண்களுக்கு வழி காட்டினார்.

பாரதிதாசனும் அவை யாவற்றையும் ஏற்றுப் போற்றினார். "நமது கொள்கை மக்களெல்லாம் நிகர்" என்றார். மனித நேயத்தில் அக்கறை கொண்டதால் இதைக் கொள்கையாகவே அறிவித்தார். தனியொருவனுக்கு உணவிலையெனில் உலகை அழிப்போம் என்றார் பாரதி. அவர் தாசனும் "இது எனதே என்னும் ஓர் கொடுமையைத் தவிர்ப்போம்" எனப் பாடினார். புதுமைப் பெண் கல்வி பெற வேண்டும் என்றார் பாரதி "கல்வியில்லாத பெண்கள் களர்நிலம்" என்றார் தாசன் "கெட்ட போரிடும் உலகை வேரொடு சாய்த்து" ஒப்பில்லாச் சமுதாயம் படைப்போம் என்றும் அதில் கல்வியெலாம் படைத்து அனைவரையும் கற்குமாறு செய்வோம் என்றும் பாடினார் பாரதிதாசன்.

### நன்றியுணர்வு:

பாரதியை இனங்கண்டு கொண்டது முதல் இறுதி வரை அன்பும் நன்றியும் பாராட்டினார் பாரதிதாசன். தம் பதினெட்டாவது வயதில் இருபத்தேழு வயதான பாரதியைச் சந்தித்துப் பத்தாண்டுகள் உறவு கொண்டார். தொடக்க நிலையில் எந்த மதிப்பை ஏற்படுத்திக் கொண்டாரோ அதே மதிப்பை இறுதி வரை அளித்தார். பாரதியை "அய்யர்" என்றே எப்போதும் கூறி வந்தார். பாரதியைத்தான் முதன்மையாகக் கருதினார். பின்னாளில் தாம் சார்ந்த இயக்கத்தினை இரண்டாவதாகவே கருதினார். பாரதியைக் குறைத்து மதிப்பிட எவருக்கும் இடம் கொடுத்தாரல்லர்.

**'என்னென்று சொல்வேன் என்னென்று**
**சொல்வேன்**
**தமிழால், பாரதி தகுதி பெற்றதும்**
**தமிழ், பாரதியால் தகுதி பெற்றதும்'**

எவ்வாறு என்பதை இறுதி வரை எடுத்துரைத்துப் போற்றினார்.

பாரதியால் இவர் தகுதி பெற்றதும், பாரதி இவரால் தகுதி பெற்றதும் வரலாறு காட்டும் உண்மையேயாகும்.

நன்றி மறவாத பண்பு பாரதிதாசனை அவருடைய தமிழ்ப்பற்றை விஞ்சுமளவுக்கு உயர்த்தியது எனில் புகழ்ச்சியில்லை உண்மையேயாம்.

"மண் பயனுற வேண்டும்; வானகம் தென்பட வேண்டும்" என்று விரும்பிய பாரதி "மண்ணில் தெரியுது வானம் அதுதம் வசப்படலாகாதோ" என வினவினார். அவருக்கு நன்றிபாராட்டும் பாவேந்தர் அவ்வினாவுக்கு விடையாக இன்றைய மானிட சக்தியின் ஆற்றலைச் சுட்டிக் காட்டி, எதிர் வரும் நம்பிக்கையைப் பாரதிக்கும் மக்களுக்கும் ஒருசேர ஊட்டுகின்றார்.

**"மானிடம் என்றொரு வாளும்-அதை**
**வசத்தில் அடைத்திட்ட உன்இரு தோளும்**
**வானும் வசப்பட வைக்கும்-இதில்**
**வைத்திடும் நம்பிக்கை, வாழ்வைப்**
**பெருக்கும்"**

பாரதிதாசனின் வாழ்க்கை முறையையும், பாரதியைப் போற்றிய பாங்கையும், பயன் தரும் நம்பிக்கையையும் நாமும் கொண்டால் அவை நம் வாழ்வைப் பெருக்கும்; வளம் சிறக்கும்.

---

(1) பாரதிதாசன் கவிதைகள் இரண்டாம் தொகுதி ப. 72
(2) புலவர் ந இராமநாதனின் 'கவிஞரும் காதலும்' என்ற நூலின் வாழ்த்துரையில் பாரதிதாசன்.
(3) குயில் இதழ் (பாரதிதாசன்), 20-9-1959.
(4) இருண்ட வீடு ப. 7
(5) பாரதிதாசன் கவிதைகள் இரண்டாம் தொகுதி ப. 113.
(5) பாண்டியன் பரிசு முன்னுரை
(6) பாரதிதாசன் கவிதைகள் 111 ப.25.
(3) பாரதிதாசன் பேசுகிறார்—ப.24
(9) க. கைலாசபதி, ஒப்பியல் இலக்கியம் —ப.255

# அரிசனங்கள் என்ற பெயரை மாற்றலாம்

வெ. பெருமாள்சாமி

நம் மக்களிலேயே ஒரு பிரிவினர் அரிசனங்கள் எனப்படுகின்றனர். அரசு அவர்களைத் தற்போது 'ஆதி திராவிடர்' எனக் குறிப்பிடுகிறது என்றாலும் அது அம்மக்களில் ஒரு பிரிவினரைக் குறிக்கும் பெயரே ஆகும். தமிழக சமூக அமைப்பின் தொன்மையை எண்ணியும் அரிசனங்கள் என்ற கூட்டுச் சொல் ஒரு வடமொழிச் சிதைவாக நம்மிடையே எஞ்சியிருப்பதைக் கருதியும் அவர்களை ஒரு தமிழ்ப் பெயரால் சுட்டி வழங்குவது குறித்து சமூக இயலாளரும் தமிழியலாளரும் ஆய்ந்து தெளிய வேண்டுதல் தேவையானதாகும். அவ்வகையில் இக்கட்டுரை ஓர் எளிய முயற்சி.

## வழங்கப்படும் சொல்லில் வழு

அரிசனங்கள் என்ற சொல்லை அண்ணல் காந்தி அடிகளே உருவாக்கி வழக்கிலும் கொண்டுவந்தார் என்ப. ஆயின், இச்சொல்லாக்கம் வழுவின்றமைந்த ஒன்றா எனக் காணல் வேண்டும். நால்வருண அடிப்படை வேருன்றி இருந்த அமைப்பில் நாலாமவரினும் கீழாகப் பஞ்சமர் என்பதாக ஒரு மக்கட்பிரிவு பல்வேறு உள்சாதிப் பிரிவுகளுடன் தீண்டத்தகாதவர்களாகத் தாழ்த்தப்பட்டு வைக்கப்பட்டிருந்தது. இவர்களின் அத்தாழ்நிலையை மாற்றிக் காட்டல் வேண்டும் என்ற விருப்பிலேயே இவர்களை 'அரிசனங்கள்' என்றார் அண்ணல். இக்கூட்டுச் சொல்லில் 'சனங்கள்' என்ற பெயருக்கு அடையாக அதன் தன்மையைச் சிறப்பிக்கும் பண்புப் பொருளில் 'அரி' என்ற சொல் வழங்கப்படுகிறது. அவ்வாறாயின் அரி என்னும் இந்த அடைமொழி பிறரினின்றும் இவர்களை வேறு பிரித்துக் காட்ட வல்லதாதல் வேண்டும். செந்தாமரை என்ற சொல் வெண்டாமரை என்ற பிரிது ஒன்றினின்று ஒன்றனை வேறுபிரித்துக் காட்டினாற் போல. ஆயின், இதற்கு அவ்வாற்றல் இல்லை. புதின எழுத்தாளர் திரு த. ஜெயகாந்தன் என்பார் தன் கதை* ஒன்றில் ''இவர்கள் மட்டும் அரிசனங்கள்...மற்றவரெல்லாம் சிவசனங்களோ?'' என்ற வினாவை எழுப்பியுள்ளதும் ஈண்டு கருதத்தக்கது. எனவே, இனம் பிரித்துச் சுட்டுதல் கருதாத விடத்து பண்பு குறிக்கும் அடைமொழியிட்டு வழங்குதல் முறையன்று, அரி என்ற சொல்லால் அடிகள்தம் வழிபடு கடவுளைக் குறித்தாரேனும் கடவுளின் மக்கள் என்ற கருத்திலேயே இப்பெயரிட்டார் எனக் கொள்ளலும் சாலும். அவ்வாறாயினும் இவர்கள் இறை மக்களாயின் பிறர் இறை மக்கள் அல்லராகி இச்சொல் பிழையுற்றுக் கிடத்தலையே மீண்டும் புலப்படுத்தும். இக்காரணம் பற்றியே,

> ''இனச்சுட்டில்லாப் பண்புகொள் பெயர்க்கொடை
> வழக்காறல்ல செய்யுளாறே''
> (தொல், சொல். 18)

என வழுக்களைந்தார் ஆசிரியர் தொல்காப்பியரும். ஆக இச்சொல்லாட்சி தவிர்த்தல் நன்றாம்.

## சொல் இல்லெனின் என்?

இனி, இவர்களைச் சுட்ட ஒரு பொதுச் சொல்லின்றி அமையாதோ எனின் இம்மக்கள் தம்முள் பல்வேறு சாதிப்பிரிவு பட்டு நாட்டின் பல பகுதிகளிலும் அவ்வப்பகுதி மேனிலை மக்களால் தாழ்த்தி வைக்கப்பட்டிருந்தமையின் அவர்களை மேம்படுத்தி அவர்களின் நலம் பேணும் சமூகத்துக்கும் அரசுக்கும் அவர்களைக் குறிப்பிட்டு வழங்க ஒரு கலைச்சொல் இன்றியமையாததாம் என்க. அச்சொல்லும் அவர்களது தாழ்வைச் சுட்டி எள்ளல் இரங்கல் ஆகிய குறிப்பு பெறாததாய் அமையின் மிக நன்றாம்.

## யாவர் இவர்?

இன்றுள்ள தமிழக மக்களினத்தாரிடையே தொன்று தொட்டு வந்த குடியினராக இம்மக்கள் இருத்தல் கூடும் என்ற கருத்தை வரலாற்றாசிரியரும் மாந்த இனவியலாளரும் ஒப்பு

வர். அரசியல் முதலிய காரணங்களால் வேற்று நாகரிகம் விரவிய காலத்தில் பெரிதும் இனக் கலப்புறாத மக்களாக இவர்கள் இருந்திருத்தல் கூடும். அஃது அன்னதாதல் இவர்களது சமூகப் பழக்க வழக்கங்களாலும் வழிபாட்டு முறைகளாலும் அறியலாம். ஈண்டு உரைக்கின் பெருகும். அன்றியும், இவர்களது குலப் பெயர்கள் பல அவற்றின் தொன்மையைச் சுட்டுவனவாக அமைந்துள்ளன. தமிழ்நாடு தாழ்த்தப்பட்டோர் (Scheduled Caste) பட்டியல் எழுபதுக்கும் மேற்பட்ட வகுப்பினரை உடையதாக உள்ளது. அவற்றுள் ஆதி ஆந்திரா, ஆதி திராவிட, ஆதி கர்நாடகா என்ற பெயர்கள் இவர்களின் பழமையை அறிவிப்பன. 'திருவள்ளுவர்' ஒரு சாதிப் பெயராக இப்பட்டியலில் இருத்தல் காண வியப்புறுகிறோம். கூத்தன், பாணன் என்ற சங்க காலத்து இசை மக்களின் குலப் பெயர்களையும், முருகு மெய்ந்நிறீஇ வெறியாடும் 'வேலனை'யும் இப்பட்டியலில் கண்டு இம்மண்ணில் நிலைத்திருக்கும் மரபினர் இவர்களே என உணரலாம். குறிஞ்சி நில மக்களான குறவன், வேட்டுவன்* நெய்தல் நில மக்களான பரதர், மருத நிலத்துக்குரியவனான கடையன் யாவரும் இன்றைய தாழ்த்தப்பட்ட மக்களே. வினை (தொழில்) அடிப்படையிலான பறையன், கணக்கன் என்பவையும் சில சாதிப்பிரிவுகள். இவ்வாறு நால்வகை நிலத்திலும் மருவி வழங்கும் மக்கட் பெயர்களை

> "பெயரும் வினையும் என்று ஆயிரு வகைய
> திணைதொறும் மரீஇய திணைநிலைப் பெயரே"
>
> (தொல். பொருள். 20)

என்று குறிப்பிட்டார் தொல்காப்பியர் இந்நூற்பாவுக்கு உரை வகுத்த நச்சினார்க்கினியர் இடும் குலப்பெயர்ப் பட்டியலின் கண் மேற்சொன்ன வகுப்புப் பெயர்கள் பல இருக்கக் காணலாம்.

## பொருந்தும் பெயர்

எனவே மரபு இடையறாது தங்கள் குலப் பெயர்களைக் காத்தும், வேற்றினக் கலப்புறாது தனித்தன்மை போற்றியும், அக்காரணம் பற்றியே தாழ்த்திவைக்கப்பட்டும் வாழ்ந்து வரும் இத்தொன்முறை மக்களைத் தொல்காப்பியம் காட்டும் அடிப்படையிலேயே பெயரிட்டு வழங்கலாம். 'திணைநிலை மக்கள்' என்றோ 'திணைமக்கள்' என்றோ 'நிலைமக்கள்' என்றோ ஒரு பெயரிடல் பொருந்தக் கூடும். இவற்றுள்ளும் திணை என்ற சொல் பல பொருள் குறிப்பதானும், வழக்கின்கண் பயிலாமையானும், திணை ஒழுக்கப் பாகுபாடுகள் இக்காலத்துச் செய்யுளுள்ளும் மேற்கொள்ளப் படாமையானும் அதனை நீக்கி நிலை மக்கள் என்றபெயரால் இவர்களை வழங்குவது சாலப் பொருந்தும். இவ்வாறே, தமிழ்நாட்டில் பல்வேறு மலைப்பகுதிகளில் வாழும் முப்பதுக்கும் மேற்பட்ட சாதிப்பெயர்களை உடைய மலைச் சாதியினரை (Scheduled tribes) 'மலைமக்கள்' என வழங்கலாம். இவ்விரு பிரிவினரின் நலம் காப்பதற்காக உள்ள அரசுத்துறையை நிலை மக்கள் மற்றும் மலைமக்கள் நலத்துறை என்ற பெயரால் வழங்கலாம்.

## தொடர்புடைய எண்ணங்கள்

இனி நிலைமக்களும் மலை மக்களும் அல்லாது தமிழைத் தாய்மொழியாகக்கொண்டுள்ள பிறர் அனைவரையும் சாதிப்பாகுபாடுகள் இல்லாமல் 'நிலமக்கள்' என்றும், தமிழகத்தில் பிற மொழிகளைத் தாய்மொழிகளாகக் கொண்டு வாழ்வோரைத் 'திசை மக்கள்' என்றும், அவ்வாறே வடமொழியைத் தாய்மொழியாகக் கொண்டு ஈண்டுறையும் மக்களை 'வடமக்கள்' என்றும் பெயரிட்டு அழைக்கலாம் என்ற எண்ணங்கள் கிளைத்தெழுவது இயல்பே. இப்பாகுபாடு சாதியடிப்படையில் இல்லாமல் மொழிப் பின்னணியில் சொல்விலக்கண அடிப்படையில் அமைவது கருதற்பாலது.

இதுகாறும் 'அரிசனங்கள்' என்ற வடசொல்லில் உள்ள பிழைநிலையால் அச்சொல்லுக்கு மாற்றாக 'நிலைமக்கள்' என்னும் தொன்மைப் பெயரை வழங்கலாம் என்று கண்டோம். அது தொடர்பாக எழுந்த பிற பாகுபாடுகள் பற்றிய எண்ணங்களையும் குறிப்பிட்டோம். இத்துறையில் தொடர்ந்து ஆய்வுகள் நிகழ்த்த இவ்வெண்ணங்கள் பயனுறுமாக.

குறிப்பு, பாவேந்தரின் சாதி ஒழிப்புக் கொள்கைக்கு ஏற்புடையதால், இங்கு வெளியிடப்படுகிறது.

* 'ஜய ஜய சங்கர-I'-மோதி பிரசுரம், சென்னை-17.

* "ஆயர் வேட்டுவர் ஆடூஉத் திணைப் பெயர்..."தொல் பொருள் 21 என்ற நூற்பாவால் இம்மரபினரின் தொன்மை தொல்காப்பியக் காலத்துக்கும் முற்பட்டு விளங்கக் காண்க.

# தமிழருக்குத் தமிழ்ப் புத்தாண்டு எது?

**வ. வேம்பையன்**

தமிழ் மொழிக்கு, தமிழ் மக்களுக்கு, தமிழ் கூறும் நல்லுலகுக்குப் பொதுவான தொடர் ஆண்டால் காலத்தைக் கணக்கிடல் வேண்டும் என்ற கருத்து அரசர்களிடம் இல்லை என்று தோன்றுகிறது. தமிழ்ப் புலவர்கள், அறிஞர்கள், சான்றோர்கள் அதன் இன்றியமையாமையை அரசர்களுக்கோ மக்களுக்கோ எடுத்துக் கூறியாதாகச் சான்றுகள் கிடைக்கவில்லை.

இந்தச் சூழ்நிலையையும் தமிழர்களிடையே மண்டிக்கிடந்த கடவுள் மதச் செல்வாக்கையும் அரசர்களிடம் பெற்றுள்ள நெருக்கத்தையும் பயன்படுத்திப் 'பிரபவ' முதல் 'அட்சய' வரை உள்ள 60 ஆண்டு முறையைப் புகுத்திவிட்டது ஆரியம்.

அறுபது ஆண்டுகளின் பெயர்களில் ஒன்று கூடத் தமிழ் இல்லை. 60 ஆண்டுகள் பற்சக்கர முறையில் இருப்பதால், 60 ஆண்டுகளுக்கு மேற்பட்ட காலத்தைக் கணக்கிடுவதற்கு உதவியாகவும் இல்லை. அதற்கு வழங்கும் கதையோ ஆபாசமாகவே இருக்கிறது. அந்தக் கதை வருமாறு:

"ஒரு முறை நாரத முனிவர் கிருஷ்ண மூர்த்தியை நீர் அறுபதினாயிரம் கோபிகைகளுடன் கூடியிருக்கிறீரே, எனக்கு ஒரு கன்னிகை தரலாகாதா என்று கேட்க, அதற்குக் கண்ணன் 'நான் இல்லாப் பெண்ணை வரிக்க' என்றான். இதற்கு நாரதர் உடன்பட்டு அறுபதினாயிரம் வீடுகளிலும் பார்த்தார். எங்கும் அவர் இல்லாத பெண்களைக் காண முடியாததால் நாரதர் கண்ணனிடமே வந்து அவர் திருமேனியில் மையல் கொண்டு அவரை நோக்கி 'நான் தேவரிடம் பெண்ணாய் இருந்து ரமிக்க எண்ணம் கொண்டேன்' என்றார். கண்ணன் நாரதரை யமுனையில் ஸ்தானம் செய்ய ஏவ, நாரதர் அவ்வாறே செய்து ஓர் அழகுள்ள பெண்ணாக மாறினார். இவருடன் கண்ணன் 60 வருடம் கிரீடித்து அறுபது குமாரரைப் பெற்றார். அவர்கள் 'பிரபவ' முதல் 'அட்சய' இறுதியானவர்களாம். இவர்கள் வருஷமாம் பதம் பெற்றனர்.'

அபிதான சிந்தாமணி/பக்கம்1392

இந்த இழிவை எண்ணிக் கொதிப்படைந்த தந்தை பெரியார் "தமிழனுக்குக் காலம் கிடையாது. ஒன்று பார்ப்பானுடையது அல்லது ஆங்கிலேயனுடையது தான் ஆண்டாகப் பயன்படுகிறது" என்று கூறுவதைத் தமிழர்கள் கருத்தில் கொள்ள வேண்டும்.

இயேசு கிறித்துவை வைத்துக் கிறிஸ்தவர்களுக்குத் தொடர் ஆண்டு உண்டு. முகமது நபியை முதலாகக் கொண்டு முசுலீம்களுக்குத் தொடர் ஆண்டு உண்டு. சாலிவாகனனை வைத்து வடமொழியாளர்களுக்குத் தொடர் ஆண்டு இருக்கிறது. புத்தர்களுக்குத் தொடர் ஆண்டு புத்தர் பெருமானை வைத்துப் போற்றப்படுகிறது. சமணர்கள் மகாவீரரை வைத்துத் தொடர் ஆண்டு பின்பற்றுகிறார்கள். மலையாளிகள் கொல்லம் தொடர் ஆண்டைக் கடைப்பிடிக்கிறார்கள். வங்காளிகளுக்கு பார்சிகளுக்கு, யூதர்களுக்கு, சௌராட்டிரர்களுக்கு ஒவ்வொரு தொடர் ஆண்டு உண்டு.

ஆனால், ஒரு மொழி வைத்து உலகாண்ட தமிழனுக்கு, உலக முதல் மொழியாகிய தமிழைத் தாய் மொழியாகக் கொண்ட தமிழனுக்குத் தமிழ் மொழி, தமிழ் மக்கள், தமிழ் நாடு ஆகியவற்றிற்குப் பொதுவான ஒருவர் பெயரில் தொடர் ஆண்டு இல்லையே!

இவற்றை எல்லாம் நன்கு உணர்ந்த தமிழ் அறிஞர்கள், சான்றோர்கள், புலவர்கள் 1921 ஆம் ஆண்டு சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் கூடி ஆராய்ந்தார்கள். திருவள்ளுவர் இயேசு கிறித்துப் பிறப்பதற்கு 31 ஆண்டுகள் முன்பு பிறந்தவர் என்றும் அவர் பெயரில்

தொடர் ஆண்டு பின்பற்றுவது என்றும் அதையே தமிழ் ஆண்டு எனக்கொள்வது என்றும் முடிவு செய்தார்கள்.

இந்த முடிவு செய்தவர்களில் தலையான தமிழ் அறிஞர்கள் தமிழ்க்கடல் மறைமலை அடிகள், தமிழ்த் தென்றல் திரு. வி. க. தமிழ்க் காவலர் சுப்பிரமணிய பிள்ளை, சைவப் பாரதியார் சச்சிதானந்தம் பிள்ளை, நாவலர் ந. மு. வேங்கடசாமி நாட்டார், நாவலர் சோமசுந்தர பாரதியார், முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம் ஆகியோர் ஆவார்கள்.

''பத்தன்று; நூறன்று; பன்னூறன்று;
பல்லாயி ரத்தாண்டாய்த் தமிழர் வாழ்வில்
புத்தாண்டு தைம் முதல்நாள்; பொங்கல்
நன்னாள்''

என்னும் புரட்சிக் கவிஞர் பாடல் கருத்தும் தமிழருக்குத் தமிழ்ப் புத்தாண்டு தொடக்கம் தை முதல்நாள் என்பதை நன்கு தெளிவு படுத்துகிறது.

தை முதல் நாள் தமிழ்ப் புத்தாண்டுத் தொடக்கம். அன்று பெரும் பொங்கல். பொங்கல் நாளன்று புத்தாண்டு தொடங்குவதால் பொங்கல் புத்தாண்டு என்று போற்றிப் பின்பற்றப்படுகிறது.

தமிழ் ஆண்டாகிய திருவள்ளுவர் ஆண்டு முறை என்பது தை மாதத்தை முதல் மாதமாகவும் மார்கழியை இறுதி மாதமாகவும் வழக்கில் உள்ள கிழமைகளையும் கொண்டது. புத்தாண்டுத் தொடக்கம் தை முதல் நாள்.

திருவள்ளுவர் காலம் கி.மு.31. எனவே, திருவள்ளுவர் ஆண்டு கண்டுபிடிக்க ஆங்கில ஆண்டுடன் 31ஐக் கூட்டல் வேண்டும். 1992+31=2023.

தமிழ்நாடு அரசு திருவள்ளுவர் ஆண்டு முறையை ஏற்று 1971 முதல் தமிழ்நாடு அரசு நாட்குறிப்பிலும் 1972 முதல் தமிழ்நாடு அரசிதழிலும் 1981 முதல் தமிழ்நாடு அரசின் அனைத்து அலுவல்களிலும் பின்பற்றி வருகிறது.

உலகில் உள்ள நாடுகள் 269 உலக நாடுகள் மன்றத்தில் (U.N.O.) சேர்ந்துள்ள நாடுகள் 175. தமிழ் இன மக்கள் வாழ்கின்ற நாடுகள் 72. இவர்களின் தொகை ஏறத்தாழப் பதின்மூன்று கோடி.

72 நாடுகளில் வாழ்கின்ற தமிழர்கள் அனைவரும் பொங்கல் இடும் தை முதல் நாளையே தமிழ்ப் புத்தாண்டு நாள் என்று பின்பற்றுகின்றனர்.

தமிழ் நாட்டில் தமிழ் இனத் தலைவர்கள் தமிழ் அறிஞர்கள், தமிழ்ச்சான்றோர்கள் தமிழ்ப்புலவர்கள் முதலிய அனைவரும் தமிழ்ப் புத்தாண்டுத் தொடக்கம் தை முதல் நாள் என்று ஏற்றுப் போற்றி வருகிறார்கள்.

புலவர்கள், அறிஞர்கள், முனைவர்கள், சான்றோர்கள் என்று 49 பெருமக்களைக் கொண்டு முத்தமிழ்க்காவலர் கி.ஆ.பெ. விசுவநாதம் அவர்கள் அமைத்துள்ள தமிழகப்புலவர் குழுவும் தைமுதல் நாளே தமிழ்ப் புத்தாண்டுத் தொடக்கம் என்று முடிவு செய்து வழக்கில் கைக் கொள்ளுமாறு தமிழ் மக்களுக்கு வேண்டுகோள் விடுத்துள்ளது.

தமிழ் மலையாம் மறைமலை அடிகள் நிறுவிய தனித்தமிழ் இயக்கத்தினரும் தைமுதல் நாள் தான் தமிழ்ப்புத்தாண்டுத் தொடக்கம் என்று நடைமுறைப்படுத்தி வருகிறார்கள்.

மொழி ஞாயிறு தேவநேயப்பாவாணர் அமைத்துள்ள உலகத் தமிழ்க் கழகத்தினரும் தமிழ்ப் புத்தாண்டுத் தொடக்கம் தை முதல் நாள் என்றே பின் பற்றியும் பரப்பியும் வருகிறார்கள்.

தமிழ் நாள், கிழமை, மாதம், காலாண்டு, அரையாண்டு, ஆண்டு இதழ்கள், நிவைமலர்கள் தமிழ் ஆண்டாகிய திருவள்ளுவர் ஆண்டை வெளியிட்டும் தைமுதல் நாளே தமிழ்ப் புத்தாண்டு என்று கைக் கொண்டும் பரப்பியும் வருகின்றன.

''ஒரு நாட்டில் ஒரு முறையைப் பெருவாரியான மக்கள் கைக்கொள்வார்களானால் அதனைச் சட்ட சம்மதமாக்க வேண்டியது அரசின் கடமையாகும்'' என்று உலகில் 72 நாடுகளில் வாழ்கின்ற 13 கோடி தமிழ் மக்களின் இதயத்தை ஆள்கின்ற மாமன்னன் நம் அண்ணா கூறியுள்ளார்.

எனவே, புத்தாண்டு தைம் முதல் நாள் என்று புகன்ற புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் நூற்றாண்டுவிழா நிறைவு ஆண்டில் அவர் நினைவாகப் பொங்கல் நாளான தைமுதல் நாளே தமிழ்ப் புத்தாண்டுத் தொடக்கம் என்று தமிழ்நாடு அரசு ஏற்று ஆணை பிறப்பிக்க அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

இந்தப் பண்பாட்டுப் புரட்சி தமிழ்நாடு அரசின் முதல் அமைச்சரால் நடைபெறல் வேண்டும் என்பது தமிழ், தமிழர், தமிழ்நாடு ஆகியவற்றின் நலனும் வளனும் நாடுவோர்களின் நெஞ்சவிழைவும் வேண்டுகோளுமாகும்.




## பதிப்புச் செம்மல் பதிப்பித்த பாரதிதாசன் நூல்கள்

பாரதிதாசன் கவிதைகள்

குடும்ப விளக்கு

பாண்டியன் பரிசு

அழகின் சிரிப்பு

தமிழியக்கம்

எதிர்பாராத முத்தம்

இளைஞர் இலக்கியம்

இருண்ட வீடு

இசையமுது

சேரதாண்டவம்

தமிழச்சியின் கத்தி

அமைதி

நல்லதீர்ப்பு

தேனருவி

காதல் நினைவுகள்

பாரதிதாசன் நாடகங்கள்

பிசிராந்தையார்

குறிஞ்சித்திட்டு

பெருமக்கள்

முல்லைக்காடு

கண்ணகி புரட்சிக் காப்பியம்

மணிமேகலை வெண்பா

Wrapper Printed at Ganesh Printing, Ms-1. Ph : 561039